ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ ராமாயண ஸாரம்


ந்யாய வேதாந்த வித்வான்

காரப்பங்காடு வேங்கடாசாரியார்

ஸ்வாமி


எழுதிய

ஆராய்ச்சிக் கட்டுரை

1984


கோதா நிலையம் வெளியீடு

10, தியாகராஜபுரம் காலனி, மயிலை, சென்னை - 4.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முகவுரை

காரப்பங்காட்டில் தோன்றி சென்னை மற்றும் நாட்டின் பல பகுதிகளிலும் பல்லாயிரக்கணக்கான உபன்யாஸங்களை நிகழ்த்திப் பெயர் பெற்றவர் ஸ்ரீ உ. வே. வித்வான் வெங்கடாசாரியார் ஸ்வாமி. க்ரந்த காலக்ஷேபங்கள் மூலம் அனேக வித்யார்த்தங்களையும், பிரவசனகர்த்தாக்களையும் உலகுக்கு உபகரித்தவர்.

ஸ்ரீராமாயண உபன்யாஸத் தொடரை பார்த்தஸாரதி பக்த ஸபை சார்பில் திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் நிகழ்த்திய போது வெளியிடப் பெற்ற விழா மலரில் இந்நூல் இடம் பெற்றது.

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவசியம் "அறிய வேண்டிய ஆத்தங்கள்" என்று கூறப்பெறும் அர்த்த பஞ்சகத்தை உள்ளத்தில் கொண்டு ஸ்ரீராமாயணத்தை ஆராயும் ஓர் ஆய்வு நூலாக மீமாம்ஸா நியாயங்களின் உதவி கொண்டு இந்நூலை ஸ்வாமி இயற்றியுள்ளார்.

மிக்க இறைநிலை மெய்யாம் உயிர்நிலை தக்கநெறி தடையாகி தொக்கியிலும் ஊழ்வினை வாழ்வு, ஆகிய ஐந்து செம்பொருட்களும் தூய தமிழ் நடையில் எழுதப் பெற்றுள்ளது. தற்காலப் போக்கைக் கருத்தில் கொண்டு ஸ்வாமி கால்நூற்றுண்டிற்கு முன்னமேயே ஸம்ப்ரதாய மணிப்பிரவாள நடையை விட்டு தமிழ் மரபு நடையை மேற்கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கதாம்.

ஸ்ரீராமாயணம் ஸ்ரீவைஷ்ணவக் கருத்துக்களுக்கு ஊற்றுக் கண்ணுக விளங்கு வது போல் ஸ்ரீராமாயண ஸாரம் என்னும் இந்நூல் ஸ்ரீவைஷ்ணவ உபன்யாஸகர் களுக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளது எனலாம்.

மிகமிகக குறுகிய காலத்தில் இந்நூலை வெளியிடுவதற்கு முடிவு செய்தோம். ஒருமாத காலத்திற்குள் சிறப்பாக இந்நூலை அச்சிட்டு கொடுத்த அனங்தேஸ்வரா பிரிண்ட் பேக்ஸ், அதிபர் திரு. A. தயானந்த ராவ் அவர்களுக்கு எங்களது உளங் கனிந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

காரப்பங்காடு ஸம்ப்ரோக்ஷண வைபவத்தை ஒட்டி இப்போது வெளிவரும் ஸ்ரீராமாயண ஸாரம் என்னும் இந்நூலை ஸ்ரீவைஷ்ணவ உலகம் வரவேற்கும் என எண்ணுகிறோம்.

24 - 4 - '84

காரப்பங்காடு வெங்கடாசாரியார் குமாரர்

**K. V. சிங்கராசாரி**

# முன்னுரை

திருமகள் கொழுநனுன பரமபுருஷன், நம்முடைய நன்மையைத் திருவுள்ளம் பற்றி, திரு அயோத்தியில் திருவவதரித்து, பதினோராயிரம் ஸம்வத்ஸரம் இவ்வுலகில் எழுந்தருளியிருந்த சரிதம் நாம் நன்கு அறிந்ததேயாகும். அப்பரமபுருஷன் அங்ஙனம் இராமபிரானுகத் திருவவதாரம் செய்தருளினபோது, அவனை அறிவிக்கும் வேதமானது, வால்மீகி முனிவனிடமிருந்து இராமாயணமாய்த் திருவவதாரம் செய்ததாம். இக் கருத்தைக் கொண்டுள்ள,

"वेदवेद्ये परेपुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्रचेतसादासीत् साक्षाद्रामायणात्मना ॥"

*''வேத வேத்யே பரேபும்ஸி ஜாதே தசரதாத்மஜே ।*
*வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணுத்மநா ॥''*

என்னும் முதுமொழியை ஊன்றிக் காணுங்கால், 'இராமபிரானைப் போன்று, அவ் இராமபிரான் திவ்யசரிதமான இராமாயணமும் நமக்கு அன்புடன் ஆதரிக்கத் தக்க திவ்ய சாஸ்திரம்' என்பது நன்கு புலனுகும். "விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை இவ்வுலகில் நன்கு பரவச் செய்தவரும், பூர்வாசாரியருள் நடுநாயக மணிபோன்று விளங்குபவருமான எம்பெருமானுர், திருமலையில் ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளி யிருந்து, திருமலைநம்பிகள் ஸந்நிதியில் இராமாயண விசேஷார்த்தங்களை (இராமாயணத்தில் கூறப் பெற்றுள்ள சிறந்த பொருள்களைக்) கேட்டருளினுர்" என்பதே இவ் இராமாயணத்திற்குள்ள தனிச்சிறப்பை நன்கு தெரிவிக்கின்றதன்றே ?

"இவ்வாறு மிக்க சிறப்புள்ள இராமாயணத்தின் ஸாரப் பொருள், பரமாத்மா, ஜீவாத்மா, உபேயம், விரோதி, உபாயம் என ஐந்தாம்" என்பதை இந்த 'இராமாயண ஸாரம்' என்னும் நூல், மிக விரிவும், மிகச் சுருக்கமும் இன்றி 'விளக்கிக் காட்டி யிருக்கிறது. இந்நூலில் அமைந்துள்ள குணங்களைப் பூர்வாசாரியர்களுடையனவாகவும், குற்றங்களை அடியேனுடையதாகவும் கொண்டு பொறுத்து, ஆதரித்தருள வேணுமாய் மஹான்களுடைய ஸந்நிதியில் ஸவினயம் வேண்டிக் கொள்கிறேன்.

திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதி பக்த ஸமாஜத்தார், இந்நூலை எழுதி வெளி யிடுமாறு நியமித்து, இம்முகத்தால் அடியேனைத் தொண்டு கொண்டதற்கு அடியே னுடைய நன்றியை அன்புடன் அறிவித்துக் கொள்கிறேன்.

*மயிலாப்பூர்*
*12-12-57.*

வேங்கடாசாரியதாஸன்,
*(காரப்பங்காடு)*



உபய வேதாந்த வித்வான் காரப்பங்காடு
வெங்கடாசாரியார் ஸ்வாமி

# ஸ்ரீராமாயண ஸாரம்

## அவதாரிகை

திருமாலான பரம புருஷன், தனக்கே உரித்தான திருநாட்டில் திருமகள் மண்மகள் முதலிய தேவிமாரோடு வீற்றிருந்து, நித்யராலும் முக்தராலும் தொண்டு பூண்டொழுகப் பெற்றிருப்பவனும். இங்ஙனம் இருப்பினும், அப்பரம புருஷன் அத்திருநாட்டிலுள்ளாரைப் போன்று, இவ்வுலகிலுள்ளாரும் தன்னை அனுபவித்துப் பேரின்பக் கடலில் மூழ்கிப் பெருங் களிப்புற வேண்டியிருக்க, அங்ஙனமின்றி, மாயா சப்தப் பொருளான மூலப்ரக்ருதியில் அழுந்திக் கிடந்து, அறிவுற்றவராகயிருப்பினும், அறிவற்ற அசேதனப் பொருளோடு வாசியற இருத்தலைக் கண்டு இரக்கமுற்றனன். இவ்வாறு இரக்கமுற்ற எம்பெருமான், இவ்வுலகத்தாரைக் கரையேற்றத் திருவுள்ளம் பற்றி, தன்னை வணங்கி வழிபட்டு உய்வு பெறுமாறு இவர்க்குக் கண் கை கால் முதலிய உறுப்புக்களையும், இவ்வுறுப்புக்களோடு கூடிய உடலையும் தந்தருளினன்; நன்மை தீமைகளை அறிவிக்கும் ஞானக் கலைகளையும் நீர்மையினால் அருள் செய்தனன்.

இங்ஙனம் அருளப் பெற்றிருப்பினும், இச்சேதனர் அக்கலைகள் காட்டிய வழியைப் பின்பற்றாது அவ்வுறுப்புக்களையும் அவ்வுடல்களையும் கொண்டு, ஆற்றைக்கடக்கக் கொடுத்த புணையைக் கொண்டு அவ்வாற்றைக் கடவாது கடலிடைப் புகுவாரைப் போல், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் விஷயங்களில் உழல்வராயினர்.

இதைக் கண்ட எம்பெருமான், தன் கட்டளை செல்லாத நாட்டில் தானே சென்று, தன் வழி வருமாறு செய்யும் அரசன் போன்று, இவ்வுலகினில் எண்ணிறந்த அவதாரங்களைச் செய்தருளினான். இவ் வவதாரங்களுள், இராமாவதாரம் மிகமிகச் சிறந்ததாம்.

இவ்விராமபிரான், தன் உபதேச மொழிகளாலும், ஒழுக்கங்களாலும் இவ்வுலகத்தவர்க்கு உணர்த்தின நீதிகள் பல. அந்நீதிகளை, பின்னுளார்க்கும் உதவ வேண்டும் என்னும் எண்ணத்தினால் நான்முகனார், நூறு கோடி அளவினதான இராமாவதார சரிதத்தைச் செய்து, நாரதர் முதலான தேவஷிரிகளுக்கு உபதேசம் செய்தருளினார்; அந்த நாரதரையே இராமநாமத்தையே ஜபித்துப் போது போக்குபவனாகிய வால்மீகி முனிவனிடம் அனுப்பி, அவ்விராமபிரானுடைய சரிதத்தை அம்முனிவனுக்கு உபதேசம் செய்வித்து, தாமும் காட்சி அளித்து, இராம சரிதத்தை இயற்றுமாறு கட்டளையிட்டார். இங்ஙனம் அருள் பெற்ற அம்முனிவனும் ஸ்ரீராமாயணத்தைச் செய்தனன்.

## ஸ்ரீராமாயணச் சிறப்பு

பிள்ளைலோகாசார்யர், ஸ்ரீராமாயணத்தை 'இதிஹாஸ ச்ரேஷ்டம்' எனக்கொண்டாடி அருளிச்செய்திருக்கிறார். ஆனால், நாராயணனாகவே போற்றப்பெற்றவர் வ்யாஸர்; இராமபிரானிடம் சிறந்த பக்தி பெற்றிருப்பவர் வால்மீகி; அவரிடம் பிறந்தது பாரதம்; இவரிடம் பிறந்தது இராமசரிதம்; பாரதம் என்னும் இதிஹாஸத்தை அங்ஙனம் போற்றி அருளிச்செய்யாது, இராம சரிதத்தை 'இதிஹாஸ ச்ரேஷ்டம்' எனப்போற்றி அருளிச் செய்ததற்குக் காரணம் யாதோ? எனின், கூறுவாம்:

"नारायण कथामिमाम्" (நாராயண கதாமிமாம்) என்று தொடங்கி, வ்யாஸர், நாராயணனின் பரிபூர்ணாவதாரமாய்க், கொண்டாடப்பெறும் கண்ணபிரானுடைய சரிதத்தை, பாரதத்தில் ஒருவாறு வெளியிட்டிருப்பது உண்மையேயாம். ஆயினும்,

"यथा धर्मादयश्चार्थाः मुनिवर्यानुकीर्तिताः ।
न तथा वासुदेवस्य महिमा ह्यनुवर्णितः ।।"

யதா தர்மாதயச் சார்த்தா: முனிவர்யானுகீர்த்திதா: ।
ந ததா வாஸுதேவஸ்ய மஹிமாஹ்யனுவர்ணித: ॥

என்று நாரதர் (பாரதத்தைச் செய்து மன மகிழ்ச்சி சிறிதும் இன்றி இருக்கும்) வ்யாஸரை நோக்கிக் கூறுகின்றவாறு, அப்பாரதத்தில், அறம் பொருள் இன்பங்களும், அவற்றின் ஸாதனங்களும் கூறப்பெற்றிருக்கின்றன போன்று, கண்ணபிரானுடைய பெருமை கூறப்பட்டிலது.

மேலும், 'பூசல் பட்டோலை' என்று ப்ரஸித்தி ஏற்படுமாறு, யுத்த சரிதத்தையே பெரும்பாலும் வெளியிட நேர்ந்திருக்கிறது; நான்முகனுர் புத்திரரான நாரதர், கண்ணபிரானுடைய சரிதத்தை உபதேசம் செய்ய, பின்பு வ்யாஸர், ஸ்ரீபாகவதத்தைச் செய்ததாக அங்கு சரித்ரம், பாரதத்தைச் செய்திருந்தும், அகக் களிப்பற்றிருந்த வ்யாஸர், தம் துன்பம் தீருமாறு ஸ்ரீபாகவதத்தைச் செய்தார் என்பதற்கு அவர் திருவாக்கையே சான்றாகக் காண்க :

"असत्कीर्तनकान्तारपरिवर्तन पांसुलाम् ।
वाचं शौरिकथालाप गङ्गयैव पुनीमहे ।।"

அஸ்த்கீர்த்தனகாந்தாரபரிவர்த்தன பாம்ஸுலாம் ।
வாசம் சௌரிகதாலாப கங்கயைவ புனீமஹே ॥

"நாரதருக்குத் தந்தையாரான நான்முகனுர் பூஜிக்கப்பெறும் பெருமை வால்மீகி முனிவனுக்கு உண்டு, நான்முகனுர், வால்மீகி முனிவனுடைய ஆசிரமத்திற்கு வந்தார்; அம்முனிவனுடைய இராமபக்தியைக் கண்டு மனமகிழ்ச்சியுற்றுர்; அம்முனிவனுல், இவ்வுலகம் உய்வு பெற விரும்பினுர்; அம்முனிவனைப் பூஜிக்க விரும்பி, தம் முன்னே உள்ளதோர் ஆஸனத்தைக் காட்டி, அதில் அமரச் சொன்னுர். வால்மீகியும் அவ்வாறே அதில் அமர்ந்தார்'' என்னும் வால்மீகி முனிவன் பெருமையைக் கூறும் சரிதம் இங்கே காணத்தக்கது.

"वाल्मीकये महर्षये संदिदेशासनं ततः ।
ब्रह्मणा समनुज्ञातः सोप्युपाविशदासने ।।"

வால்மீகயே மஹர்ஷயே ஸந்திதேசாஸனம் தத: ।
ப்ரஹ்மணு ஸமநுஜ்ஞாத: ஸோப்யுபாவிசதாஸனே ॥

என்னும் வால்மீகியின் திருவாக்கும் இங்கே அனுபவிக்கத்தக்கது.

மேற்கூறிய சரித்ரங்களை உற்று நோக்குங்கால், 'அங்கு, பாரதத்தைச் செய்த வ்யாஸருக்கே மனமகிழ்ச்சி ஏற்படவில்லை' என்பதும், 'இங்கு, இராம சரிதத்தைச் செய்த வால்மீகி முனிவனுக்கு அங்ஙனம் குறை கூறுவதற்கு இல்லை' என்பதும் தெளிவாம்.

மேலும், 'வேதத்திஞல் அறியப்படும் பரம புருஷன், சக்ரவர்த்தித் திருமகனுய் அவதரித்தவாறே, அவ்வேதம், அப்பரமன் கல்யாண குணங்களையும், ஆச்சரியச் செயல்களையும் கூற வால்மீகி முனிவனிடம் ஸ்ரீராமாயணமாக (இராமசரிதமாக) அவதரித்தது' என்னும் கருத்தைக் கொண்டுள்ள,

"वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसादासीत् साक्षात्रामायणात्मना ।।"

வேத வேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே ।
வேத: ப்ராசேதஸா தாஸீத் ஸாக்ஷாத் ராமாயணுத்மநா ॥

என்னும் ஸ்காந்த வசனத்தை அனுபவிக்குங்கால், இவ்விராம சரிதத்தின் வேதத் தன்மையும் நன்கு புலனும்.

அன்றியும், ஆழ்வான் திருக்குமாரரான பட்டர், ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் श्रीमद्रामायणवन्महाभारतंशरणम् । (ஸ்ரீமத்ராமாயணவன் மஹாபாரதம் சரணம்) என்று அருளிச் செய்திருக்கிறுர். இவ் வாக்கியத்தில், பாரதப் பெருமையைக் கூறும்போது இராமாயணத்தை எடுத்துக் காட்டாகக் காட்டியிருப்பது காணத் தக்கதாம்.

இவ்வாறு சிறப்புற்றிருக்கும் இராமாயணத்தில் தேறிய ஸாரப்பொருள் பல உண்டு. எம்பெருமானர், திருமலையில் எழுந்தருளியிருந்து திருமலை நம்பியிடம் ஸ்ரீராமாயணம் கேட்டருளினர் என்பதே இதற்குத் தக்க சான்றும். (அடைய வேண்டிய) பரமாத்மா, (அடைகிற வனுகிய) ஜீவாத்மா, (பரமனை அடைவதன்) பலம், (அவனை) அடையவொட்டாது தடை செய்யும்) விரோதி, (அவனை அடைவதற்கான) உபாயம், என ஸாரப்பொருள் ஐந்து

"प्राप्यस्य ब्रह्मणोरूप प्राप्तुश्च प्रत्यगात्मनः ।
प्राप्त्युपायं फलं प्राप्तेः तथा प्राप्ति विरोधि च
वदन्ति सकला वेदाः सेतिहास पुराणकाः ।।"

ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணேரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந: ।
ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தே: ததா ப்ராப்தி விரோதிச
வதந்தி ஸகலா வேதா: ஸேதிஹாஸ புராணகா: ॥

என்னும் வசனம் இங்குக் காணத் தக்கது.

இவ்வசனத்தின் கருத்து — "இதிஹாஸம், புராணம் ஆகிய இவற்றோடு கூடிய வேதங்கள் மேற்கூறிய ஐந்து பொருளையும் கூறுகின்றன" என்பதாம்.

மேற்கூறிய ஐம்பொருளையும் வேறு வழியாக நாம் அறியலாகாதோ? இதிஹாஸத்தின் உதவியைக் கொண்டுதான் அறிதல் வேண்டுமோ? அவசியமானல், அவ்விதிஹாஸம் தான் எவ்வாறு இயம்புகின்றதோ? எனின், விரித்துக் கூறுவாம் :

கண் முதலிய வெளி இந்திரியங்களையும் மனமாகிய உள்ளிந்திரியத்தையும் ப்ரத்யக்ஷம் என்பர். இதனுல், பரமாத்மா முதலிய பொருளை அறிய இயலாது. இந்திரியத்தினுல் அறியப்பெறும் இரண்டு பொருள்களுள், ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் இருக்கும் நிலைமையைக் கொண்டு, ஒன்றைக் காணுத இடத்தும் கண்ட ஒன்றினுல் காணுத மற்றொன்றை அறிகைக்கு உறுப்பான யுக்தியை அனுமானம் என்று கூறுவர். புகையைக்கண்டு அப்புகையினுல் காணுத நெருப்பை ஊஹித்து அறிகிறோம் அல்லவா? இவ்வனுமானமும், மேற்கூறிய ஐம்பொருளையும் அறிதற்குப் பயன்படாது. ஒருவகைக் குற்றமும் இன்றி இருப்பதும், என்றும் உள்ளதுமான வேதத்தினுல் தான் அறியலாம். அவ்வேதமும், தெளிவாக எடுத்து உரைக்கும் வண்ணத்தில் அமைந்திலது, ஆதலின், இதிஹாஸத்தின் உதவி அவசியமாம். இவ்வுதவி அவசியம் என்னும் இவ்விஷயத்தை வால்மீகி முனிவன் பின் குறிக்கப்பெறும் ச்லோகத்தினுல் வெளியிட்டு இருக்கின்றனன்.

"स तु मेधाविनौ दृष्टवा वेदेषु परिनिष्ठितौ ।
वेदोपबृंहणार्थाय तावग्राहयत प्रभुः ।।"

ஸ து மேதாவிநௌ த்ருஷ்ட்வா வேதேஷு பரிநிஷ்டிதௌ: ।
வேதோபப்ரும்ஹணர்த்தாய தாவக்ராஹயத ப்ரபு: ॥

இதின் கருத்தைச் சிறிது விரித்துக் கூறுவாம்: "வால்மீகி முனிவன் நான்முகனுர் கட்டளையைப் பின்சென்று, இராமாயணத்தைச் செய்தபின், "இவ்விராம சரிதத்தைப் பாட வல்லவன் எவனே? யான் அறியேன்; எம்பெருமான்! நீயே அவனை எனக்கு அருள வேண்டும்" என்று அப்பரமனைச் சிந்தித்துக் கொண்டிருந்தனன். அக்காலத்தில் முனி வேஷம் பூண்ட குசலவர் அம்முனிவன் திருவடிகளைப் பணிந்து நின்றனர். அம்முனிவனே, மிகச் சிறந்த புத்தி பெற்றிருப்பவரும், ருக்வேதம் முதலிய நான்கு வேதங்களையும், மற்ற நூல்களையும் நன்கு ஓதி உணர்ந்தவருமான அக்குசலவர்களைக் கண்டு களித்து, வேதோபப்ரும்ஹணமாகிய இராம சரிதத்தை அவர்களுக்கு உபதேசம் செய்தனன்"

'வேதோப ப்ரும்ஹணம்' என்பதற்குக் கருத்து யாதோ? எனின், கூறுவாம்: எங்ஙனம் இருபத்து நாலாயிரம் ச்லோகங்கள் கொண்டுள்ள இராமாயணத்தில் சில பகுதிகளை மட்டும் கற்றுணர்ந்தோர்க்கு அந்த இராமாயணத்தின் கருத்து அறுதியிட இயலாதோ, அங்ஙனமே, பலகிளைகள் கொண்டுள்ள வேதத்தி

லும் சில கிளைகளை மட்டும் ஓதி உணர்ந்தோர்க்கு அந்த வேதத்தின் கருத்து அறுதியிட இயலாது. அறிவிலிகளான நாம் வேதம் முழுவதும் ஓதி உணர இயலாது. ஆதலின், மிக நெடுகின காலத்தில் பரமபுருஷனை வணங்கி வழிபட்டு உள்ளத் தூய்மை பெற்றிருக்கும் மஹான்களுக்கே அந்த வேதமும், அதின் உண்மைக் கருத்தும் நன்கு புலனாகும். அன்னரே, அந்த உண்மைக் கருத்தை உள்ளபடி அறுதியிட்டு, அக்கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கும் நூலை இயற்ற இயலும். "அன்னருள் வால்மீகி முனிவனும் ஒருவன்"; "அங்ஙனம் வேதக் கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கும் நூல்களுள், இராமாயணமும் ஒன்று" என்னில், இவை புகழுரையாமோ? ஆகாதன்றோ? இவற்றால், "வேதக் கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கும் நூல் உபப்ரும்ஹணம்" என்பது நன்கு விளங்குகின்றதன்றோ?

இங்கு, "वेदोपबृंहणार्थाय = वेदोपबृंहणरूप स्वग्रन्थपठनायेत्यर्थ:; उपबृंहणं नाम नानाशाखानुसारेण निर्णीतवेदार्थ प्रतिपादको ग्रन्थ:"

("வேதோபப்ரும்ஹணார்த்தாய—வேதோபப்ரும்ஹணரூப ஸ்வக்ரந்த படனாயேத்யர்த்த:; உபப்ருஹம்ணம் நாம நாநாசாகானுஸாரேண நிர்ணீத வேதார்த்த ப்ரதிபாதகோ க்ரந்த:) என்னும் கோவிந்த ராஜீய வ்யாக்யான வாக்கியங்களும், "उपबृंहण च श्रुतिप्रतिपन्नार्थ विशदीकरणम् (உபப்ரும்ஹணம் ச ச்ருதிப்ரதிபந்நார்த்த விசதீகரணம்) என்னும் எம்பெருமானாருடைய திருவாக்கும் அனுபவிக்கத் தக்கவை.

[பதப் பொருளைச் சொல்வது எதுவோ, அது உபப்ரும்ஹணம் என்று சிலர் கூறுவர். இங்ஙனம் கூறுவதற்கு ஆதாரத்தைக் காணப்பெற்றிலோம். மேற்கூறிய ஆதாரங்களுள் அமைந்துள்ள "நிர்ணீதார்த்த ப்ரதிபாதகோ க்ரந்த:" ச்ருதிப்ரதிபந்நார்த்த விசதீகரணம்" என்னும் வாக்கியங்களைக் காண்க.]

இனி, வேதத்தில் கூறப்பட்டுள்ள பரமாத்மா முதலிய ஐம்பொருளையும் இராமாயணத்தில் காண்போம்.

## வேதாந்தமும் பரமாத்மாவும்

வேதம், பரமாத்மாவை எங்ஙனம் கூறுகின்றது? என்னில், சிறிது விவரித்துச் செப்புவாம்: வ்யாஸர், உபநிஷத்துக்களில் அமைந்துள்ள காரண வாக்கியங்களினால் பரமபுருஷனை நன்கு உணரலாம் என்கிறார்.

கண் முதலிய வெளியிந்திரியங்களால் காணப் பெறும் இப்பிரபஞ்சத்திற்கு எது காரணமோ, அப்பொருளே 'பரமாத்மா' எனப்படும். "यतो वा इमानि भूतानि जायन्ते" तत्ब्रह्म "(யதோவா இமானி பூதானி ஜாயந்தே தத்ப்ரஹ்ம) என்னும் வாக்கியத்தைக் காண்க.

**சங்கை :** ஆனால், உபநிஷத்துக்களில் காரண வாக்கியங்கள் பல உண்டு. அவற்றுள் ஒரு வாக்கியம் போன்று, மற்றொரு வாக்கியம் காரணப் பொருளைக் குறிக்காமல் முரண்பாடு தோன்றக் கூறியிருத்தலை நாம் காணலாம். எடுத்துக்காட்டாக "हिरण्यगर्भस्समवर्तताग्रे" (ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த்ததாக்ரே) "न सत् न चा सत् शिवएव केवल:" நஸத் நசாஸத் சிவ ஏவ கேவல:) "एकोहवै नारायण आसीत्" (ஏகோ ஹவை நாராயண ஆஸீத்) என்னும் வாக்கியங்களை எடுத்து நோக்கினால், ஒரு பொருள் காரணப் பொருளாகக் கூறப் பெற்றிராமல் அந்த அந்த வாக்கியத்தில் வெவ்வேறு பொருள் (பிரமனும், சிவனும் நாராயணனும்) காரணப் பொருளாக முரண்பாடு தோன்றுமாறு குறிக்கப் பெற்றிருப்பது புலப்படுகின்றதன்றோ! இங்ஙனம் இருக்க, ஒன்றே காரணப் பொருள்; அப்பொருள் நாராயணனே என்பதை நாம் அறுதியிடுவது யாங்ஙனம்? என்னும் ஐயம் இங்கு உண்டாகலாம்.

வேத வாக்கியங்களைக்கொண்டு பரமனை அறியுங்கால், இவ்வாறான க்லேசம் உண்டாவது உண்மையே. இங்ஙனம் க்லேசம் பெற்றிருப்போர்க்கு மனத்தெளிவுக்கு இடம் இல்லை. 'வேதம் தெளிவாக எடுத்து உரைக்கும் வண்ணத்தில் அமைந்திலது' என்று நாம் முன்னமே கூறியிருந்தோமே அஃது. இப்போது எண்ணத் தகுந்தது. இக்லேசம் தீருவதற்கு வ்யாஸர் செய்த மீமாம்ஸா சாஸ்திரம் ஒரு வழியினால் உதவி புரிகின்றது. வால்மீகி முனிவன் இயற்றிய இராமாயணமோ, வேறொரு வழியினால் உதவி செய்கின்றது. இவற்றுள் மீமாம்ஸா சாஸ்திரம் செய்யும் உதவியை முதலில் சுருக்கமாகக் காண்போம் :

மீமாம்ஸா சாஸ்திரமாவது — வேத ஆராய்ச்சி செய்யும் நூலாகும். இவ்வாராய்ச்சி முறையை, மேற்கூறிய உபநிஷத் வாக்கியங்களில் பின்வருமாறு நாம் அறியலாம் :

''ஹிரண்ய கர்ப்ப :'' என்னும் முதல் வாக்கியம், 'எல்லாம் அழிந்த காலத்து, பிரமன் இருந்தான்' என்னும் கருத்தையும், ''நஸத் நசாஸத்'' என்னும் இரண்டாம் வாக்கியம், 'ஸத்தும் அஸத்தும் அக்காலத்தில் இல்லை ; சிவன் இருந்தான்'' என்னும் கருத்தையும் ''ஏகோ ஹவை நாராயண:'' என்னும் மூன்றாம் வாக்கியம், 'அச்சமயத்தில் நாராயணன் இருந்தான்' என்னும் கருத்தையும் கொண்டுள்ளன. ஆனால், முதல் இரண்டு வாக்கியங்களில் பிரமன் இருந்தான்; சிவன் இருந்தான் என்று தெளிவாகத் தெரிகிறது போல், 'நாராயணன் இல்லை' என்பது தெரிகிறதா? இங்கு இது முக்கியமாய் நோக்கத்தக்கது.

एकोहवै नारायण आसीत् न ब्रह्मा नेशान:''

(ஏகோஹவை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசான:) என்னும் மூன்றாம் வாக்கியத்தில் '' நாராயணன் அக்காலத்தில இருந்தான் '' என்பது எங்ஙனம் தெளிவாகத் தெரிகின்றதோ, அங்ஙனமே ''அக்காலத்தில் பிரமனும் இல்லை; சிவனும் இல்லை'' என்பதும் தெளிவாகத் தெரிகிறதல்லவா?

இதனால் என்ன தேறிற்று என்னில், கூறுவாம் : மேற்கூறிய மூன்று வாக்கியங்களுக்கும் முரண்பாடு சிறிதும் இன்றி, கருத்தைக் கொள்வது சிறந்த முறையாகும். முதல் இரண்டு வாக்கியங்களுக்கும் 'எல்லாம் அழிந்த காலத்து, பிரமன மாத்திரம் இருந்தான்; அல்லது சிவன் மாத்திரம் இருந்தான்; வேறு ஒரு பொருளும் இல்லை' என்னும் கருத்தைக் கொண்டால், 'ஏகோ ஹவை நாராயண ஆஸீத் .' என்னும் வாக்கியம் சேருமோ? சேராதன்றோ? 'ஏகோ ஹவை' என்னும் வாக்கியம் தெளிவாகக் கூறுகின்றவாறு, ''எல்லாம் அழிந்த காலத்தில் நாராயணன் மாத்திரம் இருந்தான் மற்றொன்றும் இல்லை'' என்னும் கருத்தைக் கொண்டாலோ, முதல் இரண்டு வாக்கியங்களும் பொருந்தும் என்று கூறவும் வேண்டுமோ ? வேண்டாமன்றோ ? 'ஏனைய பொருள் அழிந்த காலத்து, பிரமனோ சிவனோ இருந்ததாகவும், அப்பிரமனும் சிவனும் அழிந்த காலத்தும் அழிவில்லாத நாராயணனே இருந்ததாகவும, முதல் இரண்டு வாக்கியங்களும், மூன்றாம் வாக்கியமும் முறையே அறிவிக்கின்றன' என்று கூறும்போது, முரண்பாடு சிறிதும் இல்லையன்றோ ? இவ்வாறு ஆராய்ந்து வேதக் கருத்தை அறுதியிடும் நூலே வ்யாஸர் செய்த மீமாம்ஸா சாஸ்திரமாம். இநத சாஸ்திர உதவியைக கொண்டு வேதக் கருத்தை நாம் நன்கு காணலாம். ஆயினும், மேதாவிகளுக்கே இது கூடும். இராமாயணம் செய்யும் உதவியை இனிக் காண்போம் :

## இராமாயணமும் பரமாத்மாவும்

''சக்ரவர்த்தித் திருமகன் ஸீதாபிராட்டியைத் திருமணம் புரிந்துகொண்டு அப்பிராட்டியுடனும், சுற்றத்தாருடனும், பரிவாரங்களுடனும் திரு அயோத்திக்கு எழுந்தருளும்போது, வழியில், பரசுராமன் வந்து குறுக்கிட்டு, தன் வில்லை வாங்கி நாணேற்றுமாறு அச்சக்ரவர்த்தித் திருமகனை வேண்டிக் கொண்டனன்'' என்பது வரலாறு. பரசுராமன் கையில் இருந்த அவ்வில்லின் பெருமை பின்வருமாறு :—

"तदिदं वैष्णवं राम धनुः परमभास्वरम् ।
समानसारं काकुत्स्थ रौद्रेण धनुषा त्विदम् ।।
तदा तु देवतास्सर्वाः पृच्छन्ति स्मपितामहम् ।
शितिकण्ठस्य विष्णोश्च बलाबलनिरीक्षया ।।
अभिप्रायन्तु विज्ञाय देवतानां पितामहः ।
विरोधं जनयामास तयोः सत्यवतां वरः ।।
विरोधे तु महद्युद्धमभवद्रोमहर्षणम् ।
शितिकण्ठस्य विष्णोश्च परस्परजिगीषिणोः ।।
तदा तु जृंभितं शैवं धनुर्भीमपराक्रमम् ।
हुकारेण महादेवः स्तंभितोऽथ त्रिलोचनः ।।
देवैस्तदा समागम्य सर्षिसङ्घैः सचारणैः ।
याचितौ प्रशमं तत्र जग्मतुस्तौ सुरोत्तमौ ।।
जृंभित तद्धनुर्दृष्टवा शैवं विष्णुपराक्रमैः ।
अधिकं मेनिरे विष्णु देवास्सर्षिगणास्तदा ।।"

[ததிதம் வைஷ்ணவம் ராம தனு: பரம
பாஸ்வரம் ।
ஸமானஸாரம் காகுத்ஸ்த ரௌத்ரேண தனு
ஷாத்விதம் ॥
ததாது தேவதாஸ்ஸர்வா: ப்ருச்சந்தி
ஸ்மபிதாமஹம் ।
சிதிகண்டஸ்ய விஷ்ணோச்ச பலாபலநிரீக்ஷயா ॥
அபிப்ராயந்து விஜ்ஞாய தேவதாநாம்
பிதாமஹ. ।
விரோதம் ஜனயாமாஸ தயோ: ஸத்யவ
தாம்வர: ॥
விரோதே து மஹத்யுத்தம் அபவத்ரோமஹர்
ஷணம் ।
சிதிகண்டஸ்ய விஷ்ணோச்ச பரஸ்பரஜி
கீஷிணோ: ॥
ததா து ஜ்ரும்பிதம் சைவம் தனுர்பீம
பராக்ரமம் ।
ஹுங்காரேண மஹாதேவ: ஸ்தம்பிதோதத்ரி
லோசன: ॥
தேவை ஸ்ததா ஸமாகம்ய ஸர்ஷிஸங்கை:
ஸசாரணை: ।
யாசிதௌ ப்ரசமம் தத்ர ஜக்மது: தௌ
ஸுரோத் தமௌ ॥
ஜ்ரும்பிதம் தத் தனுர் த்ருஷ்ட்வா சைவம்
விஷ்ணு பராக்ரமை ।
அதிகம் மேனிரேவிஷ்ணும் தேவா: ஸர்ஷி
கணாஸ் ததா]

இவற்றின் கருத்து—''இந்த வில் விஷ்ணுவினுடையது. முன், எம்பெருமானுடைய வராஹாவதாரச் செயலை பிரமனிடம் கேட்டு, அவ்வெம்பெருமானுடைய மேன்மையை உணர்ந்திருந்த எல்லாத் தேவர்களும், சிவன் த்ரிபுர ஸம்ஹாரம் செய்தபின் சிவனுடையவும் விஷ்ணுவினுடையவும் பலாபலத்தைக் காணக் கருதி, 'யாருடைய வலிமை மிகச் சிறந்தது' என்று நான்முகனைக் கேட்க அந் நான்முகன், சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் விரோதத்தை விளைவிக்க, அவ்விருவரும் கோரமான யுத்தம் செய்ய, அப்போது விஷ்ணுவினுடைய ஹூம் என்னும் ஓசையினால் சிவனுடைய வில்லும், சிவனும் பங்கம் அடைய, 'இனிப் போர் நிகழ வேண்டாம்' எனத் தேவர்கள் வேண்டிக் கொள்ள, அவ்விருவரும் சமனம் அடைய, விஷ்ணுவின் விக்கிரமத்தினால், சிவனும் சிவனது வில்லும் பங்கம் பெற்றதைக் கண்கூடாகக் கண்ட முனிவர்களும தேவர்களும் விஷ்ணுவைச் சிறந்த தெய்வமாக அறுதியிட்டனர்'' என்பது.

மேலும், திருவடி இராவணன் முன்னிலையில் இராமபிரானுடைய மேன்மையைக் கூறுமிடத்துத் தென்படும் வார்த்தை—

'ब्रह्मा स्वयंभूः चतुराननोवा रुद्रस्त्रिनेत्रः त्रिपुरा-
न्तकोवा ।
इन्द्रोमहेन्द्रः सुरनायकोवा त्रातुं न शक्ताः
युधि रामवध्यम् ।।'

[ப்ரஹ்மா ஸ்வயம்பூ: சதுராননோவா ருத்ரஸ்
த்ரிநேத்ர: த்ரிபுராந்தகோவா ।
இந்த்ரோ மஹேந்த்ர: ஸுரநாயகோவா
த்ராதும் நசக்தா யுதி ராமவத்யம் ॥ ]

இதின் கருத்து—''சிறந்த செல்வம் பெற்றிருப்பவனும், வ்ருத்ரன் என்னும் அஸுரனைக் கொன்றொழித்தவனும், முப்பத்து முக்கோடி தேவதைகளைத் துணையாய்க் கொண்டிருப்ப

வனுமான இந்திரனும், இந்த இந்திரனுக்கும் மேலானவனும் ப்ரளய காலத்தில் ப்ரஜை களை அழச் செய்பவனும் காமனை நெற்றிக் கண்ணால் எரித்தவனும் த்ரிபுராந்தகனுமான சிவனும், இச்சிவனுக்கும் தந்தையானவனும் ஏனையோரைப் போல் பிறவாதவனும் நான்கு முகங்களை உடையவனுமான பிரமனும், தனித்தனியாகவோ, ஒன்று சேர்ந்தோ இராமபிரானுடைய சீற்றத்துக்கு இலக்காய் வதம் செய்யத்தகுந்தவனைக் காக்க சக்தியற்ற வராம்'' என்பது.

மேற் கூறியவாறு, தேவதைகளை (இரக்ஷக ராக விளங்குகின்றவரை)க் கழித்துப் பேசும் வார்த்தையில், ''நாராயணனும் சக்தியற்ற வன்'' என்று குறிக்கப் பெற்றிலது. இதனால், ''இராமபிரான் நாராயணனே'' என்னும் உண்மை யார்க்கும் கூறாமலேயே நன்கு விளங்குகின்றதன்றோ?

அன்றியும், இராமபிரானால் கொலையுண்டு கிடக்கும் இராவணனைக் கண்டு, நெஞ்சழிந்து, புலம்பிப் பேசும் மண்டோதரி, ஒருவாறு தெளிந்து, அந்த இராமபிரானுடைய மேன்மையைப் பின்வருமாறு பேசியிருக்கிறாள்:

இராமபிரானே! ''இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம், இனியறிந்தேன் எம் பெருமானுன்னை'' என்று பெரியோர் அருளிச் செய்தது போன்று, இத்தனை போதும் உன்னை அறிந்திலேன்; இப்போது அறிந்தேன் என்றாள் மண்டோதரி.

இதைத் திருச்செவியேற்ற இராமபிரான், ''நீ என்னை அறிந்தவாறு எங்ஙனே?'' என்ன, திருநாட்டில் திருவாழி, திருச்சங்கு, திருத் தண்டு இவற்றைத் திருக்கைகளில் ஏந்தியும், திருமறுவைத் திருமார்பில் சின்னமாகப் பெற்றும், திருமகளோடு என்றும் வாழ்பவனாகிய திருமால் நீ என்றாள்.

''திருமாலாகிய நாம் திருநாட்டை விட்டிட்டு இவ்வுலகில் வரக்காரணம் யாதோ?'' என்று சக்ரவர்த்தித் திருமகன் திரும்பவும் வினவினான். எல்லா உலகங்களிலும் உள்ள எல்லா உயிர்களுக்கும் நன்மையைச் செய்யத் திருவுள்ளம் கொண்டு, மானிட வடிவத்துடன் திருவவதாரம் செய்து, உலகத்திற்கே கண்டகனாகிய இராவணனைக் கொல்ல வந்தாய்; கொன்றாய் என்றாள் மண்டோதரி. இக்கருத்துக்களை, பின்குறிக்கப்பெறும் மண்டோதரி வார்த்தையில் காண்க:

''तमसः परमोधाता शङ्खचक्र गदाधरः ।
श्रीवत्सवक्षा नित्यश्रीः अजय्यश्शाश्वतो ध्रुवः ।।
मानुषं वपुरास्थाय विष्णुस्सत्य पराक्रमः ।''

(தமஸ: பரமோதாதா சங்கசக்ர கதாதர:
ச்ரீவத்ஸவக்ஷாநித்யச்ரீ: அஜய்யச்சாச்வ தோத்ருவ: ।
மானுஷம் வபுராஸ்தாய விஷ்ணுஸ்ஸத்ய பராக்ரம: ॥)

இன்னமும், 'தேவரீருடைய திரு நாபிக் கமலத்தில் பிரமனாகிய என்னை உண்டாக்கி, என்னிடம் படைப்புத் தொழிலும் தேவரீரால் வைக்கப் பெற்றுள்ளது' என்னும் கருத்தைக் கொண்டுள்ள,

''पद्मे दिव्ये अर्कसङ्काशे नाभ्या मुत्पाद्य मामपि ।
प्राजापत्यं त्वया कर्म मयि सर्वं निवेशितम् ।।''

பத்மே திவ்யே அர்க்க ஸங்காசே நாப்யாமுத் பாத்ய மாமபி ।
ப்ராஜாபத்யம் த்வயா கர்ம மயி ஸர்வம் நிவேசிதம் ॥

என்னும் வார்த்தையைக் காணுங்கால், நாராயணன் மேன்மையை நாம் நன்கு அறியலாம் அன்றோ? (இராமபிரான் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளும் போது, பிரமன் வார்த்தையாகக் கால புருஷனால் கூறப்பெற்றுள்ளது, இது.)

முன்னம், ''ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்த தாக்ரே'' ''நஸத் நசாஸத் சிவ ஏவ கேவல:'' ''ஏகோஹவை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசான:'' என்னும் வாக்கியங்கள், கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கும் வண்ணத்தில் அமைந்தில; மீமாம்ஸா சாஸ்திர முறையைப் பின்பற்றி ஆய்ந்து காணும் மேதாவிகளுக்கே கலக்கம் சிறிதும் இன்றி, 'ஏனைய பொருள்கள்

இன்றி இருக்கும்போது, சிவனோ, பிரமனோ இருந்ததாகவும் எல்லாம் அழிந்த காலத்து, நாராயணனே இருந்ததாகவும் அவ்வாக்கியங்களின் தெளிந்த பொருளைக் காணக் கூடும்' என்று கூறியிருந்தோமல்லவா ?

இப்போது, இராமாயணம், (மீமாம்ஸா சாஸ்திரம் செய்யும் உதவியைப் போலன்றி) யார்க்கும் எளிதில் நன்கு விளங்குமாறு, (1) விஷ்ணு, சிவன் இவ்விருவருக்கும் போர் நடக்கும் போது, விஷ்ணுவினுடைய மேன்மையை முனிவரும் தேவரும் கண் கூடாகக் கண்டனர் ; (2) இந்திரனோ, சிவனோ, பிரமனோ, ஒன்று சேர்ந்த இம்மூவரோ, இராமபிரானுடைய சீற்றத்துக்கு இலக்கானுரை இரக்ஷிக்க இயலாதவர் ; (3) இவ்வுலகததிற்கு நன்மையையும், இராவணனுக்கு அழிவையும் செய்ய வந்த இரக்ஷக தெய்வமான நாராயணனே இராமபிரான் ; (4) படைப்பவனாகிய பிரமன் படைப்புத் தொழிலைப் பரம புருஷனாகிய இராமபிரானுடைய அருளாலேயே பெற்றிருப்பவன்; என்னும் உண்மைக் கருத்துக்களை முறையே, பரசுராமன், திருவடி, மண்டோதரி (பிரமன்) காலபுருஷன் ஆகிய இவர்கள் வாக்கியங்களினால் நன்கு இயம்புகின்றதைக் கண்டோமல்லவா ?

மேற்கூறிய உண்மைக் கருத்துக்களை நாம் மனத்தில் கொண்டு '' ஹிரண்யகர்ப்ப: '' ''நஸத் நசாஸத்'' ''ஏகோஹவை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா நேசான:'' என்னும் வாக்கியங்களைக் கண்டால், மந்த மதிகளுக்கும் கலக்கம் சிறிதும் உண்டாகாதன்றோ?

இவ்வாறு நாராயணன் மேன்மையையும், ஏனையோருடைய தாழ்ச்சியையும், ஆங்கு ஆங்கு பல வாக்கியங்களினால் மிக மிகத் தெளிவாகத் தெரிவித்திருத்தலை ஒருவாறு சுருக்கமாகக் கண்டோமல்லவா? இனி ஜீவாத்மாவின் உண்மையை உணருவோம்.

## வேதாந்தமும் ஜீவனும்

''पतिं विश्वस्य'' (பதிம் விச்வஸ்ய) என்பது ஒரு வேதாந்த வாக்கியமாம். இவ்வாக்கியம், 'இவ்வுலகை உடையவன் எம்பெருமான்' என்னும் கருத்தைக் கொண்டுள்ளது. இதனால், (எங்ஙனம், 'சக்ரவர்த்தித் திருமகன் இராமன்' என்றால், 'இராமனுக்குத் தந்தை சக்ரவர்த்தி' என்பது தேறுகின்றதோ, அங்ஙனமே) 'இவ்வுலகு எம்பெருமானுக்கு உடைமைப் பொருள்' என்பது தேறுகின்றதல்லவா? இவ்வாறு உடைமைப் பொருளாயிருக்கும் தன்மையை 'சேஷத்வம்' என்று கூறுவர் ஆன்றோர்.

'உடைமைப் பொருளாயிருக்கும் தன்மை' என்பதைச் சிறிது விவரித்துக் கூறுவாம்: கட்டிப் பொன் ஒருவனுக்கு உடைமைப் பொருளாய் இருத்தலைக் காண்கிறோம். அப்பொன், அவன் சிறப்புப் பெறுதற்கு ஏதுவாயும், அவன் விரும்புகின்றவாறு, தான் அனுபவித்தல், பிறர்க்கு உபகரித்தல் ஆகியவற்றிற்கு ஏற்றதாயும் இருக்கின்றது.

இது போன்று, ஜீவனும் எம்பெருமானுக்கு உடைமைப் பொருளாய் இருத்தலை, ''பதிம் விச்வஸ்ய'' என்னும் வாக்கியத்தில் காண்கிறோம். அந்த ஜீவன், எம்பெருமான் சிறப்புப் பெறுதற்கு ஏதுவாயும், அவ்வெம்பெருமான் விரும்புகின்றவாறு தான் அனுபவித்தல், பிறர்க்கு உபகரித்தல் ஆகியவற்றிற்கு ஏற்றவனாயும் இருக்கின்றான். இங்கு, ''கட்டிப் பொன் போலே சேஷத்வம்'' என்னும் வாக்கியம் காணத் தக்கது.

அன்போடு கூடிய இந்தச் சேஷத்வ நிலையை 'தாஸ்யம்' என்பர். இந்தத் தாஸ்யம் ஜீவனுக்கே உரியதொரு சிறப்பாகும்.

இனி, ''यस्यास्मि नतमन्तरेमि'' (யஸ்யாஸ்மி நதமந்தரேமி) என்னும் மற்றொரு வேத வாக்கியத்தைக் காண்போம். இவ்வாக்கியத்தின் கருத்து—'எவனுக்கு நான் தாஸனாக (அடிமையாக) இருக்கின்றேனோ, அவனை விட்டு வேறொருவனிடம் செல்ல மாட்டேன்', என்ப

தாம் இவ்வாக்கியத்தில் அமைந்துள்ள 'யஸ்யாஸ்மி' என்னும் பகுதி, 'பதிம் விச்வஸ்ய' என்னும் வாக்கியத்தின் தேறிய பொருளையே குறிக்கின்றது.

'நதமந்தரேமி' என்னும் பகுதியின் கருத்தைச் சிறிது விரித்துக் கூறுவாம். ஒரு பொருள் ஒரு க்ஷணம் இருந்தால், அவ்வாறு ஒரு க்ஷணம் இருத்தலை 'ஸத்தை' என்பர். இரண்டு க்ஷணம் முதல் அந்த அந்தக் காலத்தில் இருத்தலை 'ஸ்திதி' என்று கூறுவர். முயற்சியை 'ப்ரவ்ருத்தி' என்று பகருவர். முயற்சியின்மையை 'நிவ்ருத்தி' என்று சொல்லுவர். இம்முறையில், ஒவ்வொரு ஜீவனுடைய ஸத்தை, ஸ்திதி, ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி ஆகிய இவை பரமபுருஷனுக்கு வயப்பட்டனவாகவே காணப்படுகின்றமையின், ஜீவன் எம்பெருமானுக்குப் பரதந்திரன் எனப்படுகிறான்.

எங்ஙனம், தட்டான் கைப்பட்டுப் பணி செய்யப்படுகின்ற பொன்னானது, அவன் அதனை உருக்கவும், தட்டவும், நீட்டவும், ஆக்கவும், அழிக்கவும் முயலுமளவில், அது நெகிழ்வதும் வளைவதும், நீள்வதும், ஆவதும், அழிவதுமாகி, தன் ஸத்தை முதலியவற்றில் தனக்கு வசமாயிருக்கையின்றி, அவன் வசப்பட்டிருக்கின்றதோ, அங்ஙனமே, 'ஜீவனும், தன் ஸத்தை முதலியவற்றில் தனக்கு வசமின்றி, எம்பெருமான் விரும்புகின்றவாறு, ஆக்கவும், அழிக்கவும் வசப்பட்டிருக்கின்றான்' என்பதை நாம் அறிதல் வேண்டும் இங்கு, ''பணிப்பொன் போலே பாரதந்திரியம்'' என்னும் வாக்கியம் நோக்கத்தக்கது.

இப்பாரதந்திரிய சப்தக் கருத்தை ஊன்றி நோக்கின், 'எம்பெருமான் ஸ்வதந்திரன்' என்பதும் இங்கு நன்கு விளங்குமன்றோ?

பரமபுருஷனைப் பற்றி உள்ள சேஷத்வ பாரதந்திரியங்களிரண்டும் சேர்ந்தேயிருக்குமாதலின், அவற்றைத் தனித்தனியே பிரித்து அறிந்து கொள்ளுமாறு, கட்டிப் பொன், பணிப் பொன் என்னும் இவ்வுதாரணங்கள் காட்டப் பட்டன.

இவற்றால், எம்பெருமானுக்குச் சிறப்பை விளைக்கைக்கு உறுப்பாய், அவன் விருப்புக்கு ஏற்ப உபயோகம் கொள்ளுதற்குத் தகுதியுடையதாயிருக்கை, 'சேஷத்வம்' என்றும், அங்ஙனம் உபயோகப்படுவதாயிருக்கை, 'பாரதந்திரியம்' என்றும் இவற்றிற்கு உள்ள வேற்றுமையை நாம் நன்கு அறியலாம.

இதுகாறும் கூறியவாற்றால், ''பதிம் விச்வஸ்ய'', 'யஸ்யாஸ்மி நதமந்தரேமி'' என்னும் வாக்கியங்களில், 'எம்பெருமான் ஸ்வாமி (உடையவன்) 'ஸ்வதந்திரன்' (தனக்கு வசமான தன் ஸத்தை முதலியவற்றைப் பெற்றிருப்பவன்)' என்னும் கருத்தும், ஜீவன், அவ் எம்பெருமானுக்குச் சேஷமாயும் பரதந்திரமாயும் இருப்பவன்' என்னும் கருத்தும், 'அவனுக்கும் (பரமனுக்கும்) இவனுக்கும் (ஜீவனுக்கும்) வேற்றுமை உண்டு' என்னும் கருத்தும் நன்கு விளங்குகின்றன அல்லவா?

இனி, ''तत् त्वमसि'' (தத் த்வம் அஸி) என்னும் வேறொரு வேதாந்த வாக்கியத்தைக் காண்போம். இவ்வாக்கியம், 'ஆத்மா ஒரு பொருள் தான் உண்டு; ஜீவனுக்கும் பரமனுக்கும் வேற்றுமையில்லை' என்னும் கருத்தைக் கொண்டுள்ளதாகத் தெரிகிறது.

இக்கருத்தையும், ''பதிம் விச்வஸ்ய'' ''யஸ்யாஸ்மி ந தமந்தரேமி'' என்னும் வாக்கியங்களின்,மேற்கூறிய கருத்தையும் சேர்த்து நோக்குங்கால், 'ஜீவனும் பரமனும் ஒரு பொருளா? அல்லது வேறு வேறு பொருள்களா? ஒன்று எனின், 'பதிம் விச்வஸ்ய' என்னும் சுருதி சேராது. வேறு எனின், ''தத் த்வம் அஸி'' என்னும் சுருதி சேராது' என்னும் இக்கலக்கம் உண்டாவது இயல்பன்றோ?

இக் கலக்கத்திற்குப் பரிஹாரம் மீமாம்ஸா சாஸ்திர முறையைப் பின்பற்றிக் காணுங்கால், பின்வருமாறு அறியத்தக்கது :

' தத் த்வம் அஸி'' என்னும் சுருதியிலுள்ள 'தத்' என்னும் பதம், அறிவு, ஆற்றல் முதலிய திருக்குணங்களோடு கூடிய காரணப் பொருளான பரமனைக் குறிப்பதாகும். 'த்வம்' என்னும் பதம் 'ச்வேதகேது' என்னும் ஜீவனைச் சரீரமாய்க் கொண்டுள்ள பரமனைக் குறிக்கும். 'இவ்விருவரும் ஒருவர்' என்பது இவ்வாக்கியத்தின் கருத்து.

தத் என்னும் இப்பதம் பரமனைக் குறிக்கும் என்பது உண்மையே. ஆனாலும், 'இந்த த்வம் என்னும் பதம், முன்னிலைப் பொருளான ஜீவனை (ச்வேதகேதுவை)க் குறிக்குமேயன்றி, பரமன் வரையில் செல்லுமோ? செல்லா தன்றோ? அங்ஙனமாயின், இஃது அவனை (ச்வேதகேதுவை)ச் சரீரமாய்க் கொண்டுள்ள பரமனைக் கூறும் என்று நீங்கள் கூறுவது எவ்வாறு?' என்னும் கேள்வி உண்டாகலாம்.

இக் கேள்வியின் பரிஹாரம் — 'ஜாதியை உணர்த்தும் சொல், ஜாதியை உணர்த்தும் அளவில் நில்லாமல், எங்ஙனம் அந்த ஜாதிக்கு இருப்பிடமான வடிவத்தையும் உணர்த்து கின்றதோ, (எங்ஙனம். 'குடம்' என்னும் சொல், குடத்தன்மையை உணர்த்தி அவ்வள வில் நில்லாமல், அக்குடத்தன்மைக்கு இருப் பிடமான குடத்தையும் உணர்த்துகின்றதோ) அங்ஙனமே, சரீரத்தை உணர்த்தும் சொல் லும், சரீரத்தை உணர்த்தும் அளவில் நில்லா மல், அச்சரீரத்தைத் தாங்கும் ஆத்மா வரை யில் செல்லும்' என்பது ஒரு முறையாம். இம் முறையை 'அபர்யவஸான வ்ருத்தி' என்று கூறுவர். 'ஜீவன் எம்பெருமானுக்குச் சரீரம் என்பது' "यस्यात्मा शरीरम्" (யஸ்யாத்மா சரீரம்) என்னும் சுருதியினால் அறியத்தக்கது.

ஜீவன். கை, கால் முதலிய உறுப்புக்களோடு கூடிய பிண்டத்தை ஏவி, தாங்கி, அப்பிண்டம் செய்யும் பணியை ஏற்று உகந்து போருகின்ற மையின், அவனை ஆத்மா என்றும், அப்பிண் டத்தை சரீரம் என்றும் அறிகின்றோம்.

இது போன்றே, பரமாத்மாவும், அறிவுற்ற சித்தும் அறிவற்ற அசித்துமாகிய இப்பிரபஞ் சத்தைத் தூண்டி, தாங்கி, இப்பிரபஞ்சம் செய்யும் பணியை ஏற்று உகக்கிறுனதலின், அப்பரமன் ஆத்மா; இப்பிரபஞ்சம் சரீரம் என்னத் தட்டில்லையன்றோ?

"ऐतदात्म्यमिदं सर्वं तत्सत्यं स आत्मा" (ஐத தாத்ம்யமிதம் ஸர்வம் தத் ஸத்யம் ஸ ஆத்மா) என்னும் வாக்கியம், "தத் த்வம் அஸி" என்னும் வாக்கியத்தோடு சேர்ந்த வாக்கிய மாம். இவ்வாக்கியம், 'இப்பிரபஞ்சம் பரமனை ஆத்மாவாக உடையது; அது உண்மை; பரமன் ஆத்மா' என்னும் கருத்தைக் கொண் டுள்ளது.

இவ்வாறு, முதலில், இப்பிரபஞ்சத்திற்கும் பரமனுக்கும் உள்ள சரீரத் தன்மை, ஆத்மா வின் தன்மை இவற்றைக் கூறி, பின்பு, 'ச்வேத கேது' என்னும் ஜீவனையும், பரமனையும் முறையே 'த்வம், 'தத்' என்னும் பதஙகளினுல் குறித்து, இவ்விருவருக்கும் உள்ள (சரீரத் தன்மை ஆத்மாவின் தன்மை ஆகிய) தொடர் பினுல் உண்டான ஒற்றுமையை அந்த "தத் த்வம் அஸி" என்னும் சுருதி அறிவிக்கின்றதாக நாம் கொள்ளுதல் நன்றும்.

இப்போது, "தத் த்வம் அஸி" என்னும் இந்தச் சுருதியிலும், "பதிம் விச்வஸ்ய" "யஸ் யாஸ்மி ந தமந்தரேமி" என்னும் சுருதிகளில் போன்று, ஜீவனைப் பரமனுக்குச் சேஷப் பொருளாயும், பரதந்திரப் பொருளாயும் கண்டோமல்லவா? கண்டவாறு யாதோ? எனின், 'ஜீவன் எம்பெருமானுக்குச் சரீரம்' என்ற போதே, அந்த ஜீவன், எம்பெரு மானுக்கு சேஷப் பொருளும், பரதந்திரப் பொருளுமாம்' என்பது தெள்ளிதன் விளங்கு கின்றதன்றோ?

இம்முறையில், மீமாம்ஸா சாஸ்திரம், முன் னம் கூறிய கலக்கத்திற்குப் பரிஹாரத்தைத் தெரிவிக்கின்றது. இது போலன்றி, இராமா யணம் எளிதில் உணருமாறு ஜீவனுடைய உண்மை நிலையை உணர்த்துகின்றது. இவ் வாறு எளிதில் உணர்த்தும் உண்மை நிலையைக் காண்போம்.

## இராமாயணமும் ஜீவாத்மாவும்

'சக்ரவர்த்தித் திருமகன், ஸீதாபிராட்டியுடனும், இலக்குமணனுடனும் வனத்திற்கு எழுந்தருளி, சக்ரவர்த்தியும் துஞ்சி, இராச்சியம் அராஜகமாய்க் கிடந்த காலத்து, பரதனை முடி சூடிக்கொள்ளவேணும் என்று வஸிஷ்டர் வேண்டிக்கொள்ள, அப்பரதன் அதற்கு இசையாது இருந்தனன்' என்பது சரித்திர உண்மை. அங்ஙனம் இசையாது இருக்கும் போது, பரதன் வஸிஷ்டரை நோக்கிக் கூறினவார்த்தை பின் வருமாறு :—

"कथं दशरथाज्जातो भवेद्राज्यापहारकः ।
राज्यं चाहं च रामस्य धर्मं वक्तुमिहार्हसि ।।"

(கதம் தசரதாஜ்ஜாதோபவேத் ராஜ்யாபஹாரக: | ராஜ்யம் சாஹம் ச ராமஸ்ய தர்மம் வக்து மிஹார்ஹஸி)

இதின் கருத்தைச் சிறிது விரித்துக் கூறுவாம் :—

"இராமபிரான் வனத்திற்கு எழுந்தருளிய பின், அப்பரமபுருஷன் பிரிவு பொருது, என் தந்தையாரான சக்ரவர்த்தி துஞ்சினர். அச் சக்ரவர்த்தி வயிற்றில் பிறந்த நான், அவ்விராமபிரான் துறந்த இராச்சியத்தை எங்ஙனம் ஏற்றுக்கொள்வேன். அங்ஙனம் ஏற்றுக் கொண்டால், சக்ரவர்த்தி வயிற்றில் பிறந்த பிள்ளை என்று என்னை உலகம் கூறுமோ? கூறுதன்றோ?

மேலும், என் உண்மை நிலையை உணருங்காலும், இவ்விராச்சியத்தை யான் ஏற்றுக் கொள்வதற்கு இல்லை. ஏனெனில், நான் என்னும் இவ்வாத்மாவும், இந்த இராச்சியமும் அப்பிரானுக்கே உரிய பொருள்களாம்.

அப்பிரானுக்கே உரிய இரண்டு உடைமைப் பொருள்களுள், ஒன்று மற்றொன்றை ஆண்டு பரிபாலனம் செய்வது முறையாமோ? ஆகாதன்றோ?

இவ்வுலகில் தன்னைப் பெற்று வளர்த்த தன் தந்தையாரையும் சிறையிலிட்டு வைத்து, தான் இராச்சியத்தை முறை தவறிப் பெற்று, பரிபாலனம் செய்வது என்பதொன்று உண்டு. இம்முறையைப் பின்பற்றி, என் பக்கல் இராச்சியத்தை வைப்பது தகுமோ? தகாதன்றோ? என் இயல்பை உணர்ந்து, காக்கும் தன்மையைக் கூறுவீர். இராமபிரானுக்கே உரிய இருபொருள்களுள், ஒன்று மற்றொன்றை ஆண்டு பரிபாலனம் செய்யலாம் என்னில், என்னைத்தான் இராச்சியம் இரட்சிக்கட்டுமே? என,

ஒருவனுக்கே உரிய பெட்டி, இரத்தினம் ஆகிய இரு பொருள்களுள், ஒன்று காப்பதாயும், மற்றொன்று காக்கப்படுவதாயும் காணப் பெறுகின்றன அல்லவா? இதுபோன்று பரதனாகிய நீ, காப்பவனாகியும் இராச்சியம் காக்கப் படுவதாயும் ஆனாலோ? என்னில்,

மேற்கூறிய இரு பொருள்களுள், ஒன்றான இரத்தினம், உடையோனாகிய அப்புருஷனால் என்றும் தரிக்கத்தக்கதாம். அவ்வாறான அந்த இரத்தினத்தை, அவன் ஒருகால் பெட்டியில் வைத்து, அப்பெட்டியைக் காப்பதாய்க் கருதுங்கால், அது அங்ஙனம் காணப் பெறுகின்றது. அல்லாத போது, அப்பெட்டி அங்ஙனம் காணப் பெறுகின்றதோ? இல்லையன்றோ? இராமபிரானுக்கே உரிய (இரத்தினமாகிய) இராச்சியம் அப்பிரானாலேயே என்றும் தரிக்கத் தக்கதல்லவா? அந்த இராச்சியமாகிய இரத்தினத்தைத் தரித்துக் காக்கத் தகுதி எனக்கு உண்டோ? இல்லையன்றோ? நான் அப் பெட்டியாய் இருக்கத் தகுமோ? தகாதன்றோ? என,

இராச்சியத்திற்கு அறிவும் ஆற்றலும் இல்லை. அதனால், அதற்கு உன்னைக் காக்க இடமில்லை. அறிவும் ஆற்றலும் உள்ள உனக்கோ, அந்த இராச்சியத்தைக் காக்கத் தகுதி உண்டு என்னில், என் அறிவும் ஆற்றலும் எம் பெருமானுக்குப் பணி செய்யப் பாங்காயுள்ளன வன்றி, அந்த எம்பெருமான் உடைமையை அவனுக்கு இல்லை செய்யத் தகுதியுடையனவோ? அங்ஙனமோ தேவரீர் எண்ணியிருக்கிறது?'' என்பது இதின் கருத்து.

இதனுல், 'பரதன் உண்மை நிலேயே ஜீவனுக்குரிய ஓர் உண்மை உயரிய நிலே,' என்பது தெள்ளிதின் விளங்குகின்றதல்லவா?

இனி, ஸீதாபிராட்டியார் சரிதத்தில் பாரதந்தரிய நிலேயைக் காண்போம் : ஸீதாபிராட்டியாருக்கு மூன்று பிரிவுகள் உண்டு. தேவமாதர்களின் சிறையை விடுவிக்கைக்காக அசோகவனத்தில் தாம் சிறை இருந்தது, முதல் பிரிவு. இரண்டாம் பிரிவாவது - உலக அபவாதத்தைப் போக்கிக் கொள்வதற்காகச் சக்ரவர்த்தித் திருமகன் அப்பிராட்டியாரை காட்டிலே போகவிடப் பிரிந்தது. மறுபடியும் அப்பிராட்டியார் இராமபிரான் முன்னிலேயில் வந்திருக்கும் போது, பிரிந்து, பிறநதகத்தில் (பூமியில்) புகுந்து விட்டது மூன்றும் பிரிவாம். இப் பிரிவுகளுள், இரண்டாம் பிரிவில் பாரதந்தரிய நிலே நன்கு விளங்குகின்றது. இதைச் சிறிது விவரித்துக் கூறுவாம் :

சக்ரவர்த்தித் திருமகனும் ஸீதாபிராட்டியாரும் திருஅயோத்தியில் எழுந்தருளியிருக்கும் காலம். திருவயிறு வாய்த்திருத்தலே (கர்ப்பிணியாயிருக்கையை) சக்ரவர்த்தித் திருமகன் கண்டனன். அவன் அப்பிராட்டியாரை நோக்கி, 'அறுபதினுயிரம் ஆண்டு மலடு கிடந்த என் தந்தையாரான சக்ரவர்த்தியைப் போன்று வருந்திப் பெருது, எளிதாகவே எனக்குப் புத்திரப் பேறு கிட்டிற்றே! அவசியம் அனுபவித்தல்லது நிற்க வொண்ணுத ஆசையோடு கூடி இருக்கும் நீ எத்தை விரும்புகிருய்? எல்லாவற்றையும் சொல்லாய், உள்ளோடுகிறவை நிழலெழுகிற முகவொளி உடையவளே!'

अपत्यलाभो वैदेहि ममायं समुपस्थित: ।
किमिच्छसि सकामा त्वं ब्रूहि सर्वं वरानने ।।

(அபத்யலாபோ வைதேஹி மமாயம் ஸமுபஸ்தித: | கிமிச்சஸி ஸகாமா த்வம்ப்ரூஹி ஸர்வம் வரானனே) என்று அருளிச் செய்தனன்.

இதைச் செவியேற்ற பிராட்டி இராமபிரானே நோக்கி, அருளிச் செய்த வார்த்தை யாவது —

"तपोवनानि पुण्यानि द्रष्टुमिच्छामि राघव ।
गङ्गातीर निविष्टानि ऋषीणां पुण्यकर्मणाम् ।
फलमूलाशिनां वीर पादमूलेषु वर्तितु ।
एषमे परम: काम: ।"

(தபோவனுனி புண்யானி த்ரஷ்டும் இச்சாமி ராகவ | கங்காதீர நிவிஷ்டானி ருஷீணும் புண்ய கர்மணும் | பல மூலாசி நாம் வீர பாத மூலேஷு வர்த்திதும் | ஏஷமே பரம: காம:) என்பதாம்.

இதின் பொருள் 'இராகவனே! கிழங்கு, காய், கனி இவற்றைப் புஜிப்பவரும், ஸத்துவ குணம் பெற்றிருப்பவருமான மஹான்களுடைய திருவடி நிழலில் ஒரு நாளாகிலும் தங்கி, கங்கைக் கரையில் உள்ள தபோவனங்களேக் காண விரும்புகிறேன். இதுவே, எனக்குள்ள மேலான விருப்பம்' என்பதாம்.

இவ்வார்த்தையைத் திருச்செவி சாற்றியருளின இராமபிரானும், உலக அபவாதத்தைப் போக்கிக் கொள்ள வேணும் என்னும் திருவுள்ளம் பெற்றிருப்பவனுகையால், அப்பிராட்டியாரின் விருப்பத்தை நிறைவேற்றுபவன் போல், அவ்வாறே அனுப்பினன். இதுவே இரணடாம் பிரிவாகும்.

இப்பிரிவுக்குப் பயன்— இராமபிரான், கட்டிலே வைத்த போதோடு காட்டிலே விட்ட போதோடு வாசியற அப்பிரானுடைய திருவுள்ளக் கருத்தையே பின் சென்று நடக்க வேண்டும்படியான தன் பாரதந்தரிய நிலேயைப் பிரகாசப்படுத்துதலேயாம்.

'கட்டிலே வைத்தபோதோடு காட்டிலே விட்ட போதோடு வாசியற, அப்பிரானுடைய திருவுள்ளக் கருத்தையே பின் சென்று நடக்க வேண்டும்படியான நிலே' என்பதைச் சிறிது விளக்குவோம்.

ஸீதாபிராட்டி அசோக வனத்தில் சிறை இருக்குங்கால், இராவணனுலும், அரக்கியராலும் பட்ட துன்பம் எல்லேயற்றதாம். அப்பிராட்டி முன்னிலேயில், இராவணன் முறை தவறிக் கூறிய வார்த்தைகள் பல உண்டு. அவற்றுள் ஒன்று பின்வருமாறு—

'கிளி போன்றவளே ! நான் உன்னைக் கொணர்வதற்கு முன்னமே உன் கணவனுகிய இராமன் மாண்டு போனுன்; அவன் இறக்குங் கால், ஹா ஸீதா ! ஹா லக்ஷ்மணு ! என்று கூறியதை நீ காதாரக் கேட்டிருக்கின்ருய்; அங்ஙனம் இருக்க, இராமனைக் கூடவேணும் என்று நீ கருதுகின்றனையே! ஈது என்ன பேதமை? நல்விதி என்னை உன் பக்கல் கூட்டி யிருக்க, அதை அவமதித்து என்னை வெறுப் பது தகுதியோ' இங்கு,

"வீட்டும் காலத்து அலறிய மெய்க்குரல்
கேட்டும் காண்டாற்கு இருத்தி கொல்
கிள்ளை நீ !
நாட்டும் கால்நெடு நல் அறத் தின்பயன்
ஊட்டும் காலத்து இகழ்வது உறும்கொலோ"

என்னும் கம்பர் வாக்கைக் காண்க.

மக்களுள் ஒருவனுகிய இராவணன் தாயான பிராட்டி முன்னிலையில், கூறும் வார்த்தை யாமோ? இது. இங்ஙனமே, அரக்கியரும், தத்தமக்குத் தோன்றியவாறு கடிந்து கூறிய சரிதம் உலகமறிந்ததேயாம். வில்லம்புக்குத் தப்பலாம் ; சொல்லம்புக்குத் தப்ப இயலு மோ? இயலாதன்ருே?

"தீயினுற் சுட்டபுண் உள்ளாறும் ஆருதே
நாவினுல் சுட்ட வடு"

என்னும் ஆன்ருேர் வாக்கு இங்குக் காணத் தக்கது.

இங்ஙனம் இருப்பினும், முடிந்து பிழையாது, பிராட்டி அசோக வனத்தில் உயிர் தரித்து இருந்தமைக்குக் காரணம் யாதோ? எனின், காரணம் ஒன்று கூறுவாம்.

'நம் தலைமகனுன இராமன் நம்மிடம் அள வற்ற அன்பு உள்ளவன்; ஜகதேக வீரன்; விரோதியான இராவணனைக் கொல்வது திண்ணம். கொன்று, நம்மைத் தேடுங்கால், 'ஸீதை முடிந்து பல மாதங்களாயிற்றே' என்ருல், தண்ணீர்ப் பந்தலில் வந்து, உருண்டு உடைந்து கிடக்கும் தண்ணீர்ச்சாலைக் கண்டு தபிக்கும் விடாயனைப் போன்று, அப் பரமன் கதி என்னுகும்! அப்பரமனுக்காகவே நாம் உயிர் தரித்திருப்பது நம் நிலைமைக்குப் பொருந்திய கார்யம் அன்ருே ?" என்று இருந்ததே அக்காரணமாம்.

இங்கு, இராமபிரான் திருவுள்ளக் கருத் தைப் பின் சென்று இருக்கும் பாரதந்த்ரிய நிலையை நாம் நன்கு உணரலாம் அல்லவா?

இக்கருத்தை நாம் மனத்திருத்தி, இரண் டாம் பிரிவையும், அப்பிரிவில் நடந்த செயலை யும் காணுங்கால், ஓர் ஐயம் எழக்கூடும் அந்த ஐயம் பின்வருமாறு காணத்தக்கது.

'இரண்டாம் பிரிவாவது— உலக அபவாதத் தைப் போக்கிக் கொள்வதற்காக இராம பிரான் பிராட்டியைக் காட்டிலே போகவிடப் பிரிந்தது' என்று முன்னமேயே கூறியிருந் தோம். இதைக் காணுங்கால், 'பிராட்டியிடம் இராமபிரானுக்கு அன்பு எள்ளளவும் இல்லை' என்று தெரிகிறதன்ருே? அப்பிராட்டியார், தம் உயிரை விரும்பி இருப்பது இராமபிரானுக் காகவே என்ற கருத்து, "नहि मे जीवितेनार्थः" (நஹி மே ஜீவிதேநார்த்த:) என்ற அவர் கூற் ருல் நன்கு விளங்குகிறதன்ருே ? அசோக வனத்தில் எழுந்தருளியிருக்குங்கால், இரா வணனுலும் அரக்கியராலும் சொல்லொணுத் துன்பம் பெற்றிருந்தும் இராமபிரானுக்காக வேயன்ருே உயிர் தரித்திருந்தது? அவன் அவ் வாறு இருக்க, பிராட்டியார் உயிர் துறக்காது இருந்ததற்குக் காரணம் யாதோ?

இவ் ஐயத்திற்குப் பரிஹாரமாவது--மிகவும் துயருற்றிருந்த இலக்குமணன், கங்கைக் கரை யேறினதும், பிராட்டி ஸன்னிதியில், இராமன், காட்டிலே விட்டதிற்குப் பயனுகத் திருவுள்ளம் பற்றின உலக அபவாத பரிஹாரத்தை விண் ணப்பம் செய்தனன். அதைச் செவிமடுத்த அப்பிராட்டி, மிகவும் துன்புற்றுப் புலம்பிப் பேசும்போது, அருளிச்செய்த வார்த்தைகளுள் ஒன்று.

"न खल्वद्यैव सौमित्रे जीवितं जाह्नवी जले ।
त्यजेय राघव वंशे भर्तुर्मापरिहास्यति ।।"

(நகல்வத்யைவ ஸௌமித்ரே ஜீவிதம்
ஜாஹ்நவீ ஜலே ।
த்யஜேயம் ராகவம் வம்சே பர்துர்மாபரி
ஹாஸ்யதி ॥

என்பதாம்.

இதன் கருத்து— 'இலக்குமணனே! 'இராம பிரானைச் சுட்டியிருக்கும் ரகுஸந்தானமானது, அவ் இராமபிரானுடைய திருவம்சத்தில் இல்லாமல் அழிய வொண்ணாது' என்று கங்கா ஜலத்தில் இப்போதே உயிரை விடுகைக்குத் தகுதியுடையவளாக ஆகிறிலேன்' என்பதாம்.

இக் கருத்தைக் காணுங்கால், இராம பிரானைப்பற்றி உயிர் தரித்திருக்க வேண்டுவ தில்லை. அப்பிரான் விரும்பிய ஸந்ததியைப் பற்றி அப்பிராட்டியார் அப்பிரிவில் உயிர் தரித்திருந்ததாய்த் தெரிகிறதன்றோ? இதைக் காண்போருக்கு மேற்கூறிய ஐயத்தின் பரி ஹாரம் நன்கு புலனும்.

இங்கு, ''ஆற்றாமையின் கனத்தாலே முடிந்து பிழைக்கை தேட்டமாகா நிற்கச் செய்தேயும், அது செய்யமாட்டாதே பெருமாள் நினைவைப் பின் சென்று, தன் ப்ராணனை நோக்கிக் கொண்டிருக்க வேண்டும் படியான பாரதந் திரியத்தையிறே ப்ரகாசிப்பித்தது'' என்னும் மணவாளமா முனிகள் திருவாக்கு அனுபவிக் கத்தக்கது.

இத் திருவாக்கில் அமைந்துள்ள ''பெருமாள் நினைவைப் பின் சென்று'' என்பதற்கு, 'குசல வர்களுடைய திருவவதாரத்தில் இராமபிரான் விருப்புற்றிருப்பவனும். ஆதலின, இப்போது நாம் உயிர் தரித்திருப்பது அப்பிரானுக்கு இஷ்டமாம்' என்னும் எண்ணத்தை, (அபத் யலாபோவைதேஹி ' என்னும் அப்பிரான் திருவாக்கையும், அதின் மூலமான அவன் திரு வுள்ளக் கருத்தையும் பின்பற்றி)ப் பெற்றி ருந்து' என்பது கருத்தாம்.

இனி, இங்கு அப்பிராட்டியார் குசலவர்கள் திருவவதாரம் செய்த பின், உயிரோடு இருந் ததிற்குக் காரணம் யாதோ? என்னும் வினு சிலருக்கு உண்டாகலாம். இராமபிரானுக் காகவோ, அப்பிரானுடைய ஸந்ததிக்கா கவோ, பிராட்டியார் உயிர் தரித்திருக்க வேண்டுவதில்லையன்றோ?

இவ்வினுவிற்கு விடை பின்வருமாரு - 'தலை வன், தலைவிக்கு அடையப்பெறும் நன்மையா யும், அந்நன்மையைப் பெறுதற்கு ஏதுவாயும், அத்தலைவியினுல் உபசரிக்கத் தக்கவனும், போற்றத் தகுந்தவனும் இருப்பவனும். அதனுல், உயிரையோ, அவ்வுயிரிலும் மேற் பட்டது ஒன்றையோ, விட்டாகிலும் தலைவன் விருப்பத்தைச் செய்ய வேண்டியவளாம தலைவி.

இம்முறை, ''ਧतिर्हि दैवतं नार्या. पतिर्बन्धुः पतिर्गतिः। प्राणैरपि प्रिय तस्मात् भर्तुः कार्य विशेषत·।।'' ''पालयन्ती हरेर्भाव पत्नी भगवतोह्य हम् ।।'' (பதிர்ஹி தைவம் நார்யா: பதிர் பந்து: பதிர் கதி: । ப்ராணை ரபி ப்ரயம் தஸ்மாத் பர்த்து: கார்யம் விசேஷத: ।। ''பாலயந்தீ ஹரேர் பாவம் பத்னீ பகவ தோஹ்யஹம்।) என்று பிராட்டியாராலேயே அருளிச்செய்யப் பெற்றுளளது,

இங்கு, 'பிறருக்காக உயிர் தரித்திருக்க வேண்டும்; பரதந்திரருக்கு முடிகை தேட்ட மானுலும் முடியப்போகாது' என்னும் உண்மையை உணருதல் வேண்டும.

இவ்வுண்மைக் கருத்தைச் சிறிது விரித்துக் கூறுவாம்: பெருவ்யாதியினுல் பீடிக்கபபட்ட ஒருவன், அப்பீடை தாங்க மாட்டாமல், தானே உயிரைத் துறந்து விடுகிறுன். அவன் அங்ஙனம் முடிகையே அவனுக்குச் சேர, பிழைக்கை எனப் பெறுகின்றது. இவ்வாறு முடிகையே பிழைக்கையாலுல் பிழைக்கையும் முடிகையாகலாமன்றோ?

ஸீதாப்பிராட்டியார், குசலவர்கள் திருவ வதாரம் செய்த பிறகு, இராமபிரானுடைய ஸந்ததிக்காக உயிர் தரித்திருக்கவேண்டுவ தில்லை என்பதும், அக்காலத்தில் அவருக்கு முடிகை தேட்டமாயிருந்தது என்பதும் ஒரு வாறு உன்மையேயாம். ஆயினும், அப்பி ராட்டியார் தம் இயல்புக்கு ஏற்ப, மேற்கூறிய வாறு பிழைக்கை என்னும் முடிகையைப் பெற்றிருந்தவர் என்றே நாம் அறிதல் வேண் டும். இவ்வாறு இருத்தற்கும் காரணம் இராமபிரான் திருவுள்ளக் கருத்தேயாம்.

இங்கு, திருவுள்ளக் கருத்து என்பது யாதோ? எனின், கூறுவாம்: ''ஸீதாபிராட்டியார் கற்புடையவர்'' என்பது மாத்திரமன்றி, கற்பினுக்கு அணியாகவே விளங்குபவராம். ''கண்டனன் கற்பினுக்கு அணியை'' என்னும் திருவடி திருவாக்கையும் இங்கு நாம் காணுதல் வேண்டும். அப்பிராட்டியாரை, இக் கொடுவுலகம் தன் இயல்புக்கேற்ப, குற்றம் கூறிற்று. ஆயினும், நாள் செல்ல, நாள் செல்ல இக் கொடுவுலகத்திற்கே, அப்பிராட்டியாரின், குற்றம் சிறிதும் இன்றியிருக்கும் சிறப்பு நன்கு விளங்கக் கூடும். அக்காலத்தில் குழந்தைகளுடன் பிராட்டியாரை அழைத்துக் கொள்வதே தமக்கு நன்ரும். ஆதலின், 'இப்பொழுது பிராட்டியார் உயிர் துறத்தல் கூடாது' என்பதே அக்கருத்தாம்.

இதற்குத் தக்க பிரமாணம் யாதோ? எனின், மூன்ரும் பிரிவைப் பற்றிக் கூறுமிடத்து, வால்மீகி முனிவன், இராமபிரானுடைய ஸன்னிதியில் வந்து ஒடுங்கி நிற்கும் ஸீதாப்பிரட்டியாரைக் குறித்து, 'இவர் குற்றம் சிறிதும் இன்றி நல்லொழுக்கம் பெற்றிருப்பவர்; பாவம் சிறிதும் இல்லாதவர்; இராமபிரானையல்லாமல் மற்ரெருவரையும் நெஞ்சாலும் நினைத்திலாது, அப்பிரானையே தெய்வமாகப் பற்றியிருப்பவர். 'इयं शुद्धसमाचारा अपापा पतिदेवता'

'இயம் சுத்தஸமாசாரா அபாபா பதிதேவதா' என்று கூறியிருத்தலையும்,

இராமபிரானும், ''நானும், குற்றம் சிறிதும் இன்றி இருப்பவர் பிராட்டியார் என்பதை அறிவன்; (''अपापेत्यभिजानता'' அபாபேத் யபி ஜானதா) முனிவனுகிய நீர் சொன்னதுவே போதும்; ('एतदेव महाभाग यथा वदसि धर्मवित्' ஏததேவம் மஹாபாக யதா வசஸி தர்மவித்) ஆனுலும், இந்தத் திரளிலே உலகம் நம்புமாறு, தன் சுத்தியை வெளியிட்டுக்கொள்ள வேண்டும்'' என்று அருளிச் செய்திருத்தலையும் காணுங்கால், மேற்கூறிய கருத்து, தெள்ளிதின் விளங்குகின்றதன்ரே?

இங்கு, (பிறருக்காக உயிர் தரித்து இருக்க வேண்டும் பரதந்திர ஜன்மத்தில் பிறந்தோருக்கு நினைத்தபோது முடியப்போமோ? அங்ஙனம் நினைத்தபோது முடிந்து விட்டால், பாரதந்திரியமாகிற செல்வம் நிலை பெற்றிக்குமோ?) என்னும் கருத்தைக் கொண்டுள்ள ''மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண் பிறந்ததே'' என்னும் ஆழ்வார் திருவாக்கையும் காண்க.

இதுகாறும் கூறிய பரதன், ஸீதாபிராட்டியார் இவ்விருவருடைய சரிதங்களை நாம் மனத்திருத்தி நோக்குங்கால், இராமபிரானுக்கு இராச்சியமும், பரதனும், ஸீதாப் பிராட்டியும் போன்று, 'இந்த ஜீவனும், இவனுடைமையாக எண்ணப் பெற்றிக்குமவையும் அப்பிரானுக்கே (நாராயணனுக்கே) உரிய உண்மை உடைமைப் பொருளும் பரதந்திரப் பொருளுமாம்' என்பது நன்கு விளங்குகின்றதல்லவா? இவ்வாறு ஜீவனுடைய உண்மை நிலையை இராமாயணத்தில் கண்டோமல்லவா? இனி, உபேயம் எனப்படும் பயனைப் பற்றி ஆராய்வோம்.

## வேதாந்தமும் உபேயமும்

இவ்வுலகிற்கு மீண்டுவருதல் இன்றி, மோக்ஷ உலகத்தைத் தருவதான வழியில் சென்று, திருநாட்டிலே எம்பெருமானைச் சேர்ந்து, அவனையும், அவன் திருக்குணங்களையும், திருமேனியையும் அன்புடன் அனுபவித்து, அவ்வனுபவத்தினுல் உண்டான. ஆனந்தம் தூண்ட அவன் திருவுள்ளம் உகக்குமாறு அடிமை செய்து வாழுதலே, இந்த ஜீவனுக்குச் சிறந்த நன்மையாம். இவ்வாருன வாழ்வையே 'உபேயம்' என்றும், 'வீடுபேறு' என்றும் கூறுவர், ஆன்ருேர்.

இங்கு, 'பரமனைப் பஜனம் பண்ணுவோர், (மோஷ உலகத்திற்குச் செல்லுவோரை முதலிற் கண்டு, உபசரித்து, வழி நடத்தும் தெய்வமான) அர்ச்சிஸ்ஸை அடைகின்றனர்' என்னும் கருத்தைக் கொண்டுள்ள 'तेऽर्चिषमभिसंभवन्ति' (தேऽர்ச்சி ஷமபி ஸம்பவந்தி) என்னும் வேதாந்த வாக்கியமும்,

'பரமனைப் பஜனம் பண்ணுவோன் அப்பர மனையே அடைகின்றான்' என்னும் பொருள் பெற்றுள்ள "ब्रह्मविदाप्नोति परम्" (ப்ரஹ்ம விதாப்நோதி பரம்) என்னும் வேதாந்த வாக்கியமும்,

'மிகவும் இனிய பொருளான பரம புருஷனை அடைந்து, அனுபவித்து இன்பம் துய்க்கின்றான்' 'திருநாட்டில் முக்தன் எம்பெருமானுடன் அவன் திருக்கலியாண குணங்களை அனுபவிக்கின்றான்' என்றும் அப்பரமபுருஷனுடைய திருமேனியைக் கண்கூடாகக் காண்கின்றனர் நித்யர்' என்னும் கருத்துக்களை முறையே காட்டும். "रसंह्येवायं लब्ध्वाऽऽनन्दी भवति" (ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாऽऽநந்தீ பவதி) "परमेव्योमन् सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चिता ।" (பரமேவ்யோமன் ஸோऽச்னுதே ஸர்வான் காமான் ஸஹப்ரஹ்மணா விபச்சிதா) सदा पश्यन्ति सूरयः' (ஸதா பச்யந்தி ஸூரய:) என்னும் வேதாந்த வாக்கியங்களும் காணத் தக்கன.

ஆனால், 'பரமபுருஷன் திருவுள்ளம் உகக்குமாறு அடிமை செய்து வாழுதல் இந்த ஜீவனுக்குச் சிறந்த நன்மை' என்பதற்குத் தக்க பிரமாணம் யாதோ? என்னும் கேள்வி இங்கு உண்டாவது இயல்பேயாம்.

இக்கேள்விக்கு விடை பின்வருமாறு :— ஜீவன் கை, கால் முதலிய உறுப்புக்களோடு கூடிய பிண்டத்தை ஏவி, தாங்கி, அப்பிண்டம் செய்யும் பணியை ஏற்று உகக்கின்றமையின், அந்த ஜீவன் ஆத்மா; அப்பிண்டம் சரீரம்' என்பது எங்ஙனமோ, அங்ஙனமே, 'பரமன் ஜீவனை ஏவி, தாங்கி, அந்த ஜீவன் செய்யும் பணியை ஏற்று உகக்கின்றமையின், 'அப்பரமனும் ஆத்மா; அந்த ஜீவனும் சரீரம்' என்பதையும் நாம் உணரலாமல்லவா?

இங்கு, यस्यात्मा शरीरम् (யஸ்யாத்மா சரீரம்=எவனுக்கு ஜீவன் சரீரமோ) என்னும் வேதாந்த வாக்கியம் பிரமாணமாய்க் காணத்தக்கது இதனால், தேறிய ஸாரப் பொருள் என் ? என்னில், இந்தச் சுருதி, 'ஜீவன் பரமனுக்குச் சரீரமாம்' என்று கூறிய போதே, 'இந்த ஜீவனுக்குச் சிறந்த நன்மை பரமனுக்குத் தொண்டு செய்கையே யாம்' என்பதையும் கூறிற்றன்றோ?

ஆனால், 'இவ்வடிமைத் தொழில் உலகப் போக்கில் துன்பம் தருவதாய் இருத்தலினாலும்' 'ஒருவருக்குத் தொண்டு பூண்டொழுகுவது துன்ப மயமானது' எனச் சாஸ்த்திரங்களில் சொல்லப்படுவதாலும், மனுமுதலிய பெரியோர், 'தொழில்களில் அடிமைத் தொழில், கடைப்பட்டது; துன்பமயமானது' என இயம்பி இருத்தலாலும், 'அடிமைத் தொழில் துன்பம் தருவதொன்றாம்' என்பது தெள்ளிதின் விளங்குகின்றதன்றோ?

உண்மை இவ்வாறு இருக்க, 'துன்பம் கலவாத பேரின்பத்தையே அனுபவித்துக் கொண்டிருக்கும் மோக்ஷ தசையிலும், ஜீவனுக்கு இவ்வடிமைத் தொழில் உண்டு எனச் சொல்லப் பெறுகின்றதே, இது பொருந்துமாறு யங்ஙனம் ? என்னும் இவ்வினா இங்கு எழுகின்றது.

இவ்வினாவிற்கு விடை பின்வருமாறு :— 'எங்கும் அடிமைத் தொழில் துன்பம் தருவதாகவே இருக்கும்' என்பது இல்லை. 'காளிதாஸன், தான் உகந்த விலைமகளுக்குத் தண்ணீர் கொண்டு வநது தருதல் முதலிய தொண்டைமிக்க மகிழ்வுடனும், இன்பத்துடனும் செய்து வந்தான்' என்பது சரித்திர உண்மை. அதைப்போன்றே, பரமனுக்குச் செய்யும் தொண்டும் இன்பமாகவே இருக்கும்.

காளிதாஸன், தான் உகந்த விலை மகளின் அழகு முதலிய குணங்களில் ஈடுபட்டு, அவ்வுவப்பினால், அங்குத் தொண்டு புரிந்ததால், அத்தொண்டு இன்பமாக இருந்தது என்னலாம்.

இங்கு, எம்பெருமானுக்கு அழகு முதலிய குணங்கள் உண்டோ ? 'அவன் நிர்குணன் (குணங்களற்றவன்)' என வேதாந்தங்களில் கூறப் பெறுகின்றனவே, அங்ஙனம் குணமற்ற அப்பெருமானிடத்தில் இந்த ஜீவனுடைய நெஞ்சம் ஈடுபடுமோ? ஈடு படாதன்றோ? மனக் கவர்ச்சி உண்டாகாத இடத்தில் உவப்புக் கொள்ளாத இடத்தில் அடிமைத் தொழில் இன்பமாய்த் தோன்றுவதுதான் எவ்வாறு? எனச் சிலர் கருதக்கூடும்.

'எம்பெருமான் நிர்குணன்' என்னும் வேதாந்த வாக்கியத்திற்கு, 'குணம் ஒன்றுமே இல்லாதவன்' என்பது கருத்தன்று; பின்னை

கருத்து யாதோ? எனின், 'தீயகுணம் சிறிதும் இல்லாதவன்' என்பதே கருத்தாம்.

'திருக்கலியாண குணங்களும் இல்லாதவன்' என்று பொருள் கொள்ளில், 'பேரறிவு, பேராற்றல் முதலிய எண்ணிறந்த திருக்கலி யாண குணங்களைப் பெற்றிருப்பவனும் எம் பெருமான்' என்னும் கருத்தைக்கொண்டுள்ள यस्सर्वज्ञः (யஸ்ஸர்வஜ்ஞ:) "परास्य शक्तिः" (பராஸ்ய சக்தி:) என்பனபோன்ற பல வேதாந்த வாக்கியங்களோடு முரண்பாடு உண்டாமன்றோ ?

இங்ஙனம், 'எம்பெருமான் திருக்கலியாண குணம் நிரம்பியிருக்கப் பெற்றவன்' என வேதாந்த வாக்கியம் இயம்புகின்றமையினு லும், இந்த ஜீவனும், எம்பெருமான் திருக் குணங்களில் ஈடுபட்டு, உவந்து, அடிமைத் தொழில் புரிகின்றமையினுலும், இங்கும் அடிமைத் தொழில் இன்பமாகவே இருக்கும் என்பதில், தட்டு ஒன்றுமில்லை.

இதுகாறும் கூறியவற்ருல், வேதாந்த வாக் கியங்களைக்கொண்டே, 'பரமபுருஷன் திருவுள் ளம் உகக்குமாறு அடிமை செய்வதே வீடு பேறு' என்பதை உணர்ந்தோமல்லவா ?

இனி, "ब्रह्मवेद ब्रह्मैव भवति" (ப்ரம்மவேத ப்ரஹ்மைவ பவதி) என்னும் வேருெரு வேதாந்த வாக்கியத்தையும், அவ்வாக்கியத் தில் மேலெழத்தோன்றும் கருத்தையும் காண் போம்.

"ஒருவன் குற்றத்தினுல், முத்துச்சிப்பியில் அதன் தன்மையை அறியாது, வெள்ளியின் தன்மையை அறிகின்ருன்; அவ்வறிவு பிரமம் எனப்படும். அந்தப் பிரமம் இருக்கும்போது, வெள்ளி உண்மைப் பொருளாய்த் தெரி கின்றது. அதனுல் அவன் அதை எடுக்கச் செல்கின்ருன். அங்ஙனம் சென்று, எடுத்து, நோக்குங்கால், 'இது வெள்ளியன்று, முத்துச் சிப்பி' என்று சிப்பியின் தன்மை புலனுகின்றது. அப்போது, அம்முத்துச் சிப்பியைத் தவிர, வெள்ளியோ, அதன் தோற்றமோ இல்லை; சிப்பி மட்டும் தென்படுகின்றது" இது போன்று,

ப்ரஹ்மமானது குற்றத்தினுல் பிரபஞ்ச மாகத் தோன்றுகின்றது. "தத் த்வம் அஸி" என்னும் வாக்கியத்தினுல், 'ஆத்மா ஒன்று தான் உண்டு' என்னும் உண்மையை உணரும் போது, இப்பிரபஞ்சமோ இதன் தோற்றமோ ஒன்றுமே இராது. அந்த ப்ரஹ்மம் மட்டும் இருக்கும். அங்ஙனம் அந்த ப்ரஹ்மம் மட்டும் இருக்கையே வீடு பேறும். இதுவே மேற் கூறிய வாக்கியத்தின் மேலெழத்தோன்றும் கருத்தாம்.

இக்கருத்தையும், முன்னம் கூறிய 'அடிமைத் தொழிலே வீடு பேறும்' என்னும் கருத்தை யும் ஒன்று சேர்த்துக் காண்போருக்குக் கலக் கம் உண்டாவது இயல்பேயாம்.

இக்கலக்கத்தை மீமாம்ஸா சாஸ்திர முறை யைக் கைக்கொண்டுபோக்கிக்கொள்ளுங்கால், "ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி" என்னும் வாக்கியம், 'ஆத்மாவினுடைய உண்மையை உள்ளபடி உணர்பவன் ப்ரஹ்மமாகவே ஆகிருன்' என்னும் கருத்தைக் காட்டுவதன்று; பிறகு எக்கருத்தைக் காட்டுகின்றதோ ? என்னில், 'மேற்கூறியவாறு உண்மையை உணருவோன், மோக்ஷ தசையில் பரமனேடு மிகவும் ஒற்றுமை பெற்றிருப்பவனும்' என் னும் கருத்தையே காட்டுவதாம்; என்பது நன்கு புலனும்.

இவ்வாக்கியத்தில் அமைந்துள்ள "ப்ரஹ் மைவ பவதி" என்னும் பகுதியில் "ப்ரஹ்ம மாக ஆகிருன்" என்னும் கருத்து காணப் பெறுகின்றது என்பது ஒருவாறு உண்மையே. இக்கருத்தையே கொள்ளில் ஜீவனுக்கும் பரம னுக்கும் உள்ள வேற்றுமையைப் பலவாருகக் கூறும் பல வேதாந்த வாக்கியங்களோடு முரண்பாடு உண்டாமன்ருே?

முன்னம் சேதனன் அர்ச்சிராதி வழியில் செல்லுதல், திருநாட்டிலே பரமபுருஷனைச் சேர்தல், அவனையும், அவன் திருக்குணங்களை யும், திருமேனியையும் அனுபவித்தல், ஆனந் தம் பெறுதல், அடிமை செய்தல், அப்பரமனை உவப்பித்தல் என்னும் பல நன்மைகளை அறி விக்கும் பல வாக்கியங்களைக் கண்டோ மல்லவோ?

மிகவும் ஒற்றுமையுள்ள இருபொருள்களை அவ்வொற்றுமை தோன்ற ஒன்ருகவே கூறுதலும் செய்யுள் வழக்கில் உள்ளதொன்றேயாம். தாமரை மலர் போன்றுள்ள கண்ணை அம்மலராகவே கூறுகின்ருரல்லவா? 'தாவி வையங் கொண்ட தடந்தாமரை' என்று.

இம்முறையைப் பின்பற்றி, "ப்ரஹ்மைவ பவதி" என்னும் சுருதியில் மேற்கூறியவாறு பொருத்தமான பொருளைக் காண்பதே நன்ரும்.

ஆனல், தலைவன், தொண்டன் இவ்விருவருள், தலைவனுக்குச் சிறப்பும், தொண்டனுக்குத் தாழ்ச்சியும் தென்படுகின்றன. இது போன்று, உண்மையில் தலைவனுன எம்பெருமானுக்குச் சிறப்பும் தொண்டனுன ஜீவனுக்குத் தாழ்ச்சியும் உண்டு என்றே கொள்ளுதல் வேண்டும். அங்ஙனமே பிரமாணங்களும் கூறுகின்றன.

உண்மை இவ்வாறு இருக்க, பரமனுக்கும் ஜீவனுக்கும் மிகவும் ஒற்றுமை உண்டு என்று கூறுவது யாங்ஙனம்? எனச் சிலர் கருதக் கூடும்.

ஓர் அரசனுக்கு அவன் புத்திரனைத் தொண்டன் என்றும், அந்த அரசனேடு மிகவும் ஒற்றுமை பெற்றிருப்பவன் அவன் புத்திரன் என்றும் காண்கின்ருேம். அது போன்றே இங்கும் ப்ரஹ்மத்திற்கு ஜீவன் தொண்டன் என்றும், அந்த ப்ரஹ்மத்தோடு மிகவும் ஒற்றுமை பெற்றிருப்பவன் என்றும் கொள்ளக் குறையில்லை 'நான் இராஜ குமாரன்' என்னும் கருத்தைப் பெற்றுள்ள 'अहं ब्रह्मास्मि' (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்னும் வாக்கியத்தை இங்குக் காண்க. அரசனுடைய புதல்வன் அரசனன்ருே?

இவ்வாறு உபேயத்தைக் குறிக்கும் வேதாந்த வாக்கியங்களின் கருத்தை மிமாம்ஸா சாஸ்திர முறையைப் பின்பற்றி, கலக்கம் சிறிது மறக் கண்டோம். இனி, இராமாயணத்தில் இவ் உபேயத்தைக் காண்போம்:

## இராமாயணமும் உபேயமும்

முதலில், எம்பெருமானுடைய அருளுக்கு இலக்கானவனை எம்பெருமானுகவே சுருதி இயம்புகின்றதே, இதை இராமாயணம் எவ்வாறு தெரிவிக்கின்றதோ, அதை அவ்வாறே அனுபவிப்போம்:

திருவடி அசோக வனத்தில் ஸீதாபிராட்டியாரைத் திருவடிதொழுது நிற்கும் போது, அப்பிராட்டியார் தாம், அத்திருவடியை நோக்கி, இவன் இராமதூதனே? அல்லனே? என ஐயமுற்று, உண்மையை உணரவிரும்பி, இஷ்வாகு குலத்திலே திருவவதாரம் செய்தருளின புருஷோத்தமர்களான இராம இலக்ஷ்மணர்களுக்கும், வானரரான ஸுக்ரீவன் முதலானுர்க்கும் தோழமை ஏற்பட்டதற்கு காரணம் யாதோ? ஏற்பட்டது எவ்வாருே? என்று வினவியிருப்பது நாம் அறிந்ததேயாம்.

அவ்வினுவிற்குத் திருவடி விடை விடுக்குங்கால், கூறிய வார்த்தை, "रामसुग्रीवयोरैक्यं देव्येवं समजायत" (ராம ஸுக்ரீவயோரைக்யம் தேவ் யேவம் ஸமஜாயத) என்பதாம்.

இவ்வார்த்தையின் கருத்து, பின்வருமாறு:- 'புருஷோத்தமனுகிய இராமபிரானே, மிக மிகப் பெரியோனும், ஒப்பற்ற மேன்மை பெற்றிருப்போனுமாம். குரங்காகிய ஸுக்ரீவனே, மிக மிகச் சிறியோனும், ஒப்பற்ற தாழ்ச்சி பெற்றிருப்போனுமாம். அப்பெருமான் இக்குரங்கைத் தோழமை கொள்வதற்குத் தக்க காரணம் இவன்பால் ஒன்றும் அறிகின்றிலேன், அம்மா! ஆயினும், இராமபிரான் ஸுக்ரீவன் ஆகிய இவ்விருவரும் ஒருவர் என்னலாம் படி, அவ்விருவருக்கும் உள்ள தோழமையைத் தான் அறிகின்றேன்.'

இன்னமும் கேட்டருளாய்: இராமபிரானுடைய தர்மபத்தினியாகிய தேவரீருக்கு இலக்குமணன் தூது வருதல் முறையாகும். அல்லது, உயிர்த்தோழனாகிய ஸுக்ரீவன் அங்ஙனம் தூது வருதல் முறை என்னலாம். நானோ, ஸுக்ரீவன் தொண்டர்களுள் மிகவும் கடைப்பட்டவன். இவ்வாறு கடைப்பட்டவனாகிய இத்தொண்டன், தூது வருமாறு அவ்விருவருக்கும் தோழமை ஏற்பட்டுள்ளது என்றால், அத்தோழமை எவ்வாறு உள்ளது என்பதற்கு யான் விடை விடுக்கவும் வேண்டுமோ? வேண்டாமன்றோ?

இங்கு, ''ராம ஸுக்ரீவ யோரைக்யம்'' என்றிருந்தாலும், 'அவ்விருவரும் ஒருவரே' என இயம்புவாரும் உண்டோ? இல்லையன்றோ? அவ்வாறு இயம்பினால், அதை உலகம் ஏற்குமோ?

சுருங்கச் சொல்லின், இராமபிரானும் ஸுக்ரீவனும் உண்மையில் வேறு வேறு பொருளாகவே இருப்பவராம். ஆயினும், இன்ப துன்பங்களை ஸமமாகப் பெற்றிருப்பவராம். அஃதாவது— இராமபிரானுடைய இன்பதுன்பங்களை ஸுக்ரீவனும், ஸுக்ரீவனுடைய இன்ப துன்பங்களை இராமபிரானும் பெற்றிருத்தலாம். இவ்வாறு இவ்விருவருக்கும் மிகவும் ஒற்றுமை இருப்பது பற்றி, இருவரும் ஒருவராகவே போற்றப் பெறுகின்றனர். இது போன்று, வீடுபேற்றைப் பெற்றிருக்குங்கால், பரமனுக்கும் ஜீவனுக்கும் உண்மையில் வேற்றுமை உண்டு, ஆயினும், மிகவும் ஒற்றுமையைப் பற்றி, ஜீவன் ப்ரஹ்மமாக ஆகிறான், எனப் போற்றப் பெறுகிறான் என்பது, இங்குத் தெளிவு அன்றோ?

இராமாயணம் இவ்வாறு 'ப்ரஹ்மைவ பவதி' என்னும் சுருதியின் கருத்தை, கலக்கம் சிறிதுமின்றி, யாருக்கும் எளிதில் விளங்குமாறு இயம்பியிருத்தலைக் கண்டோமல்லவா ?

இனி, இலக்குமணனுடைய சரிதத்தில், 'எம்பெருமானுக்கு அடிமை செய்து உவப்பிப்பதே இந்த ஜீவனுக்கு சிறந்த நன்மையாம்' என்பதைக் காண்போம் :

இராமாயணம் இயம்புகின்றவாறு, இலக்குமணனுக்கே உரிய சீரிய சிறப்புக்களை,

''பசியராயிருப்பார் அட்டசோறும் உண்ணவேணும், அடுகிறசோறும் உண்ணவேணும் என்னுமாபோலே, காட்டுக்குப் போகிற போது இளைய பெருமாள் பிரியில் தரியாமையை முன்னிட்டு அடிமை செய்யவேணும், எல்லா அடிமையும் செய்யவேணும், ஏவிக் கொள்ளவும் வேணும் என்றார்; படை வீட்டில் புகுந்த பின்பு, காட்டில் தனியிடத்தில் ஸ்வயம் பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே, ஒப்பூணுண்ண மாட்டாதே ஒரு திருக்கையாலே திருவெண்கொற்றக் குடையையும், ஒரு திருக்கையாலே திருவெண் சாமரத்தையும், தரித்தடிமை செய்தார்'' என்னும் ஸூத்திரத்தில், பிள்ளை லோகாசார்யர் வெகு அழகாக அருளிச் செய்திருக்கிறார். இந்த ஸூத்திரத்தின் கருத்து :—

மிக்க பசியுடையோர் தம் பசியின் மிகுதியினால், ஆக்கின சோறும், ஆக்குகின்ற சோறும் எல்லாம் தாமே உண்ணவேணும் என்று எண்ணுவர். இவர் போன்று, இலக்குமணனும் இராமபிரானுக்கு எல்லா அடிமைகளும் தானே செய்யவேணும் என்று எண்ணுகின்றான். இந்த இலக்குமணன், முளைக்கும்போதே மணத்தோடு முளைக்கும் திருத்துழாய் போன்று, திருவவதாரம் செய்யும்போதே இராமபக்தியோடு அவதரித்தவனும். ஆதலின், இராமபிரான் வனத்திற்கு எழுந்தருளும் போது, அவனுடன் செல்வதாக முயன்றனன். அம்முயற்சியைக் கண்ட இராமபிரான், 'இலக்குமணா! நீ இத்திரு அயோத்தியிலேயே இருப்பாய்' என்றனன். அப்போது, இலக்குமணன், (நீரைப் பிரியில் உயிர் தரியாத மீன்நிலை போன்றுள்ள) அந்த இராமபிரானைப் பிரியில் உயிர் தரியாத தன் நிலையை முன்னிட்டு, ''நானோடு சேர்ந்த வில்லைத் தாங்கியும், உனக்கு முன்னே சென்றும், ஆங்கு ஆங்கு வழி காட்டியும், காய், கனி முதலியவற்றைத் தேடிக் கொணர்ந்து உதவியும் இவ்வாறான அடிமையை இராமா! நான் உனக்குச் செய்வேன் ; என்னை அழைத்துச் செல்வாய்' என வேண்டிக் கொண்டனனும்.

அன்றியும், அப்பெருமானை அந்த இலக்குமணனே, தேவரீருக்குத் தொண்டு செய்யப் பெறாத போது, நான் உயிர் தரியேன். தேவரீரோ எனில், நிறைவாளராகையாலே

தொண்டைக் கொள்ளாவிடினும், உயிர் தாங்கத் தக்கவர். ஆயினும், என்னிடம் அடிமை கொண்டால தேவரீருக்கும் பெருமை உண்டு. ஸீதாப்பிராட்டியார் தேவரீர் ஆகிய இருவரும் மலைச்சாரலில் விளையாடும் போதும், திருக்கண்வளருங் காலத்தும், அங்ஙனம் கண் வளருதலின்றி விழித்திருக்குங்காலும் எல்லா அடிமைகளும் செய்ய வேணும். என் விருப்பத்துக்காக இன்றி, தம் விருப்பத்துக்கேற்ப ஏவி, என்னிடம் பணியை திருவுள்ளம் பற்ற வேணும்' என்றும் விரும்பிப் பெற்றனனும்.

இன்னமும், தானே சமையல் செய்து தானே உண்ணும் ஒருவன், நாளடைவில் தன் வயிற்றைப் பெருக்கிக் கொள்வான்; மற்றவனோடு உண்ண இசையான். இவன் போன்று, இலக்குமணனும், தானே வனத்தில் இராமபிரானும் ஸீதாபிராட்டியுமாகிற சேர்த்தியில், எல்லா அடிமைகளையும் செய்து, அடிமைக் கண் அன்பை பெருக்கிக் கொண்டவன் மற்றும் பரதன் முதலானோரோடு தானும் ஓர் அடிமை செய்ய இசைந்திலன். இவ்விசையாமையே எங்கே கண்டோம்? என்னில், இராமபிரான் வனவாஸத்தைச் செய்து, மீண்டு திரு அயோத்திக்கு எழுந்தருளி, முடி சூடியிருக்கும் போது, ஒரு கையால் திருவெண் கொற்றக் குடையை எடுத்துப்பிடித்தும், மற்றொரு கையால் திருவெண்சாமரத்தைப் பணிமாறியும் இவ்வாறு இரண்டு அடிமையை ஒரு காலத்தில் செய்தனனும்.

இங்கு, "न च सीता त्वया हीना न चाहमपि राघव...... जलान्मत्स्याविवोद्धृतौ ।।" "धनुरादाय सगुणं......अग्रतस्ते गमिष्यामि पन्थानमनुदर्शयन् । आहरिष्यामि ते नित्यं मूलानि च फलानि च ।।" "भवांस्तु सह वैदेह्या गिरि सानुषु रंस्यते । अहं सर्व करिष्यामि जाग्रतः स्वपतश्च ते ।" "क्रियतामिति मां वद ।।" "छत्रं च चामरं दिव्यं धृतवान् लक्ष्मणस्तदा ।।"

(நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ ஜலான் மத்ஸ்யாவிவோத்ருதௌ ॥ தனுராதாய ஸகுணம். . .அக்ரதஸ் தே கமிஷ்யாமி பந்தானமனுதர்சயன், ஆஹரிஷ்யாமி தே நித்யம் மூலாநி ச பலானி ச ॥ பவாம் ஸ்துஸஹ வைதேஹ்யா கிரிஸானுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதச்ச தே ॥ க்ரியதாமிதி மாம் வத ॥ சத்ரம் ச சாமரம் திவ்யம் த்ருதவான் லக்ஷ்மணஸ் ததா ॥) என்னும் இவை காணத் தக்கன.

இனி, இங்கு மற்றொரு முக்கியப் பொருளையும் நாம் ஆராய்ந்து அறிதல் இன்றியமையாததாம். முன்னம் கூறிய பகுதிகளில், 'இராமபிரான், ப்ரஹ்ம சப்தப் பொருளான நாராயணனே' என்பது நமக்கு விளங்குகின்றது. ஆயினும், 'அப்பரமன் திருக்கலியாண குணமும் இல்லாதவனா? அல்லது தீய குணம் சிறிதும் இன்றி, திருக்கலியாண குணம் நிரம்பி இருக்கப் பெற்றவனா? இராமாயணம் இப்பரமனை இயம்புகின்றது எவ்வாறோ? என்னும் இக்கேள்வி இங்கு ஏற்படுவது இயல்பேயாம். இதற்கு விடை பின்வருமாறு—

ஒரு நூலின் உண்மைக் கருத்தை உணரும்போது, அங்ஙனம் உணர்தற்கு ஏதுவாயுள்ள வழி சில உண்டு. அவ்வழியைப் பின்பற்றிக் காணுங்கால், உண்மை நன்கு புலனாகும். இம்முறையில் ஒரு வழியை இங்குக் காண்போம். இராமாயணம், முதலிலும், இடையிலும், இறுதியிலும் எப்பொருளை எவ்வாறு இயம்புகின்றதோ, அதை அவ்வாறே அறுதியிடுதல் மேற்கூறிய வழியாகும்.

இராமாயணம் முதன் முதலில் இராமபிரானைக் கூறுகின்றது எவ்வாறோ? எனின், 'திருக்கலியாண குணமும் இல்லாதவன்' என்று கூறவில்லை; 'தீயகுணம் சிறிதும் இன்றி, திருக்கலியாண குணமே நிரம்பியிருக்கப் பெற்றவன்' என்றே கூறுகின்றது.

நாரதமுனிவனை நோக்கி, வால்மீகி முனிவன் மிக வணக்கத்துடன், இக்காலத்தில் இவ்வுலகில் சீலம் முதலிய எல்லா நற்குணங்களும் பொருந்தியிருப்பவன் யாவன்? என வினவ, யாவும் அறிந்த அந்நாரத முனிவன், 'இக்ஷ்வாகு குலத்தில் திருவவதாரம் செய்தருளின இராமபிரான், எல்லாத் திருக்கலியாண குண கணங்களும் பொருந்தியிருக்கப் பெற்றவனும்; எங்ஙனம் கடல் தன்னிடத்துள்ள சிறந்த

இரத்தினம் முதலிய பொருளைப் பிறர் அறியாதவாறு மறைத்து வைத்திருக்கின்றதோ, அங்ஙனமே இராமபிரான் (உலக நன்மையை உண்டுபண்ணுவதான) தன்னிடத்திலுள்ள சிறந்த திருவுள்ளக் கருத்துக்களைப் பிறர் அறியாதவாறு மறைத்து வைத்திருப்பவனும்; வீரத்தன்மையில் விஷ்ணு போன்றவன்; பதினாறு கலைகளோடு கூடிய பூரண சந்திரன் போன்று காண இனியன்; காலாக்னி போல் சீற்றமுடையவன்; பொறுமையில் பூமியோடு ஒத்தவன்; ஸத்தியத்தில் தரும தேவதையே வடிவெடுத்தது போன்றவன் என்று விடை கூறினன்.

இங்கு, 'कोन्वस्मिन्सांप्रतं लोके गुणवान् कश्च वीर्यवान्' (கோன்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே குணவான் கச்ச வீர்யவான்) என்னும் வால்மீகி முனிவன் வார்த்தையும்,

"इक्ष्वाकुवंशप्रभवो रामो नाम जनैः श्रुतः। समुद्रइव—गांभीर्ये। विष्णुना सदृशो वीर्ये। सोमवत्प्रियदर्शनः। कालाग्नि सदृशः क्रोधे क्षमया पृथिवीसमः। सत्ये धर्म इवापरः" (இக்ஷ்வாகு வம்ச ப்ரபவ: ராமோ நாம ஜநை: ச்ருத: । ஸமுத்ர இவ காம்பீர்யே விஷ்ணுநா ஸத்ருசோ வீர்யே । ஸோமவத் ப்ரியதர்சன: । காலாக்னிஸத்ருச: க்ரோதே க்ஷமயாப்ருதிவீ ஸம: । ஸத்யே தர்மஇவாபர:) என்னும் நாரத முனிவன் வார்த்தைகளும் காணத்தக்கன.

இவ்வாறு, வேதாந்தக் கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்க வந்த (உபப்ரும்ஹணமாகிய) இராமாயணம் முதன் முதலிலேயே இராமபிரானுடைய திருக்கலியாண குணங்களை, ஆசார்யன் சீடனுக்குக் கூறும் முறையில் மிகமிகத் தெளிவாக இயம்பியிருத்தலைக் கண்டோம். இனி, இடையிலும் காண்போம்:

அயோத்தியா காண்டம் முதலில் கூறப்பெற்றுள்ள வரலாறு பின்வருமாறு— சக்ரவர்த்தி, ஸபையில் வீற்றிருக்கும் அரசர் முதலானோரை நோக்கி, 'இது மிகப் பெரிதான இராச்சியம். இதை என் முன்னோரான மன்னவர் மிகுந்த மனவூக்கத்துடன் பாதுகாத்து வந்தனர். அவரது வம்சத்தில் பிறந்த நானும், மனுநெறியைப் பின்பற்றி எனது அறிவு ஆற்றல்களுக்கு ஏற்றவாறு இது வரையில் பாதுகாத்து வந்தேன். எனது சரீரம் மிகவும் மூப்படைந்து விட்டது. ஆதலின், இந்த அரசுரிமையை இராமபிரானிடம் வைத்து, வருத்தந் தீர்ந்து, இனிது வாழ விரும்புகின்றேன். இது பொருத்தமான செயல் என்று நீவீர் எண்ணியிருப்பின், நுங் கருத்தைத் தெரிவிக்க வேண்டுகின்றேன்' என்று கூறினன்.

இதைச் செவிமடுத்த அவையிலுள்ள அரசர் முதலானோரனைவரும் அளவற்ற ஆனந்தம் அடைந்தனர்; மிகமிகப் பெரிய கோஷத்தைச் செய்தனர்; அப்பெரிய கோஷத்தினால் எதிரொலியைக் கிளப்பி அங்குள்ள விமானத்தை அசையச் செய்தனர். இவ்வாறு தம் ஆனந்தத்தை அறிவித்து, இப்போதே இராமபிரான் இராச்சியத்தை ஏற்று, முடிசூடி, பட்டத்து யானையின் மீது திருவெண் கொற்றக் குடை நிழலில் எழுந்தருளும் சிறப்பைக் கண்டு களிக்கவேணும் என்றனர்.

இவ்வாறான களிப்பைக் கண்ட தசரத மன்னவன், திரும்பவும் அவ்வரசர் முதலானோரைக் குறித்து, 'நீவீர் பேரிரைச்சல் செய்து கூறுவதை நோக்குங்கால், இது வரையில் கொடுங்கோல் மன்னனான தசரதன் பாதுகாத்து வந்தான்; இவன் விலகுவது நலம்; இனி, செங்கோல் மன்னனான இராமபிரான் இராச்சியத்தை ஏற்றுப் பாதுகாக்கப் போகிறான்; நமக்கு இனி நற்காலம்! என்னும் நுங் கருத்து வெளிப்படுகின்றதே! இவ்வாறு என்னை வெறுத்துக் கூறுதற்குக் காரணம் யாதோ? எனக்குக் குற்றம் ஏதேனும் உண்டோ?' என்றனன்.

சக்ரவர்த்தியின் இவ்வார்த்தையைக் கேட்ட அரசர் முதலானோர், ஒரு கருத்துடன், 'மன்னர்பிரானே! தேவரீருக்குக் குற்றம் உண்டு' என்று கூறினர். அக்குற்றம் யாதோ? என்று அம்மன்னர்பிரான் கேட்க, ("बहवो नृप कल्याणगुणाः पुत्रस्य सन्ति ते" பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே)

எண்ணிறந்த திருக்கலியாண குணக் கூட்டங்களுக்குக் கடலான இராமபிரானைப் புத்திரனுகப் பெற்றிருப்பதே தேவரீருக்கு உள்ள குற்றம். அதனுலேயே தேவரீரை வெறுக்கின்றோம் என்றனர்.

இவ்வாறு, இராமாயணத்தின் இடையில் இராமபிரான் திருக்குணங்களைச் சுருக்கமாய்க் கண்டோம். இனி, இறுதியில் காண்போம்.

'இராமபிரான் பதினான்கு வருடம் வனத்தில் வசித்து, அதினின்றும், மீண்டு திரு அயோத்திக்கு எழுந்தருளி, முடிசூடி, பதினோராயிரம் ஆண்டு இராச்சியத்தைப் பாது காத்து வந்தான்' என்பது சரித்திர உண்மை. அவன் மன்னர்பிரானுயிருந்து அரசு புரியுங் கால், மக்களின் மனோநிலைமையைக் கண் கூடாகக் கண்ட வால்மீகி முனிவன், ("सर्वं मुदितमेवासीत् सर्वो धर्मपरोऽभवत्" ஸர்வம் முதிதமேவாஸீத் ஸர்வோ தர்மபரோபவத்) மக்களனைவரும் மனமகிழ்ச்சியுடனும், அவரவருக்குரிய தருமங்களில் ஊற்றம் பெற்றிருப்பவருமானர் என்று கூறியிருக்கிருன். இங்ஙனம் அனைவரும் இருப்பதற்கு காரணம் யாதோ? எனின், இந்த இராமபிரானுடைய திருக்கலியாண குணமேயாம். "रामो राज्य-मुपासित्वा" (ராமோ ராஜ்யமுபாஸித்வா) என்னும் வசனம் இங்குக் காணத்தக்கது.

இராமன் தன் தேஜஸ்ஸினுல் மக்களை அடக்கி ஒடுக்கி ஆண்டவனல்லன். தன் திருக் கலியாண குணத்திற்கு ஏற்ப, இனிய நல் வார்த்தைகளைக் கூறி, பின் சென்று, வயப் படுத்தி, ஆண்டவன் என்கிருன்.

இவ்வாறு இராமாயணத்தில், 'இராமபிரான் திருக்கலியாண குணம் நிரம்பியிருக் கப்பெற்றவன்' என்பதைக் கண்டோம். 'இலக்குமணன் இராமபிரானுடைய அத்திருக் குணங்களில் மிகவும் ஈடுபட்டு உவப்புடன் எல்லா அடிமைகளும் செய்தவன்' என்பதையும், 'गुणैर्दास्यमुपागत.' (குணைர்தாஸ்யமுபாகத:) என்னும் அந்த இலக்குமணன் வாக்கியத்திலேயே நாம் நன்கு காணலாம்.

இங்ஙனம் இராமாயணத்தில் உபேயத்தைக் கண்டோம். இனி, ஐம்பொருள்களுள் ஒன்ருகிய விரோதியைக் காண்போம்.

## வேதாந்தமும் விரோதியும்

எம்பெருமானை ஜீவன் அடையாதவாறு எது தடையாய் நிற்கின்றதோ, அது, 'விரோதி' எனப்படும். வேதாந்தம் அஜ்ஞானம், கருமம், ப்ரக்ருதி ஸம்பந்தம் முதலியவற்றை விரோதியாய் இயம்புகின்றது. இதைச் சிறிது விவரித்துக் கூறுவோம்:

அஜ்ஞானம், 'கை, கால் முதலிய உறுப்புக் களோடு கூடிய பிண்டமே ஆத்மா' என எண்ணும் எண்ணமும், 'தான் எம்பெருமானுக்கு உரியவனல்லன்; தனக்காகவே இருப்பவன்' என எண்ணும் எண்ணமுமாகும். இவ்விரு எண்ணங்களுள், முன்னது, 'தேஹாத்மாபிமானம்' என்றும் பின்னது, 'ஸ்வாதந்திரியாபிமானம்' என்றும் கூறப் பெறும்.

தேஹாத்மாபிமானத்தைச் சிறிது விளக்கிச் சான்றுடன் கூறுவோம்: 'இரும்புத் துண்டு, நெருப்பு இவ்விரண்டும் வேறு வேறு பொருள் களாயிருப்பினும், நெருப்பிலிட்டுப் பழுக்கக் காய்ச்சிய அந்த இரும்புத்துண்டு, நெருப்புத் தொடர்பின் மிகுதியினுல் நெருப்பாகவே எங்ஙனம் தோன்றுகின்றதோ, அங்ஙனமே, ஆத்மா, சரீரம் இவ்விரண்டும் வேறு வேறு பொருள்களாயிருப்பினும், அந்த ஆத்மாவும், சரீரத் தொடர்பின் மிகுதியினுல் சரீரமாகவே தோன்றுகின்ருன்' என்பதை நாம் அறிதல் வேண்டும்.

இவ்வாறு, 'சரீரமே ஆத்மா' என எண்ணுங் கால், உண்மை உணர்வு சிறிதும் இல்லை. ஆதலின், (உணர்வின்மையே உறக்கமாதலின்)

ஜீவனை உறங்குகின்றவனுகவே "अनादि मायया सुप्त:" (அனுதி மாயயா ஸுப்த:) என்னும் சுருதி இயம்புகின்றது. (இந்தச் சுருதியில் மாயா சப்தம் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களோடு கூடிய ப்ரக்ருதி என்னும் அசித்தைக் கூறும் வழியால் சரீரம் என்னும் பொருளைக் குறிக்கின்றது.)

'உண்டி உடைகளை உவந்து அவற்றைப் பெற ஓடித் திரியுங்காலத்தும், ஜீவனுக்கு இவ்வுறக்கம் உண்டு. அதனுல் நன்மை சிறிதும் இல்லை. எப்போது, உறக்கம் போய் உண்மையை உணருகின்றனனே, அப்போது தான் நன்மை உண்டு' என்னும் கருத்தைக் கொண்டுள்ளதும், 'அனுதி மாயயா ஸுப்த:' என்னும் வாக்கியத்தோடு தொடர்புற்றதுமான "यदा जीव: प्रबुद्ध्यते" (யதா ஜீவ: ப்ரபுத்யதே) என்னும் சுருதியைக் காணுமவர்க்கு 'தேஹாத்மாபிமானம்' தடை என்பது நன்கு புலனுகும். இங்ஙனம் தேஹாத்மாபிமானத்தைச் சுருக்கமாய்க் கண்டோம். ஸ்வாதந்திரியாபிமானத்தையும் இனிக் காண்போம் :

'ஆத்மா, அறிவுடையவன்' என்ற போதே, 'ஸ்வதந்திரன்' என்று கூறியதாகத் தேறும். எங்ஙனம் என்னில்,

இந்த ஜீவன், முதலில் ஒரு பொருளை உள்ளபடி அறிகிஞன்; பின்பு, அப்பொருளின் சீர்மையைப்பற்றி அதை விரும்புகிறுன் ; அதன் பிறகு அதை அடைய முயல்கிறுன் ; அதற்கேற்ப ஏதுவைத் தேடுகிறுன் ; முடிவில் அதை அடைந்து, இன்பம் பெறுகிறுன் இவற்றை, வடமொழியாளர், जानाति, इच्छति, यतते, करोति, अनुभवति (ஜாநாதி, இச்சதி, யததே, கரோதி, அனுபவதி) என்பர்.

இவற்றை நோக்குங்கால், அறிவுடையனை ஜீவன், தனக்காக ஒன்றை விரும்பி, முயன்று, செய்து, இன்பம் துய்ப்பவன்' என்பது தெள்ளிதின் விளங்குகின்றதன்றே? இங்ஙனம் இருக்கின்றமையின், 'இவன் ஸ்வதந்திரன்' எனப்படுகிறுன்.

அஷ்டாக்ஷரத்தில் முதல் பதம் பிரணவம். அப்பிரணவம் அ, உ, ம் என்னும் மூன்று எழுத்துடையது. அம்மூன்றுனுள், 'ம்' என்னும் எழுத்து அறிவுடையனை ஜீவனைக் குறிக்கின்றது.

இவ்வாறு, 'அறிவுடையவன்' என்பதை அறிவிக்கும் 'ம்' என்னும் அக்ஷரத்தாலும், 'நான் இதை அறிகிறேன்' என்னும் அனுபவத்தாலும், 'ஜீவன் ஸ்வதந்திரன்' என்பதை நாம் அறியலாகும். இங்ஙனம் தன்னை ஸ்வதந்திரனுக (தன் விருப்பத்திற்கு ஏற்ப ஒன்றில் முயன்று, செய்து, பெற்றுப் புஜிப்பவனுக) அறியுங்காலத்து, உண்மை உணர்வும் பெற்றிரான்; தன் நிலைக்கேற்ற பயனையும் பெறுன்.

இதனுல்தான், அஷ்டாக்ஷரத்தில், நடுவில் அமைந்துள்ள 'நம:' என்னும் பதமானது, 'ம்' என்னும் அக்ஷரத்தினுல் தேறிய ஜீவனுடைய ஸ்வாதந்திரிய நிலையை இல்லை செய்து, பாரதந்திரிய நிலையையே இவனுக்குரிய சீரிய தன்மையாக அறிவிக்கின்றது 'நம:' என்பதில், 'ம: ந' என்று எழுத்துக்களைப் பிரித்துக் கூட்டி, 'எனக்கு நான் இல்லை; எம்பெருமானுக்கே உரியவன்' என்னும் பொருள் கொள்ளப் பெற்றுள்ளது. அஃது இங்குக் காணத்தக்கது.

"தனக்குப் பாரதந்திரிய நிலையை உண்மையாக உணருங்கால், நன்மை உண்டு; அப்பாரதந்திரிய நிலைக்கு எதிரான ஸ்வாதந்திரிய நிலையை உணருங்கால், நன்மை இல்லை" என்பது அஷ்டாக்ஷர மஹா மந்திரத்தில் தேறிய ஸாரம் பொருளாதலின், 'ஸ்வாதந்திரியாபிமானம்' தடை என்பது தெளிவு.

இனி, கருமம் தடை என்பதைக் காண்போம்: புண்ணியமும் பாவமும் கருமம் எனப்படும். இக்கருமம் எம்பெருமானை அடையவொட்டாது தடுக்கின்றது. ஆதலின், 'விரோதி' எனப்படுசின்றது.

ஆனுல், பொய் கூறுதல் முதலிய பாவம் தடை என்னில், அதை நம் மனம் ஏற்கின்றது போன்று, புண்ணியமும் தடை என்னில், அதை நம் மனம் ஏற்குமோ? ஏற்காதன்றே? உண்மை இங்ஙனம் இருக்க, புண்ணியத்தைத் தடையாக கூறுவது யாங்ஙனம்? எனச் சிலருக்கு இங்கு ஐயம் எழக்கூடும்.

இதற்குப் பரிஹாரம் பின் வருமாறு ; 'புபுக்ஷு', முமுக்ஷு என மானிடரை இருவகையில் வகுத்துக் காணுதல் வேண்டும். இம்மை மறுமைகளில் இன்பத்தை விரும்புகின்றவன் புபுக்ஷு என்றும், பரம புருஷனை அடைய விரும்புகின்றவன் முமுக்ஷு என்றும் கூறப்படுகின்றனர். புபுக்ஷு நிலைமைக்கேற்ப இம்மை மறுமைகளில் ஒரொரு நன்மைக்கு ஏதுவாய் உள்ளது புண்ணியம் எனப்படும். உதாரணமாக இவ்வுலகில் பசு, பூமி, புத்திரன், முதலிய நன்மைக்கு ஏதுவாயுள்ள புண்ணியங்களையும், மறுமையில் ஸுவர்க்கம் முதலிய நன்மைக்கு ஏதுவாயுள்ள புண்ணியங்களையும் நாம் காணலாம். இப்புண்ணியங்கள், பரமபுருஷனை விரும்புபவனுக்கு (முமுக்ஷுவிற்கு) இம்மை மறுமைப் பயன்களைக் கொடுத்துத் தடையாயிருக்கின்றமையின், பாவங்களேயாம்'.

"अश्व इव रोमाणि विधूय पापम्" (அச்வ இவ ரோமாணி விதூய பாபம்) என்னும் சுருதி வாக்கியமானது. குதிரை தன் ரோமங்களை விடுவது போன்று, புண்ணிய பாவங்களாகிற கருமத்தை விட்டு, பரமனுடைய உலகத்தை இந்த ஜீவன் அடைவதாகக் கூறுகின்றமையின், கருமம் தடை எனத் தெரிகிறதன்றோ?

"पुण्यपापे विधूय निरंजन: परमं साम्यमुपैति" (புண்ய பாபே விதூய நிரஞ்ஜன: பரமம் ஸாம்ய முபைதி) என்னும் வாக்கியமும் இங்குக் காணத்தக்கது.

இக்கருத்தாலே பொய்யில் புலவரும், 'இருள் சேரிரு வினையுஞ் சேரா' என்று கூறிச் சென்றனர்.

இதுகாறும், கூறியவாற்றால் கருமம் தடை என்பதைக் கண்டோம். இனி, ப்ரக்ருதி ஸம்பந்தம் விரோதி என்பதைக் காண்போம்:

'ப்ரக்ருதி ஸம்பந்தம்' என்னுமிடத்திலுள்ள 'ப்ரக்ருதி' என்னும் சொல், தேவ சரீரம், மானிட சரீரம், விலங்கு சரீரம், தாவர சரீரம் என்னும் நான்கு வகையிலுள்ள அசித்தைக் குறிக்கும்; ஸம்பந்தம் என்னும் சொல், அந்த அந்தச் சரீரத்திற்கும் ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பைக் குறிக்கும். இத்தொடர்பு, எம்பெருமானைப் பெற்று, பூர்ணமாக அனுபவித்து, அடிமை செய்து, அவனை உவப்பிப்பதற்குத் தடையாயிருக்கின்றது.

இப்பொருள் "तस्य तावदेवचिरं यावन्न-विमोक्ष्ये अथ संपत्स्ये" (தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே) என்னும் சுருதியினால் நன்கு விளங்கும். இந்தச் சுருதியின் கருத்து: "ஸத் என்னும் பரமனைப் பஜனம் செய்பவனுக்குச் சரீரத் தொடர்பு உள்ளவரையில் விளம்பம் உண்டு; சரீரத் தொடர்பு மறுவவிடாதபடி விட்டதும் பரமனை அடைகின்றான்" என்பதாம். இதனால், 'சரீரம் தடை' என்பது வெள்ளிடைமலை. இவ்வாறு, ப்ரக்ருதி ஸம்பந்தம் தடை என்பதைக் கண்டோம்.

மேற்கூறிய அஜ்ஞானம் முதலியவை போன்று, அஜ்ஞான வாஸனை, கரும வாஸனை, ருசி ஆகிய இவையும் பரமபுருஷனை அடையவொட்டாது தடையாயுள்ளனவாம்.

பாம்பு முதலியவற்றைக் காணும் போது, உண்டாகும் அச்சம் முதலியவற்றுக்கு காரணமாயுள்ளது 'அஜ்ஞான வாஸனை' என்றும், துரும்பு முதலியவற்றைக் கிள்ளுதற்குக் காரணமாயுள்ளது 'கரும வாஸனை' என்றும், பாவச் செயல்களையோ, புண்ணியச் செயல்களையோ அறிந்தே செய்தற்குக் காரணமாயுள்ள சுவை 'ருசி' என்றும் நாம் அறிதல் வேண்டும்.

இங்ஙனம், அஜ்ஞானம், கருமம், ப்ரக்ருதி ஸம்பந்தம், அஜ்ஞான வாஸனை, கரும வாஸனை, ருசி இவை பரமனை அடைவதற்குத் தடையாய்க் கண்டோம். இனி, சிலருடைய கருத்துக்கிணங்க வேறொருவாறு தடையைக் கூறுவதாகத் தோன்றும் வேறொரு வேதாந்த வாக்கியத்தையும் காண்போம்.

"तद्यथा हिरण्यनिधिं निहितमक्षेत्रज्ञा उपर्युपरि सञ्चरन्तो न विन्देयु: एवमेवेमा: सर्वा: प्रजा: अहरहर्गच्छन्त्य: एतं ब्रह्मलोकं न विन्दन्ति अनृतेन हि प्रत्यूढा:" (தத் யதா ஹிரண்யநிதிம் நிஹிதம்

அக்ஷேத்ரஜ்ஞா: உபர்யுபரி ஸஞ்சரந்த: ந விந்தேயு: எவ மேவ இமா: ஸர்வா: ப்ரஜா: அஹரஹர் கச்சந்த்ய: ஏதம் ப்ரஹ்ம லோகம் ந விந்தந்தி அந்ருதேன ஹி ப்ரத்யூடா:) என்பதே அவ்வேதாந்த வாக்கியமாம்.

இவ்வாக்கியத்தின் கருத்து : 'பூமியின் கீழே உள்ள புதைபொருளை அப்பூமியின் இயல்பை உணராதார், தினந்தோறும் அப்பூமியின் மேலே செல்பவராயிருந்தும், எங்ஙனம் பெறுகிறாரில்லையோ, அங்ஙனமே, மிகமிகச் சிறந்த பயனும், ஆத்மாவுமான பரமனை உணராதார், எல்லாக் காலத்தும் அவனோடு ஒருவாறு தொடர்புற்றிருந்தும், பெறுகிறாரில்லை. இவர் பொய்யான அஜ்ஞானத்தினால் ஆத்மாவினிடத்தில் நின்றும் இழுக்கப் பெற்றும், மறைக்கப் பெற்றும் இருப்பவரன்றோ?' என்பதாம்.

இங்கே, பின்குறிக்கப்பெறும் பொருள் முக்கியமாய் அறியத்தக்கதாம் — ''முத்துச்சிப்பி வெள்ளியாய்த் தோன்றுதற்குக் காரணம் குற்றம் என்பது உலகானுபவத்தினால் எங்ஙனம் புலனாகின்றதோ, அங்ஙனமே, ப்ரஹ்மம் பிரபஞ்சமாய்த் தோன்றுதற்குக் காரணம் குற்றம்'' என்பதும் பிரமாணத்தினால் (வேதாந்த வாக்கியத்தினால்) புலனாகின்றது. அக்குற்றம் அவித்யை. அஜ்ஞானம் என்பன போன்றுள்ள சப்தங்களினால் குறிக்கப் பெறுகின்றதாம். அந்த அஜ்ஞானமும், அதனால் உண்டாம் பிரபஞ்சத்தோற்றமும், பிரபஞ்சமும் பொய்ப்பொருளாம்.

''தத் த்வம் அஸி'' என்னும் வாக்கியத்தினால், ஆத்மா ஒருவனே உண்மைப் பொருள் என்னும் உண்மை உணர்வு உண்டாகும் போது, மேற்கூறிய அஜ்ஞானமும், அதன் காரியங்களும், அழிந்து விடுகின்றமையின், 'அந்த அஜ்ஞானமும் அதன் காரியங்களும் பொய்ப் பொருள்' என்பது தெளிவாக விளங்குகின்றது ? ''இதைத்தான் மேற்கூறிய வேதாந்த வாக்கியத்திலுள்ள அந்ருத சப்தம் இயம்புகின்றது'' என்பதே அறியத்தக்க அம்முக்கியப் பொருளாம்.

'அஜ்ஞானமும், அதன் காரியமும் உண்மை உணர்வினால் போக்கத் தக்கவையாயிருத்தலின், பொய்ப் பொருள்களாம்' என்பதும், 'அந்த அஜ்ஞானமே, ப்ரஹ்மமாக மாத்திரம் இருக்கும் இருப்புக்குத் தடை' என்பதும் இங்குத் தேறிய ஸாரப் பொருள்களாம்.

இக்கருத்தையும், மேற்கூறிய (அஜ்ஞானம், கருமம், ப்ரக்ருதி ஸம்பந்தம் முதலியவை தடை என்னும்) கருத்தையும் வேத வாக்கியங்களிலே காணுமவர்க்குக் கலக்கம் ஏற்படுவது இயல்பேயாம். இக்கலக்கத்திற்கு, மீமாம்ஸா சாஸ்திர முறையைப் பின்பற்றிக் காணுங்கால் உண்டாம் பரிஹாரம் பின்வருமாறு—

''நோய்வாய்ப்பட்டிருக்கும் ஒருவன் மருத்துவனைக் கிட்டி, தன் நோய் தீருமாறு மருந்தைப் பெற விரும்புகின்றான். அம்மருத்துவனும், அவன் நோயை உள்ளபடி உணர்ந்து, அந்நோய்க்குத் தக்க மருந்தைக் கண்டு, உதவுகின்றான். அங்ஙனம் உதவப் பெற்ற அந்நோயாளியும், அம்மருந்தை உட்கொள்ள, அவன் நோய் தீருகின்றது. இதை இங்கு எடுத்து நாம் நோக்குதல் வேண்டும். நோக்கின் நோயின் உண்மையை உணர்ந்து, தக்க மருந்தை உதவுகின்றதும், நோயின் பொய்மையை உணர்ந்து அங்ஙனம் மருந்தை உதவா தொழிகின்றதும் யார்க்கும் நன்கு விளங்குகின்றன அல்லவா? நோயின் பொய்மையை உணர்ந்தும், மருந்தை உதவுவார் உண்டோ? இல்லையன்றோ?

இதுபோன்று, ப்ரஹ்மம் பிரபஞ்சமாய்த் தோன்றுதற்குக் காரணமாயுள்ள குற்றம் (அஜ்ஞானம்) உண்மையாயிருப்பின், அது தீருவதற்கு, 'தத் த்வம் அஸி'' என்னும் சாஸ்திரம், 'ஆத்மா ஒருவனே உண்டு' என்னும் உண்மையை உணர்த்தி, உதவி செய்ய இடம் உண்டாம். 'அஜ்ஞானம் உண்மை இல்லை' என்னில், 'சாஸ்திரம் உதவி செய்ய இடம் இல்லை' என்பதைக் கூறுதலும் வேண்டுமோ? வேண்டாமன்றோ ?

'அஜ்ஞானமும் உண்மைதான்' என்று கொள்ளில், 'ஆத்மா ஒன்று தான் உண்மைப் பொருள்; மற்றொன்றும் உண்மையில் இல்லை' என்னும் கொள்கைக்கு இடமுண்டோ? இல்லையன்றோ? ('அஜ்ஞானமும் உண்மை' என்று கொள்ளுங்கால், அஜ்ஞானமும் ஆத்மாவும்

உண்மைப் பொருள்களாய்த் தேறுகின்றன அல்லவா? 'ஆத்மாவைத் தவிர ஒன்றும் உண்மையில் இன்று' என்பது பொருந்துவது எவ்வாறு?)

இதனுல் என்ன தேறிற்று? என்னில் 'ப்ரஹ்மம் பிரபஞ்சமாய்த் தோன்றுதற்கு ஏதுவான அஜ்ஞானத்தை உண்மையாகவோ, பொய்மையாகவோ ஒத்துக் கொள்வதற்கு இல்லை' என்னும் கலக்கமே தேறிற்று.

இவற்றை நெஞ்சில் கொண்டு நோக்குவார்க்கு, ''தத் யதா ....அந்ருதேந ஹி ப்ரத்யூடா:'' என்னும் சுருதிக்கு மேற்கூறியவாறு கருத்துரைத்தல் பொருத்தமுடைத்தன்று என்ருல், வேறு கருத்து யாதோ? எனின், கூறுவோம்.

ஒருவன் செய்யும் கருமம், பயனில் சிறிதும் விருப்பம் இன்றி, எம்பெருமான் முகமலர்த்திக் குறுப்பாகவே, செய்யப் பெறுமாயின், அக்கருமம் 'ருதம்' என்றும், இவ்வாறின்றி இம்மை மறுமைகளில் ஒரொரு பயனை விரும்பிச் செய்யப்படுமாயின், அக்கருமமே 'அந்ருதம்' என்றும் கூறப்படும். இம்முறையில், மேற்கூறிய சுருதியில் உள்ள அந்ருத சப்தம், ஒரொரு பயனை விரும்பிச் செய்யும் கருமத்தையே கூறுகின்றமையினுலும், அக்கருமம், பரமனை அடைவதற்குத் தடையாயிருத்தலாலும், மேற்கூறியவாறு இங்குக் கலங்க இடம் இல்லை.

''அச்வ இவ ரோமாணி விதூய பாபம்'' என்னும் சுருதி, ''பாவங்களை விட்டுப் பரமனைப் பெறுகின்ருன்'' என்னும் கருத்தையும், ''ஏதம் ப்ரஹ்ம லோகம் நவிந்தந்தி அந்ருதேந ஹி ப்ரத்யூடா:'' என்னும் சுருதி, பாவமுடையார் பரமனைப் பெறுகின்ருரில்லை'' என்னும் கருத்தையும் கொண்டுள்ளனவாதலின், இங்கு முரண்பாட்டிற்குச் சிறிதும் இடமில்லை? இல்லையன்ருே? இதனுல், 'அந்ருத சப்தம் பொய்ப் பொருளைக் குறிக்கும்' என்று கூறும் போது ஏற்படும் இடர்களுக்கும் இங்கு இடமின்று என்பது யாவருக்கும் புலனுகும்.

இவ்வாறு மீமாம்ஸா சாஸ்திர முறையைப் பின்பற்றிப் பொருள் கொள்வார்க்குக் கலங்க இடமில்லை என்பதைக் கண்டோம். இனி, இராமாயணத்தில் விரோதியைக் காண்போம்:

## இராமாயணமும் விரோதியும்

'இராமாயணம் விரோதியை, ஒருவாறு மெய்ப்பொருளாகவே உணர்த்துகின்றது' என்பதையும் உபபாதித்துக் காட்டுவோம்: இது மெய்' 'இது பொய்' என்பதை நாம் அறுதியிடுவது எவ்வாருே? எனின், யாரும் எளிதில் உணருமாறு ஓர் அனுபவத்தை முதலில் எடுத்துக் காட்டுவோம்.

ஒருவன், முதலில் முத்துச் சிப்பியை வெள்ளி என அறிநது, அதை எடுக்கச் சென்று, பின்பு, 'இது சிப்பி; வெள்ளியன்று' என்னும் உண்மையை உணர்ந்து, அதை எடுக்காது விட்டிடுகிருன். அங்கு, 'வெள்ளி பொய்ப் பொருள்' என்பது தெளிவு.

வேருெருவன், வெள்ளியையே வெள்ளி என உண்மையை உணர்ந்து, அதை எடுக்கச் சென்று, எடுத்து, அதனுலாம் பயனைப் பெறுகிருன். இங்கு, 'வெள்ளி மெய்ப் பொருள்' எனபதும் யார்க்கும் நன்கு புலனும்.

இம்முறையைக் கைக்கொண்டு. இராமாயணம் மெய் பொய்களை அறுதியிடுகின்றது' என்பதை நாம் அறியலாம்; எங்கே? என்னில், திருவடி, இராமபிரானுடைய திருக்குணம் சிறிதும் நடையாடாத அசோகவனத்தில் போய்ப்புக்கு, தென்றலும், சிறுதுளியும் போன்றுள்ள இராம நாமத்தைக் கூறுங்கால், அதைத் திருச்செவி ஏற்ற ஸீதாபிராட்டியார் முதலில், 'இந்நிலத்தில் இது பரிமாறுவது ஒன்றல்ல; இது சித்தமோஹத்தால் வந்ததோ? வாதகதியோ? உன் மாதஜவிகாரமோ? ம்ருக த்ருஷ்ணிகையோ?'' என்று ஐயமுறுகிருர். பின்பு 'இவன் (ஹனுமான்) முன்னே

நின்று வார்த்தை சொல்லா நின்றான்; இது கேட்டு, நாம் வேற்றுமை பெற்றிருக்கிறோம்; ஆனபின்பு, இது மெய்யாம்' என்று திருவுள்ளம் தெளிந்து இன்புறுகிறார் என்பது வரலாறு.

இவ்வரலாற்றைத் தெரிவிக்கும் வார்த்தை:

"किं नुस्याच्चित्तमोहोऽयं भवेद्वातगतिस्त्वियम् ।
उन्मादजो विकारो वा स्यादियं मृगतृष्णिका ।।
अथवा नायमुन्मादो मोहोप्युन्मादलक्षणः ।
संबुध्ये चाहमात्मानमिमं चापि वनौकसम् ।।"

(கிம் நு ஸ்யாத் சித்தமோஹோயம் பவேத் வாதகதிஸ்த்வியம் । உன்மாதஜோ விகாரோவா ஸ்யாத் இயம் ம்ருகத்ருஷ்ணிகா ॥ அதவா நாய முன்மாத: மோஹோப்யுன்மாத லக்ஷண: ஸம்புத்யே சாஹமாத்மானமிமம் சாபிவனௌகஸம்) என்பதாம்.

[தலைமகனைப் பிரிந்த தலைமகளுக்கு. தன் தலைமகன் நன்மையைக் கேட்பதில் விருப்பம் உண்டாவது இயல்பேயாம்; அவ்விருப்பினால் அவனைப் பற்றிய எண்ணமும் இடையீடின்றி ஏற்படும். அவ்வெண்ணத்தின் ஒருநிலையை சித்தமோஹம் என்பர். ஊணும் உறக்கமும் இன்றி இருக்கும்போது, வாத பித்த சிலேஷ்மங்களாகிய தாதுக்களுக்குக் கலக்கம் உண்டாகும். அக்கலக்கத்தினால் உண்டாகும் காற்றின் ஒரு நிலைக்கு 'வாதகதி' என்று பெயர். அந்நிலையிலுள்ள பிரமத்தை இங்கு வாதகதி என்று கூறுவர். தலைமகனைப் பிரிந்த தலைமகளுக்கு உள்ள ஒருநிலையை உன்மாதம் என்று பகருவர். அந்த உன்மாதத்தினால் உண்டாகும் பிரமத்தை உன்மாதஜ விகாரம் என்று செப்புவர். ம்ருகத்ருஷ்ணிகையாவது ஒன்றை மற்றொன்றாக அறிதலாம். கானலைத் தண்ணீராகக் கருதலாம்]

இங்கு ஸீதாப்பிராட்டியார், முதலில் திருவடி வார்த்தையைப் பொய்யாக பிரமித்து, தக்க சான்றுகளினால், 'இது பொய் அன்று ; மெய்தான்' என்று அறுதியிட்டிருப்பதை உலகம் நன்கு காணக் கூடுமன்றோ? இது போன்று, (பிரஹ்மம் பிரபஞ்சமாகத் தோன்றுதற்கு காரணமாகிய) 'அஜ்ஞானமும், பிரபஞ்சத் தோற்றமும், பிரபஞ்சமும் ஆகிய இவை பொய்ப் பொருள்கள் தாம்' என்று அறிதியிடுதற்குத்தக்க சான்றுகள் உளவாகில், நாம் இசையத் தட்டு ஒன்றுமிராது. 'அங்ஙனம் உலகத்திலும் சாஸ்திரத்திலும் சான்றுகள் காணக்கிடைக்காதவையே யாம்' என்பது இங்கு முக்கியமாய் அறியத்தக்கதாம்.

இனி, 'தேஹாத்மாபிமானமும், ஸ்வாதந்தரியாபிமானமுமாகிய இவை, பரமனைப் பெற்று அனுபவித்ததற்கு உண்மையான இடையூறும்' என்பதை இராமாயணத்தில் காண்போம். இங்கு முதலில், பின்வருவது கவனிக்கத் தக்கதாம்:

ஒருவன் பரமனைப்பற்றிய அறிவு பெற்றிருப்பானாயின், 'அவன் ஸத்து' என்றும், அவ்வறிவு பெறாது இருப்பானாயின், 'அவன் அஸத்து' என்றும் வேதாந்தம் அறிவிக்கின்றது. ("सन्तमेनम्" "असन्नेवसभवति" ஸந்தமேனம்; அஸன்னேவஸபவதி) ஒருவன் பரமனைப் பற்றிய அறிவு பெற்றிருந்தும், அவ்வறிவுக்கு ஏற்ப அன்பையும் ஆதாரத்தையும் பரமன்பால் செய்யாது இருப்பின், அவனை ஸத்து என்றோ, அஸத்து என்றோ, மேற்கூறிய சுருதி அறிவித்திலது. ஆயினும், 'அவனும் அஸத்தே' என்றுதான் கூறுதல் வேண்டும். அவன் அறிந்தும் அன்பைச் செய்யாது இருக்கின்றமையின் அவனுக்குக் குற்றம் அதிகமாம்.

இதுபோன்று, "ஒருவன் ஜீவனாகிய தன்னை தேஹமாகவோ, ஸ்வதந்திரனாகவோ உணரவில்லை; தன் உண்மை நிலையை ஒருவாறு உணர்ந்தவனேயாம். ஆனாலும், அவன் தேஹாத்மாபிமானமும், ஸ்வாதந்திரியாபிமானமுமாகிய குற்றம் பெற்றிருப்பவன் எவ்வாறு சரிதம் பெற்றிருப்பனோ, அங்ஙனம் சரிதம் பெற்றிருப்பானாயின், பரமனை அனுபவித்து வாழப்பெறாது இழந்து விடுகிறான்" என்பது ஓர் உயரிய உண்மைப் பொருளாம்.

இவ்வுண்மைப் பொருளை இராமாயணம், சக்ரவர்த்தியின் வரலாற்றில் தெளிவாகத் தெரிவிக்கின்றது. எங்கே? எங்ஙனம்? என்னில், அவ்வரலாற்றை முதலில் கூறுவாம்: "சக்ர

வர்த்தி, வஸிஷ்டரைக் குலகுருவாகப் பெற்றிருந்தவர்; அச்வமேதம், புத்திர காமேஷ்டி முதலியவற்றைச் செய்தவர். ஆதலின், ஆத்மாவின் உண்மை நிலையை உணராதவரல்லர். இங்ஙனம் இருப்பினும், இராமபிரானுக்கு முடி சூடுவதாய் நிச்சயித்து, தன் ப்ரிய மஹிஷியான கைகேயியிடம் சென்று தெரிவிக்க, 'அப்போது, 'பரதனுக்கு முடி சூடவேணும்; இராமன் பதினான்கு வருஷம் வனம் செல்ல வேணும்' என அக்கைகேயி வேண்டிக் கொள்ள, சக்ரவர்த்தியும் அவ்வேண்டுதலுக்கு இசைய, இராமபிரான் இலக்குமணனோடும், ஸீதாபிராட்டியோடும் காடு சென்றனன்'' என்பது வரலாறாகும்.

இவ்வரலாற்றைக் கூறுமிடத்து, இராமாயணம் சக்ரவர்த்தியைப் பல இடங்களில் 'கைகேயியிடம் காமம் பெற்றிருப்பவன்' என்றே நிந்தித்துக் கூறியிருக்கின்றது. ''कामी कमलपत्राक्षोमुवाच वनितामिदम्'' (காமீ கமல பத்ராக்ஷீ முவாச வனிதாமிதம்) என்பதையும், இது போன்றுள்ள வசனங்களையும் இங்குக் காண்க. ஒருவனுக்கு, ஆத்மாவினுடைய உண்மை உணர்வு உள்ளபடி இருக்குமேயானால், பெண்ணாசை சிறிதும் இராது. 'காமீ' என்று கூறும்போது, பெண்ணாசை உண்டு என்பது நன்கு விளங்குகின்றதன்றோ? தேஹாத்மாபிமானமும் ஸ்வாதந்திரியாபிமானமும் பெற்றிருப்பான் போன்றவன் சரிதமேயன்றோ? அக்காலத்திலேயே பரம புருஷனை இராமபிரானை அனுபவித்து வாழப்பெறாது முடிய நேரிட்டதன்றோ?

ஆனால், சக்ரவர்த்தி இராமபிரானைப் பிரிந்து முடிய நேரிட்டதற்கு வேறு ஒரு காரணமும் உண்டு; கைகேயிக்கு முன்னமேயே சக்ரவர்த்தி இரண்டு வரங்கள் தருவதாய் வாக்களித்திருந்ததினாலும், அதைப் பின் சென்று ஸத்தியத்திற்குக் கட்டுப்பட்டு, இராமபிரானாகிய தருமத்தைத் துறந்து விட்டதனாலும் அப்பரமனை இழக்க நேரிட்டது. 'ஸத்தியம்' என்பது தருமமேயானாலும், இராமபிரானாகிய மிகமிகச் சிறந்த தருமத்தைக் காணுங்கால், அந்த ஸத்தியம் என்னும் தருமத்தை ஒரு பொருளாய்க் கருதாமல் காற்கடை கொள்ள வேண்டியவன் சக்ரவர்த்தி. அங்ஙனம் அந்த ஸத்தியத்தைக் காற்கடை கொள்ளாது பற்றி, துறக்கத் தகாத அப்பரமனைத் துறந்ததே, இராமனை அனுபவிக்கப் பெறாது இழந்ததற்கு காரணம். [இராமபிரான் மிக மிகச் சிறந்த தருமம் என்பதை வரும் உபாயத்தைப் பற்றிக் கூறும் பகுதியில் நாம் காணலாம்.] இதை, பிள்ளை லோகாசார்யர் ''சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக்கு உறுப்பு'' என்று அருளிச் செய்திருக்கிறார்.

உண்மை இவ்வாறு இருப்பினும், கைகேயி பால் உள்ள ஆசையும் இராமபிரானை இழந்ததற்கு காரணம் என்னில், குற்றம் ஒன்றும வாராது, 'மற்றதில் பற்றுள்ளவனுக்குப் பரமன் கிடைக்க மாட்டான்; பற்றற்றவனுக்கே பரமனைப் பெறலாம்' என்பதும் சாஸ்திரத்தில் கூறப்பெற்றுள்ள ஓர் உயர்ந்த உண்மை. இவ்வாறு தேஹாத்மாபிமானம், ஸ்வாதந்திரியாபிமானன் இவற்றின் தடைத் தன்மையைக் கண்டோம.

இனி, இராமாயணத்தில் 'கருமம் பரமனை இழக்கச் செய்கிறது' என்பதையும் காண்போம். 'இராமபிரான் எம்பெருமான்; ஸீதா பிராட்டி எம்பெருமாட்டி'' என்பது உண்மை. 'இராமபிரானுக்குப் புண்ணியமும் பாவமும் உண்மையில் இல்லை. இதுபோன்று, ஸீதா பிராட்டியாருக்கும் புண்ணியமும் பாவமும் இல்லை'' என்பதும் உண்மையேயாம். ஆனாலும், ஸீதாபிராட்டியார், 'ஜீவன், இங்ஙனம் இருப்பின் பரமனைப் பிரிய நேரிடும்' என்பதைத் தம் சரிதத்தில் வெளியிட்டிருக்கிறார். இதை முதலில் நாம் இங்கு அறிதல் அவசியமாம்.

''இராமபிரான் காட்டிற்கு எழுந்தருளும்போது, ஸீதாபிராட்டியாரின் மென்மையையும், காட்டின் வன்மையையும் திருவுள்ளம் பற்றி, அயோத்தியிலேயே தாம் வனவாஸம் செய்து திரும்பிவரும் வரையில் அப்பிராட்டியாரை இருக்க வேண்டிக் கொள்கிறான். அப்பிராட்டியாரும் அப்பெருமான் பிரிவு பொறாது, தம்மை உடன் அழைத்துச் செல்ல வேணும் என விரும்புகிறார். பலகால் விரும்பியும், இசையாது இருந்த இராமபிரானைக் குறித்து, ''என் தந்தையார் என்னை ஆண்மை

உடையாளொருவனுக்குக் கொடாது, பெண்ணுக்கே கொடுத்து விட்டார்; ஆனால், ''நான் பெண்ணோ?'' என்று தேவரீர் எண்ணலாம். அகவாயில் பெண்மையும், புறவாயில் ஆண்மையும் பெற்றிருப்பவரன்றோ? நீவீர். அகவாயிலும் உண்மையில் ஆண்மை பெற்றிருப்பீராயின், இங்ஙனம் என்னை விட்டுச் செல்வதாகக் கூறுவீரோ? கூறமாட்டீரன்றோ? (''स्त्रियं पुरुष विग्रहम्'' ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்) என்றனள்'' என்பது சரித்திர உண்மை.

தம் சரிதத்தினால் உலகுக்கு நன்மை புரிய வந்த பிராட்டியார், புருஷோத்தமனான இராமபிரானைக் குறித்து, இவ்வாறு என் தந்தையார் பெண்ணுக்கே பெண்ணைக் கொடுத்தார் என்று இயம்புவது முறையாமோ? ஆகாதன்றோ? இவ்வாறு கூறியது பகவதபசாரமன்றோ? இது முதலில் இங்குக் குறிக்கொள்ளத் தக்கது.

மேலும், இராமாயணத்திலேயே வேறொரு வரலாறும் இங்குக் காணத்தக்கதாம்: 'இராமபிரான் ஸீதா பிராட்டியார்பால் உள்ள அன்பின் மிகுதியினாலே, மாரீசன் என்னும் மாயா மிருகத்தின் பின்னே வெகுதூரம் சென்று, அம்மிருகத்தை அம்பினால் அடித்துக் கொன்றனன். அந்த சமயம் மாரீசன் மிருக ரூபத்தைவிட்டு, தன் சரீரத்தை எடுத்து உயிர் துறந்தனன்; அங்ஙனம் உயிர் துறக்குங்கால், இராமபிரானுடைய குரல் போன்றுள்ள தன் குரலாலே ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணா என்று கூறினன். அக் கூற்று பிராட்டியார் திருச்செவியில் பட, அப்போது இலக்குமணனை, 'இப்போதே நீ சென்று, இராமபிரானை இரட்சித்தல் வேண்டும்' என்று அவள் வேண்டிக் கொள்ள, (இராமபிரானுடைய சிறப்பை உள்ளபடி உணர்ந்த) இலக்குமணன், மாரீசன் மாயையைக் கூறி, அவ்வாறு செல்ல இசையாது இருநதனன். அங்ஙனம் இலக்குமணன் இசையாது இருக்க, பிராட்டியார் அவனை நோக்கி, கடுஞ்சொற்களைக் (''अनार्य, अकरुणारंभ, नृशस, कुलपां सन'' ''அநார்ய, அகருணாரம்ப, ந்ருசம்ஸ, குலபாம்ஸந'') கூறினார் என்பதே அவ்வரலாறும்.

இலக்குமணன் இயற்கையிலேயே இராமபிரானிடம் அளவற்ற அன்பு பெற்றிருப்பவனும். அவ்வாறு பரமபக்தி பெற்றிருக்கும் அந்த இலக்குமணனை நோக்கி, கூறத் தகாத (லக்ஷ்மணா! நீ நிச்சயமாய் என்னை உனதாக்கிக் கொள்ளக் கருதி, இம் மாதிரி கபட வேஷத்துடன் கானகம் வந்திருக்கின்றாய் என்று கூறி) மேற்கூறிய கடுஞ் சொற்களைக் கூறியது அப்பிராட்டியாருக்குத் தகுமோ? தகாதன்றோ? இவ்வாறு கூறியது பாகவதாபசாரமன்றோ? இதுவும் இரண்டாவதாக இங்கு காணத்தக்கது.

'இம்மாதிரி பரமனிடமும், பாகவதோத்தமனான இலக்குமணனிடமும் பிராட்டியார் நடந்து கொண்டமையின், இவை காரணமாகப் பரமனைப்பிரிந்து, அசோக வனத்தில் அரக்கிமார் நடுவில் இருந்து துன்புற வேணடிற்று' என்பதை இங்கு நாம் அறிதல் வேண்டும்.

இதை ஸீதாபிராட்டியார் அருளிச் செய்த ''ममैव दुष्कृतं किंचित् महदस्ति न संशय:'' (மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹாதஸ்தி நஸம்சய:) என்னும் வார்த்தையில் நன்கு காணலாம். இவ்வார்த்தையில், இராமபிரான் திறத்தில் செய்த அபராதத்தை 'கிஞ்சித்' என்னும் சப்தமும், இலக்குமணன் திறத்தில் செய்த அபராதத்தை 'மஹாத்' என்னும் சப்தமும் கூறுகின்றன என்று நாம் நன்கு அறியலாம். இவ்வாறு, 'கருமம் பரமனை இழக்கச் செய்கிறது' என்பதை பிராட்டியார் சரிதத்தில் ஒருவாறு கண்டோம்.

இனி, ப்ரக்ருதி ஸம்பந்தம் தடை என்பதை இராமாயணத்தில் சில இடஙகளில் காட்டுவோம்.

(1) இராமபிரான், ஸீதையுடனும் இலக்குமணனுடனும் சரபங்கருடைய ஆசிரமத்திற்கு எழுந்தருளும் தருணம். அத்தருணம் இந்திரன் சரபங்கரிடம் வந்து அளவளாவிக் கொண்டிருந்தான். அந்த இந்திரன், இராமபிரானை அப்போது கண்டு, இந்த இராமன், வேறொருவராலும் சிறிதும் செய்ய இயலாத

மிகப் பெரியதொரு காரியத்தை (இராவண வதத்தை)ச் செய்யத் திருவுள்ளம் கொண்டு, அவதரித்தவன். அதை அவன் நிறைவேற்றிய பிறகு என்னைப் பார்ப்பது நலம் என்று கூறி, சரபங்கரிடம் விடை பெற்று, இரதம் ஏறி, தன் உலகம் சென்ருன். இந்திரன் சென்றதும், இராமபிரான் சரபங்கரிடம் சென்று அவர் திருவடிகளை வணங்கினன்; பின்பு இந்திரன் வந்து போனதைப் பற்றி வினவிஞன். அவ்விஞவுக்கு விடையாக சரபங்கர் கூறிய வார்த்தையை பின்வருமாறு காணலாம் :

"मामेप वरदो राम ब्रह्मलोकं निनोषति ।
जितमुग्रेण तपसा दुष्प्रापमकृतात्मभिः ।।
अहं ज्ञात्वा नरव्याघ्र वर्तमानमदूरतः ।
ब्रह्मलोक नगच्छामि त्वामदृष्ट्वा प्रियातिथिम्।।
त्वयाहं पुरुष व्याघ्र धार्मिकेण महात्मना ।
समागम्य गमिष्यामि त्रिदिव देव सेवितम् ।।"

(மாமேஷவரதோ ராம ப்ரஹ்ம லோகம் நிநீஷதி ।
ஜிதமுக்ரேண தபஸா துஷ்ப்ராபம் அக்ருதாத்மபி: ॥
அஹம் ஞாத்வா நரவ்யாக்ர வர்தமானம் அதூரத: ।
ப்ரஹ்மலோகம் நகச்சாமி த்வாம் அத்ருஷ்ட்வா ப்ரியாதிதிம் ॥
த்வயாஹம் புருஷவ்யாக்ர தார்மிகேண மஹாத்மநா ।
ஸமாகம்ய கமிஷ்யாமி த்ரிதிவம் தேவ ஸேவிதம் ॥ )

இதின் கருத்து : "இராமா ! எல்லோருக்கும் நன்மையை அளிப்பவஞகிய இந்த இந்திரன், பிரமனுடைய ஆணையிஞல் அப்பிரமனது உலகத்திற்கு என்னை அழைத்துக் கொண்டு போக விரும்புகின்றனன். நான் ஸமீபத்தில் எழுந்தருளியிருக்கும் உன்னை ஞானக் கண்ணுல் கண்டவஞதலின், மிகவும் இனியஞகிய உன்னை வெளிக் கண்களாலும் கண்டு, களிப்புற எண்ணி, (திரும்பி வருதல், அழிதல் முதலிய குற்றங்களோடு கூடிய) பிரமனது உலகத்திற்குச் செல்ல விருப்பம் இன்றி இருக்கின்றேன். மிகமிகச் சிறந்த தர்மம் எனப் போற்றப் பெறும் பரமஞகிய உன் குளிர்ந்த நோக்குக்கு இப்போது இலக்காகிப் பின்பு அநந்தன், கருடன் முதலிய நித்யர் சூழ்ந்திருக்கப் பெற்றுள்ள பரமபதத்தில் உன்னை அடைய விரும்புகின்றேன்" என்பதாம்.

சரபங்கர் இவ்வாறு கூறி, இராமபிரானை நோக்கி, "இராமா! நீ சிறிது நேரம் என்னை நோக்கிக் கொண்டிரு" என விரும்பி, அவ்வெம்பெருமானுடைய முன்னிலையிலேயே எரிந்து கொண்டிருக்கும் ஹோமாக்னியில் ப்ரஹ்மமேத மந்திரங்களை ஜபித்துக் கொண்டு பாம்பு தோலை உரிப்பது போன்று மானிட சரீரத்தை விட்டு, அர்ச்சிராதி வழியிஞல் சென்று, பரம பதத்தில் பரமனைப் பெற்று வாழ்வுற்ருர்" என்பது, சரபங்கருடைய சரித்திர உண்மை.

(2) இராமபிரானுடைய, ஸீதாபிராட்டி என்னும் உயரிய உடைமைப் பொருளை முறைதவறி விரும்பி, தனக்கு ஆக்கிக் கொள்ள இராவணன் எடுத்துச் செல்லும் ஸமயம்; அதனை அறிந்த ஜடாயு தமக்கு இயன்ற அளவும் இராவணனேடு போர் புரிந்தார். இறுதியில் அப்பாபியிஞல் பிராட்டியைப் பற்றியே உயிர் துறக்க நேர்ந்தது. பரமபுருஷன் தேடிக் கொண்டு வரும்போது, 'ஆயுஷ்மன்' என்று அப்பரமனுக்கு மங்களம் பாடினுர்; "இராவணன் உன் உயிரையும் (பிராட்டியையும்), என் உயிரையும் கொண்டு போய் விட்டான்" என்னும் உண்மையையும் உணர்த்திஞர். அவருக்குப் பரமன் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தைச் செய்து, "गच्छ लोकाननुत्तमान्" (கச்ச லோகாநநுத்தமான்) என்கிறபடி விஷ்ணுலோகத்தையும் தந்திருளிஞன் என்பது ஜடாயுவின் சரித்திர ஸாரம்.

(3) "சபரி என்னும் வேட்டுவச்சி, தன் ஆசிரமத்திற்கு எழுந்தருளின இராமபிரானுக்கும் இலக்குமணனுக்கும் அதிகமான அன்புடன் பூஜை செய்தாள்; அப்பெருமானுடைய குளிர்ந்த நோக்குக்கு இலக்காஞள்; அவளும், தன் உடம்பை விட்டு உத்தம கதியைப் பெற்ருள் என்பது சபரியின் வரலாறு. இங்கு "चक्षुषा तव सौम्येन पूतास्मि रघुनन्दन ।

पादमूलं गमिष्यामि'' (சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தன । பாதமூலம் கமிஷ்யாமி) என்னும் வார்த்தை நோக்கத்தக்கது.

மேற்கூறிய மூவிடங்களிலும், சரபங்கரும், ஜடாயுவும், சபரியும் ஆகிய இம்மூவரும் இராமபிரானுடைய குளிர்ந்த நோக்குக்கு இலக்காகி, உடம்பை விட்டு அப்பரமன் திருவடிகளைச் சார்ந்ததாகவே தெரிகின்றமையின், 'பிறப்பறுக்கலுற்றாற்கு உடம்பும் தடை' என்பது நன்கு புலனும். தேஹாத்மாபிமானம் முதலியன பொய்ப் பொருளாகவே இருப்பின், அவற்றின் காரியம் நிகழ்வதற்கு இடமில்லையன்றோ?

இவ்வாறு இராமாயணத்தில் விரோதியின் உண்மையைக் கண்டோம். இனி உபாயத்தைப் பற்றி ஆராய்வோம்.

## வேதாந்தமும் உபாயமும்

வேதாந்தம் ஜீவன் பரமனைப் பெறுதற்கு எதை ஸாதனமாக அறிவிக்கின்றதோ, அது உபாயம் எனப்படும். அவ்வேதாந்தம் கூறிய உபாயத்தைச் சிறிது விரித்துக் கூறுவோம் :

இப்பிரபஞ்சத்தை அந்த அந்தக் காலத்தில் ஆக்கி, அளித்து, அழிக்கின்றவன் எவனோ, அவனே பரமாத்மா எனப்படுகின்றான். அப்பரமனையும், அவன் திருக்குணங்களையும், திருமேனியையும், உள்ளத்துக் கொண்டு அன்புடன் சிந்திக்கும் சிந்தனை 'பக்தி' எனப்படும். இப்பக்தி, இச்சேதனன் எம்பெருமானைப் பெற்று வாழ்வதற்குச் சிறந்த ஸாதனமாம், இங்கு (कारणं तु ध्येय:) (காரணந்து த்யேய:) என்னும் சுருதி வாக்கியம் சான்றாய்க் காணத்தக்கது.

இந்தப் பக்தியை ஒருவன் சாஸ்திரம் கூறியவாறு செய்து தலைக்கட்டுதற்குச் சிறந்த அறிவும், ஆற்றலும் இன்றியமையாதனவாம். இச்சிறந்த அறிவும், ஆற்றலும் எவனுக்கு இல்லையோ, அவன், எம்பெருமானை இழக்க வேண்டுவதில்லை; எம்பெருமான் திருவடிகளில் சரணாகதியைச் செய்து, அவனைப் பெற்று வாழலாம்.

சிலர், மேற்கூறிய பக்தியைச் செய்து தலைக்கட்டுதற்குத் தக்க அறிவு ஆற்றல்களைப் பெற்றிருந்தும், 'பக்தியை ஸாதனம' என்று எண்ணிச் செய்யாது, தன் நிலைக்கு ஏற்ப பக்தியைப் பயனாகவே எண்ணிச் செய்து, கொண்டானையல்லாலறியாக் குலமகள் போன்று, எம்பெருமான் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றி, இன்புறுகின்றனர். இவரே மிகச் சீர்மையுற்றவராவர்.

சரணாகதியாவது: 'எனக்குச் சிறிதும் நன்மையில்லை; குற்றங்களெல்லாம் உண்டு. வேறு இரக்ஷகரும் எனக்கு இல்லை' என்று தன் நிலைகளைக் கூசாது கூறி, பெரிய பிராட்டியார் முன்னாக எம்பெருமான் திருவடிகளையே ஸாதனமாகப் பற்றுதலாம். இச்சரணாகதிக்கு, "मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये" (முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே) என்னும் சுருதி வாக்கியம் தக்க பிரமாணமாகும்.

இவ்வாறு, பக்தியையும் சரணாகதியையும் ஜீவன் எம்பெருமானைப் பெறுதற்கு ஸாதனமாக அறிவிக்கும் வாக்கியங்களைக் கண்டோம்.

சிலர் 'ப்ரஹ்மமாக மாத்திரம் இருத்தல் மோக்ஷம்' என்றும், அதைப் பெறுதற்கு, 'ஆத்மா ஒன்று தான் உண்மைப் பொருள் என்னும் (சுருதி வாக்கியத்தினால் ஏற்படும்) ஞானம் ஸாதனம்'' என்றும எண்ணுகின்றனர்; ''ब्रह्मवेद ब्रह्मैव भवति'' (ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி) என்னும் வாக்கியத்தையும் ஆதாரமாய்க் காட்டுகின்றனர்.

இதைக் கேட்பவர்க்கு மனம் கலங்கும் என்பது உண்மையே. இக்கலக்கத்திற்கு மீமாம்ஸா சாஸ்திர முறையைப் பின்பற்றி ஒரு பரிஹாரத்தைச் சுருக்கமாய்க் கூறுவோம் :

ஒருவனுடைய முயற்சி சக்தியினுல் (ஆற்ற லினுல்) எது உண்டாகிறதோ, அதைப் 'புருஷ தந்திரம்' என்றும், ஒருவன் முயற்சி சிறிதும் இன்றி இருந்தும், எது பிரமாணத்திலேயே ஏற்படுகின்றதோ, அதைப் 'பிரமாண தந்தி ரம்' என்றும் சாஸ்திரம் கூறுகின்றது.

மேற்கூறிய பரமனைச் சிந்திக்கும் சிந்தனை யும், பரமன் திருவடிகளை உபாயமாய்ப் பற் றும் பற்றுதலும், ஒருவன் முயற்சி சக்தியைக் கொண்டு செய்யும் போது உண்டாகின்றமை யின், புருஷ தந்திரமாம். சிலர் கூறுகின்ற வாறு 'தத் த்வம் அஸி'' என்னும் சுருதியினுல், 'ஆத்மா ஒன்று தான் உண்மைப் பொருள்' என்னும் ஞானம் உண்டாகும் போது, முயற்சி சக்தி (பக்தி ப்ரபத்திகளுக்குப் போன்று) வேண்டப்படாமையின் அந்த ஞானம் பிர மாண தந்திரமாம். இவற்றை நாம் மனத்திற் கொண்டு, பின்வருமாறு இங்கு ஆராய்தல் அவசியமாகும் :

சுருதி வாக்கியத்தினுல் உண்டாகும், 'ஆத்மா ஒன்றுதான் உண்மைப் பொருள்' என்னும் ஞானம் மட்டும் மோக்ஷ ஸாதனமா யிருப்பின், புருஷ தந்திரமான பக்தியையோ, சரணுகதியையோ, அந்தச் சுருதி வாக்கியம் சேதனனைக் குறித்துக் கட்டளையிட இடம் பெறுமோ? பெருதன்றே?

மேலும், ''ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி'' என்னும் சுருதியில் அமைந்துள்ள ''ப்ரஹ் மைவ பவதி'' என்னும் பகுதியின் உண்மைக் கருத்தையும், ''தத் த்வம் அஸி'' என்னும் சுருதியின் உண்மைக் கருத்தையும், முறையே ''வேதாந்தமும் உபேயமும்'' ''வேதாந்தமும் ஜீவனும்'' என்னும் பகுதிகளில் கூறியுள் ளோம்; கண்டு கொள்வது.

ஆனுல், ''ப்ரஹ்ம வேத'' என்பதின் கருத்து யாதோ? எனச் சிலர் வினவக் கூடும். இவ் வினவிற்கு, ''பரமனைப் பற்றிய சிந்தனையும் ப்ரஹ்ம ஞானமாதலின், அந்தச் சிந்தனை என்னும் ஞானம் பெற்றிருப்பானையே 'ப்ரஹ்ம வேத' என்னும் சுருதி குறிக்கின்றது'' என்பது விடையாய்க் காணத்தக்கது.

இவ்வாறு மிகச் சுருக்கமாய் மீமாம்ஸா சாஸ்திர முறையைப் பின்பற்றிய பரிஹாரத் தைக் கண்டோம். இனி, வேதாந்தத்தின் முடிந்த பொருளைக் காட்டுவோம் :

இங்கு பின்வருமாறு வேதாந்தத்தின் அம் முடிந்த பொருள் காணத் தக்கது : பரமனைப் பற்றிச் சிந்திக்கும் சிந்தனை பரமனைப் பெறு தற்குக் காரணம் என்பது ஒருவாறு உண்மை யேயாம். ஆனுலும், ''அப்பரமன் திருவடித் தாமரைகளையே சரணமாகக் கொண்டு, அவற்றைப் பெறுகின்றது என்பது மிக மிகச் சிறந்த முறையாகும்''; இதற்குப் பல சான்று கள் உண்டு.

(1) அறிவாளிகளுள் மிகச் சிறந்தவர் ஸ்ரீ பீஷ்மர். அவர் சரதல்பத்தில் கிடந்து தருமபுத்திரருக்குப் பல தருமங்களை உபதேசம் செய்தனர். அங்ஙனம் உபதேசம் பெற்ற தருமபுத்திரர், அந்த அந்த தருமத்தை உப தேசம் செய்யும் போது, அது அது சிறந்த தருமமாகத் தெரிகின்றமையின், மிக மிகச் சிறந்த தருமத்தை அறிய வேணும் என்று கருதி, தம் சாதுரியத்துக்கு ஏற்ப அப்பீஷ் மரை நோக்கி, 'தேவரீர் மிகவும் விரும்பும் தருமம் எது?' என்று வினவினுர். அங்ஙனம் வினவப் பெற்ற ஸ்ரீபீஷ்மரும், 'நாராயணனு டைய திருநாமங்களைச் சொல்லுதலே மிக மிகச் சிறந்த தருமம்' என விடை கூறியிருக் கிருர், (இது விஷ்ணு ஸஹஸ்ர நாமாத்தியா யத்தில் காணக்கிடக்கின்றது.)

இதை நாம் மனத்திருத்தி, (மிகமிகச் சிறந்த பிரமாணம் எனப் போற்றப்பெறும்) வேதத் தில் கூறப்பெற்றுள்ள தருமங்களுள், அவ் வேதம் மிகவும் விரும்பும் தருமம் எது? என் பதையே ஆராய்ந்து அறிதல் இங்கு இன்றி யமையாததாகும். அங்ஙனம் ஆழ்ந்து ஆய்ந்து காணுங்கால், 'சரணுகதி' என்னும் தருமத் தையே வேதம் மிக விரும்புகின்றது என்பது விளங்கும்.

ஆனுல், ''ஸ்ரீ பீஷ்மர் தாம் விரும்பும் தருமத் தைத் தெரிவிக்கும் போது, ''एषमे सर्व धर्माणां धर्मोऽधिकतमोमत:'' (ஏஷமே ஸர்வ தர்மாணும் தர்மோதிகத மோமத:) என்று எவ்வாறு

தெளிவாகத் தெரிவித்திருக்கிறுரோ, அவ்வாறு வேதமும் சரணுகதியை, தான் விரும்பும் தருமமாய்த் தெரிவித்திருக்கிறதோ?'' எனச் சிலர் ஐயமுறக்கூடும்.

இவ் ஐயத்திற்கு இடம் சிறிதும் இல்லை. எவ்வாறு எனின், கூறுவோம்: ஸ்ரீ பீஷ்மர் விரும்பிய தருமம் திருநாம ஸங்கீர்த்தனம் என்பதற்கு, அவருக்கு ''ஏஷமே'' என்னும் சொல்லே ஆதாரமாய்க் கண்டோம் அங்கு. இங்கு, வேதபுருஷனுடைய ஆசாரத்தையே ஆதாரமாய்ப் பின்வருமாறு காணலாம் :

'இப்பிரபஞ்சத்திற்குக் காரணஞன எம்பெருமான் அன்புடன் சிந்திக்கத் தக்கவன்' என்று பக்தியைச் சுருதி சொல்லிற்று. 'அக்காரணஞன எம்பெருமானை மோக்ஷத்தில் விருப்பமுடைய நான் சரணம் பற்றுகிறேன்' என்று சரணுகதியைத் தன் ஆசாரத்தில் உள்ளதாய் அறிவிக்கின்றது. இங்கு மேற்கூறிய ''காரணந்து த்யேய:'' ''முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே'' என்னும் சுருதி வாக்கியங்கள் நோக்கத் தக்கன. ஸ்ரீபீஷ்மருடைய சொல்லிலும், வேத புருஷனுடைய ஆசாரம் பிரபலமன்ருே?

இவ்வாறு வேதத்தில் சான்றைக் கண்டோம்; இனி, பரம புருஷனுடைய திருவாக்கிலும் தக்க சான்றைக் காண்போம்:

(2) பரமபுருஷன் அர்ஜ்ஜுனனைக் குறித்து அருளிச் செய்த திவ்விய சாஸ்திரம் 'பகவத்கீதை' என்பது உலகு உணர்ந்ததேயாம். அக்கீதையில் உள்ள பதினெட்டு அத்தியாயங்களிலும், கருமயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்னும் தருமங்களைப் பரக்க அப்பரமன் உபதேசம் செய்திருப்பது அதை அனுபவிப்போர் அறிந்ததேயாகும். ('நான் செய்பவன்' 'இக்கருமம் என்னுடையது' 'எனக்கு இப்பயன் வேண்டும்' என்னும் எண்ணங்களை அறவே ஒழித்து பரமன் திருவுள்ளம் உகக்குமாறு தன் வருணத்திற்கும், ஆசிரமத்திற்கும் ஏற்ற தருமங்களைச் செய்தலே கருமயோகமாம். இவ்வாறு நெடுகின காலத்தில் கருமயோகத்தைச் செய்து, அதனுல் சித்த சுத்தி பெற்று, அச்சித்தத்தைக்கொண்டு, ஜீவஞகிய தன்னைச் சிந்திக்கும் சிந்தனையே ஞான யோகமாம்.)

உண்மை இவ்வாறு இருப்பினும், அப்பரம புருஷன், அந்தக் கீதையின் முடிவில் அருளிச் செய்த "सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज" (ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ) என்னும் வார்த்தையைக் காணுங்கால் சரணுகதியே அவன் உகந்த தருமம் எனத் தெரிகின்றது. இதைச் சிறிது விரித்துரைப்போம்.

பிள்ளைலோகாசார்யர், ''தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணப் பிறந்தவன் தானே, ஸர்வ தர்மங்களையும் விட்டு என்னைப் பற்று' என்கையாலே, ஸாக்ஷாத் தர்மம் தானே என்கிறது'' என்று அருளிச் செய்திருக்கிருர்.

இதின் கருத்து : ''தருமத்தை நிலை நாட்டுதற்கெனவே திருவவதாரம் செய்தருளின கண்ணபிரான், தன்னுல் உபதேசம் செய்யப் பெற்றவையும்' 'ஒருவாறு வீடு பேற்றைத் தருகின்றவையுமான கரும ஞான பக்திகள் எல்லாவற்றையும் விட்டு, 'என் ஒருவனையே பற்று' என்கையாலே, 'அவனே, நேரே பயனைக் கொடுக்கக் கூடிய தருமம்' என்பதும், 'மேற்கூறிய கரும ஞான பக்திகளாகிய யாவும் அங்ஙனம் நேரே பயனைக் கொடுக்கும் தருமங்கள் அல்ல' என்பதும் நன்கு விளங்குகின்றனவல்லவா''? என்பதாம்.

அன்றியும், 'பக்தி சபலன்' (ஜீவன் செய்யும் பக்தியில் மிகவும் விருப்புற்றிருப்பவன்) என்று புகழப்பெறும் பரமபுருஷன் அப்பக்தியைப் பல இடங்களில் பலவாருகப் பரக்கப் பேசி, இறுதியில், 'அதையும் விட்டு, என்னைப் பற்று' என்று அருளிச் செய்திருக்கின்றமையின், அப்பக்தியிலும் தாஞகிய தருமமே தான் உவந்ததாம் என்பதும் இங்கு தெளிவு.

இவ்வாறு, 'எம்பெருமான் உகந்த தருமம் சரணுகதி' என்பதைக் கண்டோம். இனி, 'வைதிகரும் மிகவும் ஆதரித்து, ஆசரித்த தருமம் சரணுகதி' என்பதைக் காட்டுவோம்.

(3) வேதத்தைச் சிறந்த பிரமாணமாகக் கொண்டு, அவ்வேதக் கருத்தையும் உள்ளபடி உணர்ந்து, அவ்வுணர்வைப் பின் சென்று

நடப்போர் யாவரோ, அவரே வைதிகர் எனப் போற்றப் பெறுகின்றனர். அவ்வைதிகருள், மயர்வற மதி நலமருளப் பெற்ற நம்மாழ் வாரே சீர்மையுற்றவராவர். 'அவர் மிகமிகச் சிறந்த பக்தி பெற்றிருந்தும், தமக்குப் பரமன் பால் உள்ள அப்பக்தியை அவனைப் பெறு தற்குக் காரணமாய்க் கருதாது, அவன் திரு வடித்தாமரைகளையே காரணமாய்ப் பற்றி யிருந்தவர்' என்பதும் மிகவும் பிரஸித்தமா னது. இவர் போன்று, இவர் திருவடித் தாமரைகளைப் பணிந்துய்ந்தவரான நம் ஆசார்யர்களும் சரணுகதி தர்மத்தையே விரும்பி யிருந்தனர் என்பதும் தெளிவு.

இவ்வாறு, வேதம், வேத்யன், (வேதத் தின் முக்கியப் பொருளான பரமபுருஷன்) வைதிகர் ஆகிற இம்மூவரும் மிகவும் விரும்பும் தருமம் சரணுகதி என்பதைக் கண்டோம். 'இச்சரணுகதியையே இராமாயணம் விரித்து ரைக்கின்றது' என்பதை இனிக் காண்போம்.

## சரணுகதி சாஸ்திரம்

பரமாத்மா, ஜீவாத்மா, உபேயம், விரோதி, என்னும் (ஐம் பொருளில் சார்ந்த, நான்கு பொருள்களையும் இராமாயணம் தெளி வாகத் தெரிவிக்கின்றவாறு இக்கட்டுரையி லேயே ஒருவாறு கண்டிருக்கிறோம். ஆயினும், சரணுகதி தருமத்தை வெளியிடுவதில் இராமா யணம் நோக்குடைத்தாதலானும், 'இராமா யணம் சரணுகதி சாஸ்திரம்' எனப் பிரஸித்தி பெற்றிருப்பதால், 'சரணுகதி தருமத் தையே இராமாயணம் விரித்துரைக்கின்றது' என்று கூறுவதிலும் தட்டொன்றும் இல்லை. இப்பகுதியில், சரணுகதி தரு மத்தின் உண்மைகளை நாம் அறியலாம்.

'எம்பெருமான் முன்னிலையில் தன் நிலை களைக் கூசாது கூறி, பெரிய பிராட்டியார் முன்னாக எம்பெருமானை ஸாதானமாய்ப் பற்றுதல் சரணுகதி' என முன்பு கூறியிருந் தோம். இங்கு சேதனன்பால் உள்ள பற்று தல், பேற்றுக்கு ஸாதனமா? அல்லது, இச் சேதனனல் பற்றப் பெறும் எம்பெருமானே ஸாதனமா ? என்னும் ஐயம் ஏற்படுவது இயல்பேயாம்.

பிள்ளைலோகாசார்யர் 'பற்றப் பெறும் எம்பெருமானே பேற்றுக்கு ஸாதனம்; பற் றுதல் ஸாதனமன்று' என்று அருளிச் செய்தி ருக்கிறார்; சேதனன் பாலுள்ள பற்றுதலை அதிகாரி விசேஷணமாகத் திருவுள்ளம் பற்றி யிருக்கிறார்.

இங்கு, முதலில், இவ்விரு ஆசார்யர்களு டைய கருத்துக்களையும் தக்க சான்றுகளுடன் முறையே விரித்துக்கூறி, கருத்து வேற்றுமை யின்மையையும் காட்டி, பின்பு, இராமாய ணத்தில் சரணுகதி பேசப்பெற்றிருக்கும் விதம் இன்னது என்பதையும் தெரிவிப்போம்.

தேசிகன், சேதனன் பாலுள்ள பற்றுதல் பக்தி ஸ்தானத்தில் எமபெருமானை ஸாதித்துத் தருவதென்றும், அத்தானத்திலுள்ள எம்பெரு மானே பேற்றுக்கு ஸாதனமென்றும் திருவுள் ளம் பற்றியிருக்கிறார்.

பிள்ளைலோகாசார்யர் திருவுள்ளம் பின் வருமாறு காணத் தக்கது:

"தருமம்" என்னும் சொல், எது விரும்பும் பயனுக்கு முக்கிய காரணமோ, அதைக் குறிக்குமாம். பரமபுருஷன் அவர் அவர் விரும்பும் பயனுக்கு முக்கிய காரணனுயிருத் தலின், சாஸ்திரம் 'தர்மம்' என்னும் சொல்லையிட்டு, அவனைக் குறிக்கின்றது. "रामोविग्रहवान् धर्म" (ராமோ விக்ரஹவாந் தர்ம:) "कृष्णं धर्म सनातनम्" (க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்) என்னும் வாக்கியங்களை நாம் இங்குக் காணுதல் நன்றும். மேலும் இந்த எம்பெருமான் எனப்பெறும் தருமம் மிகச் சீர்மை யுற்றதாம். எவ்வாறு? என்னில் கூறுவோம்:

ஏனைய தருமங்களுக்கும், எம்பெருமான் எனப்படும் தருமத்திற்கும் மிகவும் வேற்றுமை உண்டு. எவ்வாறு? என்னில், ஏனைய தருமம் எதுவாயிருப்பினும், அது வேறொன்றின் உத வியை விரும்பியன்றி இராது. 'எம்பெரு மானே, அவ்வாறு வேறொன்றின் உதவியை விரும்பான்' என்பது மாத்திரமன்று; அவ்வாறு உதவியைப் பொறுப்பானும் அல்லன்.

இங்கு எடுத்துக்காட்டாகப் பின் குறிக்கப் பெறுவது நோக்கத்தக்கது. 'பரமனைச் சிந்திக்கும் சிந்தனை பக்தி' என்பது நாம் அறிந்ததேயாம். இப்பக்தி, தான் உண்டாம்போது சேதனனுடைய முயற்சியை விரும்புகின்றது; இச்சேதனன், சாஸ்திரம் கூறுகின்றவாறு முதலில் 'இன்னது பக்தி' என்பதை உணர்ந்து அங்ஙனம் உணர்ந்தவாறு முயன்று, செய்யும் போது தானே உண்டாகின்றது ; முயன்று செய்யாதபோது உண்டாவதில்லையன்றோ ?

மேலும் இப்பக்தி, பயனைக் கொடுக்கும் போது, அங்ஙனம் கொடுக்கத்தக்க அறிவு ஆற்றல்களைப் பெற்றிராமையின், பேரறிவு பேராற்றல்களைப் பெற்றிருக்கும் எம்பெருமானை உதவியாய் விரும்புகின்றது. இதனால், 'பக்தி, தான் உண்டாம்போது, சேதனனுடைய முயற்சியை உதவியாய் விரும்புகின்றது என்பதும், பயனைக் கொடுக்குங்கால், எம்பெருமானை விரும்புகின்றது' என்பதும் நன்கு புலனாகும்.

அன்றியும், சித்தம் சுத்தமாய் இராத போது, அச்சித்தம் பரமனைச் சிந்திக்கப் பாங்காயிராது. ஆதலின், எதைச் செய்தால் சித்தம் சுத்தி பெறுமோ, அதைச் செய்தல் இன்றியமையாததாகும். இச்சித்த சுத்தியை கரும யோகத்தைச் செய்து பெறலாகும். இதைக் காணுங்கால், பக்தியைச் செய்தற்குச் சித்த சுத்தி இன்றியமையாததாம். சித்த சுத்தி பெறுதற்கு கருமயோகத்தைச் செய்தல் இன்றியமையாததாம். ஆதலின், 'பக்தி, சித்த சுத்தி வழியாகக் கருமயோகத்தை உதவியாய் விரும்புகின்றதாம்' என்பது நன்கு விளங்குகின்றது? (சித்த சுத்தியாவது - உள்ளத் தூய்மையாம்)

இன்னமும், இவ்வாறு, பக்திக்கு உதவியாயுள்ள பலவற்றைச் சாஸ்திரங்களில் காணலாம்.

## உதவி வேண்டா உபாயம்

எம்பெருமான் என்னும் தருமத்திற்கோ, ஓர் உதவியும் கூறுதற்கு இன்று. நித்தியனாய் (என்றும் உள்ளவனாய்) இருத்தலின், 'உண்டாதல்' என்பதே இல்லை ; பேரறிவும், பேராற்றலும் பெற்றிருத்தலின், பயனைக் கொடுக்கும்போது, பிறருதவி வேண்டுவதில்லை; இயற்கையிலேயே மிகவும் தூய்மை பெற்றிருத்தலின், அத்தூய்மை பெற ஒன்றை வேண்டிச் செய்தலுக்கும் இடம் இன்று. இயற்கையில் தூய்மை பெற்றிருப்பவன் என்பது மாத்திரமன்று; தன் தொடர்பினால் பிறருக்கும் தூய்மையை உண்டு பண்ணுவானன்றோ ? எம்பெருமான்.

மேலும், 'வேறொன்றின் உதவியையும் எம்பெருமான் பொறான்' என்பதற்குப் பின் வரும் சரிதம் எடுத்துக்காட்டாகக் கூறப்பெற்றுள்ளது: இந்திரஜித்தினுடைய பிரமாஸ்திரத்தினால் கட்டுண்ட திருவடியை இராக்கதர் மேலும், சணல் கயிறுகளால் கட்டியபோது, அப்பிரமாஸ்திரம் நழுவியதாயும், அங்ஙனம் நழுவியிருந்தும், இராவணனுடைய உண்மைகளை உணர விரும்பி, கட்டுண்டவன் போன்று, அத்திருவடி இருக்க, அவனை அவ் இராக்கதர் இராவணன்பால் இழுத்துச் சென்றனராம்'', என்பதே அச் சரிதமாம். இச் சரிதத்தில், 'வேறொன்றின் (சணல் கயிறின்) தொடர்பைப் பிரமாஸ்திரம் பொறுத்திலது' என்பது தெளிவு. இதுபோன்று, 'எப்பெருமானும் மற்றொன்றின் உதவித் தொடர்பைப் பொறான்' என்னும் உண்மை இங்கு உணரத் தக்கதாம். இவ்வாறு, எம்பெருமானுக்கும் ஏனைய தருமங்களுக்கும் உள்ள வேற்றுமையையும், எம்பெருமானுக்குள்ள சீர்மையையும் கண்டோம்.

மேற் கூறியவாறு, 'எம்பெருமான் வேறு ஒன்றின் உதவியைச் சிறிதும் பொறான்' என்பதற்குத் தக்க சான்று யாதோ ? எனின், கூறுவோம்: சரணாகதியைக் கூறும் சான்றுகள் பல உண்டு. அவையாவன ; ''मामेव येप्रपद्यन्ते'' (மாமே வயே ப்ரபத்யந்தே) 'तमेवचाद्यम् पुरुषंप्रपद्येत्' (தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யேத்) ''त्वमेवोपायभूतो मेभव'' (த்வமேவ உபாயபூதோ மேபவ) ''ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்'' என்பனவாம்.

இச் சான்றுகளுக்கு முறையே, ''யாவர் சிலர் என்னையே பற்றுகிறார்களோ, 'அந்த

ஆதி புருஷனையே பற்றக் கடவன்' 'நீயே எனக்கு உபாயமாக வேண்டும்' 'எனக்கு உபாயம் தருமிடத்தில் உன் திருவடிகளையே உபாயமாக அளித்தாய்' என்னும் கருத்துக்கள் காணத்தக்கன.

மேற்கூறிய சான்றுகளில், உபாயப் பொருளைக் குறிக்கும் சொல்லைச் சேர்ந்தே 'ஏவ' என்னும் சொற்களைக் காண்கின்றோமல்லவா? இச்சொற்கள் இங்கு, பிரிநிலைப் பொருள் பெற்றுள்ளனவாம், அஃதாவது : 'எம்பெருமான், அவனைப் பெறுதற்கு முக்கிய காரணனும்; வேறொன்றும் முக்கிய காரணமாகவோ, துணைக் காரணமாகவோ இல்லை' என்பதாம்.

இக் கருத்தைக் காணுங்கால், சேதனன் பாலுள்ள பற்றுதல் காரணமன்று ; பற்றப் பெறும் எம்பெருமானே காரணன் என்பது தெளிவாக விளங்குகின்றதன்றோ ?

அதுவும் அவனது அருளே

இன்னமும், "இச்சேதனன் எம்பெருமானைப் பற்றுதலாகிய செயல் பேற்றுக்குக் காரணமன்று", என்பதை "तंहदेवमात्म बुद्धिप्रकाशम्' (தம் ஹ தேவம் ஆத்ம புத்தி ப்ரகாசம்) என்னும் சுருதியினாலும் நாம் நன்கு காணலாம். இந்தச் சுருதியின் கருத்து : 'எம்பெருமான் உபாயம்' என்னும் அறிவு அவ் எம்பெருமானுடைய அருளாலேயே பெறுவதொன்றும் என்பது.

இந்தச் சுருதி, முன்னம் கூறிய "முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே" என்னும் வாக்கியத்தோடு சேர்ந்திருக்கின்றமையின், 'எம்பெருமான் உபாயம் என்னும் அறிவை எந்த எம்பெருமான் தன் இன்னருளால் மலரச் செய்கின்றானோ, அவ் எம்பெருமானையே, வீடுபேற்றில் விருப்பமுடைய நான் (வேதபுருஷன்) உபாயமாகப் பற்றுகிறேன்' என்னும் கருத்து இங்குக் காணத்தக்கதாம்.

இக்கருத்தை ஆழ்ந்து ஆராய்ந்து காணுங்கால், 'முதலில், எம்பெருமான் இன்னருளுக்கு இலக்காகிய பின்பு, அவ் இன்னருளினால் 'எம்பெருமான் உபாயம்' என்னும் அறிவு பெற்று, அதன் பிறகு, அவ் எம்பெருமானைப் பற்ற விரும்பி, பிறகு, எம்பெருமானை உபாயமாகப் பற்றுகிறான்' என்னும் அடைவு நன்கு புலப்படுகின்றதன்றோ ?

எம்பெருமானை உபாயமாகப் பற்றுதற்கு அங்ஙனம் உபாயமாகப் பற்றுதல் வேண்டும் என்னும் விருப்பம் காரணமாம். அவ்விருப்பம் உண்டாதற்கு, 'எம்பெருமான் உபாயம்' என்னும் அறிவு ஏதுவாம். அவ்வறிவு பெறுவதற்கு அவ் எம்பெருமான் இன்னருள் இன்றியமையாததாம் என்று வேறொரு வழியில் அமைந்துள்ள அடைவும் இங்கு அறியத் தக்கதாகும்.

இக் கருத்தையே நம்மாழ்வாரும், "என்னுணர்வினுள்ளே இருத்தினேன். அதுவும் அவனது இன்னருளே" என்ற தமது திருவாக்கினால் வெளியிட்டிருக்கிறார்.

இது காறும் கூறியவாற்றால், "இந்தச் சேதனன் எம்பெருமானைப் பற்றிய பின்பு, இவன் துன்பம் நீங்கி இன்பம் பெறுதல் எவ்வாறு ஏற்படுகின்றதோ, அவ்வாறே, இவை இரண்டிற்கும் முன்பு இச்சேதனன் பாலுள்ள பற்றுதலும், அவ்வெம்பெருமானாலேயே உண்டாகின்றது" என்னும் முடிந்த உண்மைப் பொருளும் இங்கு நன்கு விளங்குகின்றது.

இங்கு, பின் குறிக்கப் பெறும் எடுத்துக் காட்டும் காணத்தக்கது : தந்தையான ஒருவன், தன் புத்திரனுக்கு 'காயத்ரீ' என்னும் மந்திரத்தை சாஸ்திர முறைப்படிஉதவுகிறான். அங்ஙனம் உதவப் பெற்ற அப்புத்திரனும், தன் தந்தையார் தன் கையில் கொடுத்த தனத்தை, அத் தந்தையாருக்கே தன் நன்றி அறிதலுக்கு ஏற்பத் திரும்பவும் கொடுக்கின்றான்.

இதுபோன்று, எம்பெருமான் கொடுக்க அறிவு, விருப்பம் இவற்றைப் பெற்ற இச்சேதனன், அவ்வெம்பெருமான் கொடுத்த ஆற்றலைக் கொண்டே அவனை உபாயமாகப் பற்றுகின்றான். ஆதலின், அப்பற்றுதலுக்கு உபாயத் தன்மை கொள்ளுதற்கு இல்லையன்றோ ?

## அதிகாரி விசேஷணம்

இதுவரையில் கூறியவற்றால், 'எம்பெருமானைப் பற்றும் பற்றுதல் ஸாதனமன்று ; எம்பெருமானே முக்கிய தருமமாம்' என்பதை உணர்ந்தோம். ஆனால், இப்பற்றுதல் இச்சேதனனுக்குப் பேற்றைப் பெறும்போது, உதவுகின்றது எவ்வாறு? எனின், அதிகாரி விசேஷணமாய் உதவி புரிகின்றது. இதனைச் சிறிது விரித்துக் கூறுவோம்.

சாஸ்திரங்களில், உபாயம், அங்கம், பலம் என்று கூறப் பெற்றிருத்தலை நாம் காணலாம். எம்பெருமானைப் பெற்று அவனையும், திருக்குணங்களையும், திருமேனியையும் அன்புடன் அனுபவித்து, அவ்வனுபவத்தாலாகிய ஆனந்தம் உள்ளடங்காது தூண்ட,அதனால் செய்யும் அடிமைத் தொழிலே மிகமிகச் சிறந்த பயனும். இப்பயனைப் பெறுதற்கு எம்பெருமானே உபாயமாம். இவ்வுபாயத்தை (எம்பெருமானை) ஒருவன் பற்றும்போது, ஏனைய தருமங்கள் எல்லாவற்றையும் விட்டே பற்றுதல் இன்றியமையாததாகும். இதற்கு "सर्वधर्मान् परित्यज्य" (ஸர்வதர்மான் பரித்யஜ்ய) என்னும் கண்ணபிரானுடைய திருவாக்கே தக்க சான்றும்.

"உண்பானொருவன், முதலில் நீராடியே பின்பு உண்ணுதல்வேண்டும்" 'स्नात्वाभुञ्जीत' (ஸ்நாத்வா புஞ்ஜீத) என்று எவ்வாறு சாஸ்திரம் கூறுகின்றதோ, அவ்வாறே, கண்ணபிரானும், 'பரம புருஷனாகிய என்னைப் பற்றுங்கால், ஏனைய தருமங்கள் எல்லாவற்றையும் அறவே விட்டு, என்னைப் பற்று' என்று அருளிச் செய்திருக்கின்றான். இவ்வாறு ஏனைய தருமங்களை விடுதல் என்பது அங்கமாம் (உதவியாம்).

இச்சேதனன் பாலுள்ள பற்றுதலோ, உபாயமும் அன்று; அங்கமும் அன்று. ஆனாலும், இச்சேதனன் பற்றினால், மேற்கூறிய பயனைப் பெறலாம். பற்றாவிடில் பயனைப் பெற இயலாது.

இவ்வாறு, இச்சேதனன் பாலுள்ள பற்றுதல், உபாயம், அங்கம் இவற்றில் வேறுபட்டதாயும், பயன் உண்டாம்போது வேண்டப் பெறுவதாயும் இருக்கின்றமையின், இஃது அதிகாரி விசேஷணமாம்.

இங்கு, கண்ணன் அருளிச் செய்த

"सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहंत्वासर्वपापेभ्यो मोक्षयिष्यामि माशुचः ।।"

(ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வ பாபேப்ய: மோக்ஷயிஷ் யாமி மாசுச: ||

என்னும் வார்த்தை காணத் தக்கது.

இவ் வார்த்தையில், "ஸர்வ தர்மான் பரித்யஜ்ய" என்னுமிடத்து, முற்கூறியவாறு 'ஏனைய தருமங்களை அறவே விடுதல்' என்னும் அங்கத்தையும்; "மாம்" என்னுமிடத்து, எம்பெருமானாகிற உபாயத்தையும்; 'ஏகம்' என்னுமிடத்து இவன் பாலுள்ள பற்றுதல் உபாயமன்று; 'எம்பெருமான் வேறொன்றின் உதவியைப் பொறான்' என்பதையும், "வ்ரஜ" என்னுமிடத்து, இவன் பற்றும் பற்றுதலையும், "த்வா" என்னுமிடத்து, பற்றுதலைச் செய்த சேதனனாகிற அதிகாரியைக் கூறும் முகத்தாலே 'பற்றுதலாகிய அதிகாரி விசேஷணத்தையும்', 'ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ் யாமி' என்னுமிடத்து, பரமனை அடைய ஒட்டாது தடையாயிருக்கும் பாவத்தைப் போக்கி அளித்தலையும் கண்ணன் வெளியிட்டிருப்பது தெளிவு.

மேலும்,

"தனக்கடிமைபட்டது தானறியானேலும்
மனத்தடைய வைப்ப தாம் மாலை—
வனத்திடரை
ஏரி யாம் வண்ணமியற்று மிது வல்லால்
மாரி யார் பெய்கிற்பார் மற்று"

என்னும் பூதத்தார் பாட்டும் இங்கு அனுபவிக்கத் தக்கதாம். இப்பாட்டில் முன் அடிகள் தெரிவிக்கும் கருத்து : "இச்சேதனன், 'எம்பெருமான் உடையவன்; தான்

உடைமைப் பொருள்' என்னும் உண்மை உணர்வு பெறுதிருந்தும், பெரியோர் செய்யும் முறையைக் கண்டாகிலும், எம்பெருமானைத் தன் மனத்திலே கொண்டு விரும்பக் கடவன்'' என்பதாம்.

இனிப் பின்னடிகளின் பொருளைக் காண் போம். (இச்சேதனனுக்கு முன்னடிகளில் கூறியவாறு) விருப்பம் மாத்திரம் உண்டாளு லும், எம்பெருமான் இவன் விரோதியைப் போக்கி, இவனுக்குத் தன்னைத்தானே தந்த ருளுவன். எவ்வாறு? என்னில்,

காடெழுந்து மேடாயிருக்கும் நிலத்தை ஏரியாக வெட்டுகின்றோம். இச்செயல் மழை பெய்தற்குக் காரணமன்று. நாம் ஏரி வெட்டு கின்றோம் என்பது பற்றியே மழை பெய்யுமா? அல்ல. இதனுல், 'ஏரி வெட்டுதல் மழை பெய்தற்குக் காரணமன்று' என்பது உலகறிந் ததேயாம். ஆனுல் ஏரி வெட்டுதல் மழை பெய்தற்குக் காரணமன்ருகில் அங்ஙனம் வெட்டுதல் பயனற்றதுதானே ! என்று எண் ணலாகாது. பரமனுடைய நினைவினுல் மழை பெய்யும்போது, அம்மழை நீரை அவ் வனத் திடர் தாங்கிக் கொள்ளுமோ ? கொள்ளா தன்றோ ? அத்திடரைத் திருத்தி, ஏரியாக அமைத்து வைப்போமாயின், மழை பெய்யும் போது, அம்மழை நீரை அந்த ஏரி தாங்கித் தன் பால் வைத்துக் கொள்ளும் என்பதே பின்னடிகளின் பொருளாம்.

இதனுல் 'ஏரி வெட்டுதல், மழை நீர் பழுதுபடாமைக்காகவே யன்றி, மழையைப் பெய்வித்தற்காக வன்று' என்பது நன்கு தெரி கிறது.

இங்கு, எம்பெருமானை உபாயமாகப் பற்றுதாரை வனத்திடராகவும், எம்பெரு மானை உபாயமாக பற்றும் பற்றுதலை, ஏரி யாம் வண்ணம் இயற்றுதலாகவும், சேதனன் பால் உள்ள எம்பெருமான் இயற்கை இன்ன ருளை, ஏரியில் தங்கின மழை நீராகவும் கொள் ளுதல் பொருத்தமாகும்.

இங்குத் தேறிய முடிந்த பொருள் என்ன? எனில், ''சேதனராகிற நாம் செய்யும் நற் செயல்களெல்லாம், எம்பெருமானுடைய இயற்கை இன்னருளைத் தாங்கிக் கொள்வ தற்கு ஒருவாறு உறுப்பாம் என்பதொழிய, அப்பரமன் அருளை உண்டாக்குதற்கு உடலா காது'' என்பதே அம்முடிந்த பொருளாம்.

இதனுல், ''ஏரி வெட்டுதல் போன்று, சேத னன் எம்பெருமானைப் பற்றுதலாகிய செயல் உபாயமன்று ; ஏரி வெட்டுதல் எவ்வாறு இன்றியமையாததோ, அவ்வாறே எம்பெரு மானை உபாயமாகப் பற்றுதலும் இன்றியமை யாததாம்'' என்பதை இங்கு ஸாரப்பொரு ளாய்க் காணலாம். இக்கருத்தைத் திருவுள் ளத்தில் கொண்டு, பிள்ளைலோகாசார்யர், ப்ரபத்தியை அதிகாரி விசேஷணம் என்று திரு வுள்ளம் பற்றியிருக்கிறுர்.

இதுகாறும், பிள்ளைலோகாச்சார்யரு டைய திருவுள்ளத்தைச் சுருக்கமாய்க் கண் டோம். இனி, தேசிகன் திருவுள்ளத்தைக் காண்போம்.

'எம்பெருமானைச் சிந்திக்கும் சிந்தனை பக்தி' என்று முன்னமே கூறியிருந்தோம். இப்பக்தியைச் செய்யத் தகுந்த அறிவும் ஆற் றலும் உள்ளவன், இதையே மோக்ஷ ஸாதன மாகச் செய்யக்கடவன். அறிவும் ஆற்றலும் இன்றி இருப்பவனே, பக்தியைச் செய்யமாட் டாது இருப்பினும், வீடுபேற்றை இழக்கவேண் டியதில்லை; எம்பெருமானை உபாயமாகப் பற் றினுல், அந்த எம்பெருமான் பக்தி ஸ்தானத் தில் வந்து சேருவன். அங்ஙனம் வந்து சேர்ந்த எம்பெருமான், (பக்தி ஸ்தலத்தில் பக்தி எங்ஙனம் வீடுபேற்றிற்கு ஸாதனமோ, அங்ஙனமே) மோக்ஷத்திற்கு உபாயம் ஆவான. இங்ஙனம், ப்ரபத்தி, எம்பெருமான் வேருெரு உபாயமாகிய பக்தி ஸ்தானத்தில் வந்து சேரு தற்குக் காரணமேயன்றி, நேராக வீடு பேற்றைப் பெறுதற்கு காரணமன்று; எம் பெருமான் தான் அப்பேற்றுக்கு காரணம். இவ்வாறு தேசிகன் திருவுள்ளத்தைச் சுருக்க மாய்க் காணலாம்.

மேற்கூறிய இரு பக்ஷங்களிலும், ப்ரபத் தியை, அதிகாரி விசேஷணமாக ஒருவரும், எம்பெருமான் பக்தி ஸ்தானத்தில் வந்து

சேருதற்குக் காரணமாக மற்றொருவரும் திருவுள்ளம் பற்றியிருத்தலைக் காண்கின்றோம். இதை நோக்குங்கால், 'இவ்விரு ஆசாரியர்களுக்கும் திருவுள்ளத்தில் வேற்றுமை உண்டு' என்பது தெரிகிறது.

ஆனாலும். 'எம்பெருமான் நேரே வீடு பேற்றிற்கு உபாயம்' என்பதை இவ்விரு ஆசார்யர்களும், திருவுள்ளக் கருத்து வேற்றுமையின்றி, ஆதரித்திருக்கிறார்கள் என்பது நன்கு இங்கு விளங்குகின்றது. இந்தத் திருவுள்ளக் கருத்தொற்றுமையே இங்கு முக்கியமாய் அனுபவிக்கத்தக்கது.

இனி, இராமாயணம் சரணாகதி தருமத்தை இயம்புகின்றவாறு சிறிது விரித்துக் கூறுவோம்.

## இராமாயணமும் சரணாகதியும்

தசரத சக்ரவர்த்தி புத்திரப்பேற்றை விரும்பி, வேள்வி செய்யும் தருணம். அத்தருணத்தில், நான்முகனும், ஏனைய தேவதைகளும், மற்றும் மஹரிஷிகளும் அவ்வேள்வியில், தம்தம் அவியை (ஹவிஸ்ஸை)ப்பெற விரும்பி, ஒன்று சேர்ந்து வந்திருந்தனர். அங்ஙனம் வந்திருந்த தேவதைகள் முதலானோர் யாவரும், நான்முகனை நோக்கி, 'ஓ பகவானே! உமது அருள்பெற்று, மிக்க பராக்கிரமம் கொண்ட இராவணன், எங்களனைவரையும் துன்புறுத்திக் கொண்டிருக்கின்றனன். நாங்கள் அவனை அடக்கத் தக்க வன்மையற்றிருக்கின்றோம். ஆதலின் அவனைக் கொல்லுதற்கு ஏற்ற உபாயத்தை நீவிர் ஆராய்ந்து அருள் புரியவேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர்.

இவ்வாறு வேண்டுங்காலத்து, சக்ரவர்த்தி வேள்வி நிகழும் நிலத்தின் கண், பேரொளி பெற்றிருப்பவனும், சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையனும், திருஅரையில் கட்டிய கசசையுடையனும், என்றும் எல்லாப் பொருளிலும் உள்ளும் புறமும் பரந்திருப்பவனும், இப்பிரபஞ்சத்திற்கு ஸ்வாமியுமான நாராயணன், வைகுந்தத்தினின்றும் எழுந்தருளினன்.

இங்ஙனம் பரமபுருஷன் எழுந்தருளின வரலாற்றைக் கூறும் வார்த்தை,

"एतस्मिन्नन्तरे विष्णुः उपयातोमहाद्युतिः ।
शङ्खचक्रगदापाणिः पीतवासाजगत्पतिः ।।"

(ஏதஸ்மிந் அந்தரே விஷ்ணு: உபயாதோ மஹாத்யுதி: சங்க சக்ர கதாபாணி: பீதவாஸா ஜகத்பதி:) என்பதாம்.

இவ்வார்த்தையில், சரணாகதி தருமத்தின் உண்மை பலவற்றை நாம் உணரலாகும்.

(1) 'தருமம், என்னும் சொல், எது பயனுக்கு ஸாதனமோ, அதைக் குறிக்கும். எம்பெருமான் அந்தஅந்த நன்மைக்குக் காரணனாயிருக்கின்றமையின், தரும சப்தத்தால் குறிக்கப் பெறுகின்றான். அவன் நித்தியமாயிருப்பவன். ஆதலின், ஏனைய தருமங்களில் ஏதேனும் ஒன்று எங்ஙனம் முயற்சி சக்தியினாலேயே ஏற்படுகின்றதோ, அங்ஙனம் எம்பெருமான் உண்டு பண்ணப்படுமவனல்லன் என்று முன்னமே கூறியிருந்தோம்.

### எம்பெருமான் எதிர்நோக்குவது

இதைச் சிலர் காணுங்கால், 'அவர் அவர் விரும்பிய பயன் அந்த அந்தக் காலத்து, யாதொரு இடையூறுமின்றி, எம்பெருமானாகிய தருமத்தினால் ஏற்படத் தட்டென்?' என்று கருதக்கூடும். ஆனாலும், இங்ஙனம் கருத இடம் இல்லை. ஏனெனில்,

'எம்பெருமானாகிய தருமம் எல்லாருக்கும் என்றும் உள்ளது' என்பது ஒருவாறு உண்மையே. ஆனாலும், அந்த எம்பெருமானாகிய தருமம் துன்பம் துடைத்து, இன்பம் அளித்து, இவனை நோக்குங்கால், இவனுடைய வேண்டு

தலையும் வேண்டுகின்றது. ''रक्ष्यापेक्षां प्रतीक्षते'' (ரக்ஷ்யா பேக்ஷாம் ப்ரதீக்ஷதே) என்னும் பிர மாண வசனம் இங்குக் காணத் தக்கது.

இதனுல், ''இரட்சித்தல் என்னும் தொழிலை இயற்கையாகப் பெற்றிருக்கும் எம் பெருமான், (காக்கப்பெறும்) இச்சேதனனு டைய வேண்டுதலை விரும்பியே இவனை இரட் சிக்கின்றுன்'' 'என்னும் சரணுகதியைப் பற்றிய ஓர் உண்மையை நாம் உணரலாகும்.

இவ்வுண்மை, மேற்கூறிய ''ஏதஸ்மிந் அந்தரே'' என்னும் வார்த்தையில் நன்கு புல னுகின்றது. எவ்வாறு என்னில்?

''எம்பெருமான், ஏனைய தேவதைகளைப் போன்று, தன் அவியைப் பெற்றுப் புசிக்க, வேள்வி நிகழும் நிலத்து எழுந்தருளினுன்'' என்பது இங்கு உண்மையன்று. அங்ஙனம், அவியைப் பெற்றுப் புசிக்கத் திருவிள்ளமிருப் பின். அவர்களைப் போன்று, 'அந்நிலத்தில் முன்னமேயே எழுந்தருளியிரானே? சங்கம், சக்கரம், தண்டு இவற்றைத் திருக்கைகளில் ஏந்தியும், திருவரையில் கச்சை கட்டியும் போர் புரிபவன் போன்று எழுந்தருளுதலும் ஏற்படுமோ?

பிறகு உண்மை என்ன? எனின், ''ஏதஸ் மிந் அந்தரே'' என்பதை இங்கு உற்று நோக் குதல் இன்றியமையாததாகும். இச்சொல்லில் நான்முகனுரை நோக்கி, 'துன்பம் தீர்ந்து இன்பம் யாம் பெறுமாறு நீவிர் ஆராய்ந்து அருள் புரியவேண்டும்' என்று தேவதைகள் வேண்டுங்காலத்து, எம்பெருமான் எழுந்தரு ளினுன் என்பது கூறப்பெற்றிருத்தலால், 'எம் பெருமான் இச்சேதனருடைய வேண்டுதலை விரும்பி இரட்சிக்கின்றுன்' என்பது வெளிப் படை.

''பிரமாஸ்திரம் எங்ஙனம் சணல் கயிற் றின் தொடர்பைப் பொறுக்கின்றதில்லையோ; அங்ஙனமே, 'எம்பெருமானும் வேறென்றின் தொடர்பைப் பொறுன்' என்று முன்னம் கூறியிருந்தீர்கள். இப்போது, 'இச்சேதனன் வேண்டுதலை எம்பெருமான் எதிர்பார்த்தே இவன் காரியம் செய்கின்றுன்' என்று கூறு கிறீர்கள். இக்கருத்துக்கள் இரண்டும் பொருந்துமாறு யாங்ஙனம்?'' எனச் சிலர் இங்கு வினவக்கூடும்.

ஒருவன், வேறொருவரின் உதவி சிறிதும் இன்றி, சமையலைச் செய்ய வல்லவன், அவனை வேறொருவன் தன் வீட்டுச் சடங்கு நிமித்த மாய்ச் சமையல் தொழில் புரியுமாறு வேண் டிக் கொள்கின்றுன். அங்ஙனம் வேண்டிக் கொள்ளப்பெற்ற அவனும் அவ்வேண்டுகோ ளுக்கு இணங்கி, சமையல் செய்கின்றுன்.

இவ்விடத்து, ''வேறொருவரின் உதவி சிறி தும் வேண்டாதவன் இவன் என்று கூறினீர் களே? இவன் சமையல் நிமித்தமாய் வேறொ ருவன் வேண்டுதலை விரும்பித்தானே, வந்து சமையல் செய்தனன்'' என்று முரண்பாடு தோன்ற வினவுவாரும் உண்டோ? இல்லை யன்றே? இங்குக் கருத்து யாதோ? எனின், சமையல் செய்பவன் சமையலைச்செய்யுங்கால், வேறொருவரின் உதவியைச் சிறிதும் விரும்பி யிருப்பின், அஃது அவன் சிறப்பிற்கு (வேறொரு வரின் உதவி சிறிதும்இன்றி சமையலைச் செய்ய வல்லவனுயிருக்கைக்கு) அழிவை விளைக்கும். அஃது இல்லையன்றே?

இது போன்று, எம்பெருமானுகிய தருமம் இச்சேதனன் காரியம் செய்யும்போது, வேறொன்றின் தொடர்பை வேண்டினுல், அத் தருமத்தின் சிறப்பிற்கு அவ்வேண்டுதல் அழிவை விளைக்கத்தான் செய்யும். அங்ஙனம் வேண்டாமையின், முன்னம் கூறிய அச்சிறப் பிற்கு (வேறொன்றின் உதவித் தொடர்பை வேண்டாதவனுயிருக்கைக்கு) யாதொரு குறை கூறுதற்கும் இடம் இல்லையன்றே?

இவ்வாறு, 'இச்சேதனன் வேண்டுதலை விரும்பி எம்பெருமான் இவன் காரியம் செய் பவன்' என்னும் உண்மையை உணர்ந்தோம். இனி, இவ்வார்த்தையில், சரணுகதியைப் பற்றிய வேறொரு உண்மையையும் நாம் காண லாகும். அவ்வேறொரு உண்மை யாதோ? எனின், கூறுதும்.

### வேண்டுவது விலக்காமையே

(2) எம்பெருமான் உடையவன்; சித்தும்

அசித்தும் உடைமைப் பொருள் என்று முன்னமேயே கூறியிருந்தோம். 'உடைமைப் பொருள்' 'உடையவன்' என்னும் உண்மைப் பொருள் இரண்டனுள், உடைமையை நோக்கிக் காக்கும் பொறுப்பு உடையவனுக்கு என்றும் உண்டு. அவ்வுடைமைப் பொருள் அறிவுற்றிருக்கும் ஜீவனுயிருந்தால், அந்த ஜீவனுடைய விலக்காமையைக்கண்டு, உடனே வந்து இரட்சிப்பவன் எம்பெருமான். இவ்வுண்மை ''ஜகத்பதி'' என்னும் சொல்லை உற்று உணர்ந்தால் நன்கு உணரலாகும். இச்சொல் 'இப்பிரபஞ்சத்திற்கு ஸ்வாமி' என்னும் பொருளைக் காட்டி நிற்கின்றமையின், 'இப்பிரபஞ்சம் 'உடைமைப் பொருள்' எம்பெருமான் உடையவன்' என்பது இங்குத் தெளிவன்றே? 'இராவணனால் துன்புற்றிருக்கும் தேவதைகள் முதலானோருக்கு உள்ள விலக்காமையைக் கண்டு, உடனே எம்பெருமான் எழுந்தருளினன்' என்னும் உண்மையை இங்குக் காணலாமல்லவா?

மேற்கூறிய உண்மைகளை உணருங்கால், 'இச்சேதனன், எம்பெருமானுகிய தருமத்தினல் தன் நிலைக்கேற்ற நன்மையை அடையும்போது, 'சேதனனுகிய இப்பொருள் எம்பெருமான் ஒருவனுக்கே இரட்சிக்கத் தக்கதாம்' எம்பெருமான் கிட்டிக் காக்கும்போது, அவன் செய்யும் இரட்சணத்தை விலக்காது இருத்தலும் இவனுக்கு இன்றியமையாததாம்' என்பன தேறிய பொருள்களாக நன்கு விளங்குகின்றனவல்லவா?

### பிராட்டியை முன்னிடுதல்

இனி, இந்த இராமாயணத்திலேயே, 'இச்சேதனன் எம்பெருமானைச் சரணம் பற்றுங்கால், பெரிய பிராட்டியாரை முன்னிடுதலும் இன்றியமையாததாகும்' என்னும் ஸாரப் பொருளையும் நாம் காண்போம். இப்பொருளை இராமாயணம் பலவாருக விரித்துக் கூறியிருக்கின்றது. இதைச் சிறிது விவரிப்போம்.

எம்பெருமானும் பெரிய பிராட்டியாரும் இச்சேதனனை இரட்சிப்பவராம். எம்பெருமான், இச்சேதனன் துன்பம் தீர்ந்து, இன்பம் பெற்று வாழ்தற்கு முக்கிய காரணனும். பெரிய பிராட்டியாரோ, இச்சேதனன் எம்பெருமானைச் சரணம் பற்றுங்கால், புருஷகாரமாயிருந்து உதவியைச் செய்பவராம்.

புருஷகாரமாயிருந்து உதவியைச் செய்கை யாவது : இச்சேதனன் எமபெருமானைச் சரணம் பற்றுங்கால், இவன் நெடுகின காலத்தில் அறிந்தும் அறியாமலும் எண்ணிறந்த பாவங்களைச் செய்திருக்கின்றமையினுலும், இவன், தன் முன்னிலையில் வநது நிற்குங்கால், பேரறிவாளனுகிய தனக்கு இவனது பாவம் முற்றும் நினைவுக்கு வருவதாலும், அந்த அந்தப் பாவத்திற்கு ஏற்ப, பயனை அளித்து நல்வழியில் நடத்திப் போருமவனுய்த் தான் இருப்பதாலும், எம்பெருமான் சீறிச் சிவந்து இச்சேதனனைக் கண்கொண்டு பாரான. அஙஙனம் இருக்குங்கால், இப்பரமனுக்கு, அவனுக்கும் (பரமனுக்கும்) இவனுக்கும் (சேதனனுக்கும்) உள்ள தொடர்பை உணர்த்தி, இவன் நிலையை அறிவித்து, இரக்கத்தையும் இவன் பிழையைப் பொறுக்கும் தன்மையையும் கிளப்பி, இவனைக் கண்கொண்டு பார்க்கச் செய்து, அப்பரமன் இவனைத் திருவுள்ளமுவந்து அங்கீகரிக்குமாறு பெரிய பிராட்டியார் உதவி புரிகிருர். இங்ஙனம் உதவிபுரிகையே புருஷகாரமாயிருந்து உதவி செய்கையாம்.

சரணுகதி தருமத்தைப் பற்றிய இந்த உண்மையை, இராமாயணத்தின் முடிந்த பொருளாய்ப் பின்வருமாறு பெரிய வாச்சான் பிள்ளை அருளிச் செய்திருக்கிருர் :—

''அவள் புருஷகரமாக அவனைப்பற்றுவதே பலவ்யாப்தமாவது. இது தான் காக விபீஷணுதிகள் பக்கலிலே காணலாம். அவளை அநாதரித்து இவனைப் பற்றின சூர்ப்பணகை அநர்த்தப் பட்டாளிறே. பெருமாளை யொழியப் பிராட்டியைப் பற்றின இராவணனும் அநர்த்தப்பட்டான். இருவரையும் பற்றிஞலிறே ஸ்ரீவிபீஷணுழ்வானைப் போலே வாழலாவது''.

இதின் கருத்தைச் சிறிது விரித்துக் கூறுவோம் :— முதலில், காகத்தின் வரலாற்றைக் காண்போம். ''திருச்சித்திரக் கூடத்தில், இராமபிரான் ஸீதாபிராட்டியார் மடியில் திருக்கண் வளருங் காலம். அக்காலத்தில்,

இந்திரனுடைய புத்திரனும், கெட்ட எண்ணத்தினால் காகத் தன்மையைப் பெற்றிருப்பவனுமாகிய காகாஸுரன் ஸீதாபிராட்டியாரைக் கிட்டி,— திருமேனியில் புண்ணை உண்டாக்கினன். அப்பிராட்டியார் துன்பம் பொருமல், தன் மடியில் கண்வளரும் எம்பெருமானை எழுப்பினர். உணர்ந்தெழுந்து அப்பெருமானும், காகத்தின் பாவச் செயலைக் கண்கூடாகக் கண்டு, பிரமாஸ்திரத்தை அக்காகத்தின் மீது விட்டருளினன். அதுவும், அந்த அஸ்திரத்தினல் துரத்தப்பட்டு, ஓரிடத்தில் ஒன்பது தடவை சென்று இரட்சணத்தை இரந்தும், ஒருவரும் இரங்கவில்லை. அப்போது புகலற்று அப்பெருமான் எழுந்தருளி இருக்கும் இடம் வந்து, விழுந்து கிடந்தது. தரையிலே தலையும் பெருமான் மடியிலே கால்களுமாய்க்கிடந்தது. அக்காகத்தின் நிலையைக் கண்ட ஸீதா பிராட்டியார் அக் காகத்தை இரட்சிக்குமாறு அப் பரமனை வேண்டிக் கொண்டனர். அப் பரமனும் அஸ்திரம் பயனற்றதாய் ஆகாமையின், அதனல் அக் காகத்தின் கண்ணை அழித்து, அதற்கு உயிர்ப் பிச்சைக் கொடுத்து, அதனை இரட்சித்தனன்'' என்பதே காகத்தின் வரலாரும்.

இவ்வரலாறு :— "सपित्राच परित्यक्तः सुरेश्च समहर्षिभिः। त्रीन् लोकान् संपरिक्रम्य तमेव शरणंगतः।" (ஸபித்ராச பரித்யக்த: ஸுரைச்ச ஸமஹர்ஷிபி: | த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத : |) என்னும் (இராமாயணம் ஸுந்தரகாண்டத்தில் உள்ள) வார்த்தையிலும்,

'' சித்திர கூடத்திருப்பச் சிறு காக்கை முலை தீண்ட
அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி
வித்தகனே ! இராமாவோ ! நின் அபயம் என்று அழைப்ப
அத்திரமே அதன் கண்ணை அறுத்ததும் ஓரடையாளம்''

என்னும் பெரியாழ்வார் திருவாக்கிலும் காணலாம். இவ்வரலாற்றில் அமைந்துள்ள ஸாரப் பொருளைப் பின் வருமாறு காணலாம் :

ஸீதா பிராட்டியார் திறத்தில் இராவணனும், காகா ஸுரனும் பொறுக்கொணுத் துன்பத்தை விளைவித்தவர்களாம். ஆனாலும் இராவணனைக்காட்டிலும் காகா ஸுரனுக்குப் பாவம் அதிகமாம். எங்ஙனம் ? என்னில், இராவணன் அப்பிராட்டியாரை எடுத்துச் சென்று, அசோகவனத்தி சிறையில் வைத்து, தானும், ஏகாக்ஷி முதலான அரக்கிமாரும் பல தடவை சொல்லொணுச் சொற்களைச் சொல்லித் துன்புறுத்தியது ஒருவாறு உண்மையே. ஆயினும் காகா ஸுரனைப் போன்று, அப்பிராட்டியார் திருமேனியில் புண்ணை உண்டாக்க வில்லை யன்றோ? ஆதலின், காகாஸுரன் பாவம் அதிகமன்றோ?

இக் காகாஸுரன், பிரமாஸ்திரத்தினல் துரத்தப் பெற்று எங்கும் புகலற்று, செயலற்றுப், பரமன் முன்னிலையில் விழுந்து கிடந்தது போன்று, இராவணனும், இராம பிரானுடன் முதலில் போர் புரிந்த போது, அவ் எம்பிரான் பாணங்களால் அடிபட்டு, கையில் உள்ள வில்லை விழ விட்டு, இரதத்தில் தனக்குரிய இடத்தையும் விட்டுச் செயலற்றுக் கிடந்ததாய்' வால்மீகி முனிவன் வரலாற்றைக் கூறியிருக்கிறான்.

'இங்ஙனம் செயலற்றுக் கிடத்தல்' என்பது, காகம் இராவணன் இவ்விருவருக்கும் ஒத்திருந்தும், இராவணனிலும் காகம் மிக்க பாவம் பெற்றிருந்தும், இராவணன் இலங்கையுடன் அழிவு பெற்றதற்கும், காகம் (கண்ணழிவு மாத்திரம் பெற்று) உயிரழிவு பெருததற்கும் காரணம் யாதோ? எனின் காகத்திற்கு ஸீதா பிராட்டியார் முன்னிலையும், அதனல், அப் பிராட்டியார் இயற்கை இன்னருளுக்கு இலக்கானதும் உண்டு. ஆதலின், வாழ்வு பெற்றான். இராவணனுக்கோ, அப் பிராட்டியார் முன்னிலையும், அதனுலாம் இயற்கை இன்னருளுக்கு இலக்காதலும் இல்லை. ஆதலின் முடிந்தான். இவ்வுண்மை, இராவணன் வரலாற்றோடு காகத்தின் வரலாற்றையும் சேர்த்து உணருங்கால், நன்கு விளங்குகின்றதன்றோ ?

இங்கு, '' இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது; அதில்லாமையே இராவணன்

முடிந்தான்'' என்னும் பிள்ளைலோகாசார்யர் திருவாக்கும், ''இவள் ஸந்நிதியாலே அபரா தத்தைத் தீரக் கழியச் செய்து ப்ரஹ்மாஸ்த் ரத்துக்கு இலக்காய் தலையறுப்புண்ணத் தேடின காகம்.... ..தலை பெற்றுப் போய்த்து; அப்படியிருக்கிற இவள்ஸந்நிதி இல்லாமயை யாலே போக்கற்றுச் செயல் மாண்டு நின்ற நிலை யொத்திருக்கச் செய்தேயும், காகத்தோ பாதி அபராதமு மின்றிக்கே யிருக்க, ராமசரத் துக்கிலக்காய் இராவணன் முடிந்து போனன் என்கை'' என்னும் மணவாளமாமுனிகள் திரு வாக்கும் அனுபவிக்கத் தக்கவை.

இதுகாறும் கூறிய காகாஸுரன் வரலாற் றினல், ''மிக்க பாவம் பெற்றிருப்பவனும், பிராட்டியாரை முன்னிடும் போது, எம் பெருமான் இன்னருளுக்கு இலக்காகி, நன்மை பெற்று, வாழ்வு பெறலாம்'' என் னும் உண்மைக் கருத்து தெள்ளிதின் விளங்கு கின்றதன்றே?

மேலும், இராவணனும், சூர்ப்பணகை யும், விபீஷணனும் ஒரு குடியிலே பிறந்தவர் கள். இராவணன் எம்பெருமானை அறிவிலக்கி, பிராட்டியாரை மாத்திரம் முறைதவறி விரும் பினன். சூர்ப்பணகை பிராட்டியாரை விட்டு, எம்பெருமானை மட்டும் முறை தவறி விரும்பினள். பிராட்டியாரை விட்டு என்பது மட்டும் இல்லை; ஏன் பிராட்டியாரை இடையூறாகக் கருதி, விழுங்கவும் முயன்றாள். இவ்விருவரும் நன்மையைச் சிறிதும் பெற்ற ரில்லை. விபீஷணனே, இராவணன், சூர்ப் பணகை இவ்விருவருடன் பிறந்திருந்தும் இவ் விருவரைப் போன்று, முறை தவறி ஒருவரை விட்டு ஒருவரை மாத்திரம் விரும்பாமல், பிராட்டியார் எம்பெருமான் இருவரையும் முறையுடன் பற்றி, இருவர் சேர்த்திக்கும் முயற்சி மேற் கொண்டதால் இன்றும் வாழ்ந்து போருகின்றனன்றே? திருவரங்கத் தில் எம்பெருமான் இன்றும் விபீஷணனை நோக்கிக் கிடக்கின்றனன்றே? இவ்விடத் திலே, ''தென்திசை இலங்கை நோக்கி'' என் னும் தொண்டரடிப்பொடியார் திருவாக்கும், இத் திருவாக்கிற்குப் பொருள் கூறுமிடத் துள்ள ''தென் திசை இலங்கை நோக்கி (முன் புத்தை திக்குகளைக் கடாக்ஷித்தது அவ்வோ தேசங்களின் வெறுமை தீருகைக்காக) இது தம் குறை தீருகைக்காக; மாதா ப்ரஜை களுக்கு முலை கொடுத்து அவற்றின் முக மலர்த்தி காண்கைக்குப் பாங்காகச் சாயுமா போலே'' என்னும் பெரியவாச்சான் பிள்ளை திருவாக்கும் அனுபவிக்கத் தக்கவை.

மேற்கூறிய இரு திருவாக்குகளிலும், 'விபீ ஷணன், இன்றும் எம்பெருமானுடைய இன் னருளுக்கு இலக்காயிருந்து வாழ்ந்து போரு கிறன்' என்பது நன்கு விளங்குகின்றதன்றே?

இது காறும் கூறியவாற்றல், 'இச்சேத னன் எம்பெருமானைப் பற்றுங்கால், பெரிய பிராட்டியாரை முன்னிடுதல் இன்றியமையாத தாம்' என்பதை ஒருவாறு கண்டோம்.

### இறைவன் திருவுள்ளத்தை பின் சென்று பற்றுதல்

இனி, ''இச்சேதனன் எம்பெருமானை உபாயமாய்ப் பற்றும்போது, இவன் பற்றும் அப்பற்றுதல் அவ் எம்பெருமான் திருவுள்ளத் தைப் பின் சென்றிருக்க வேண்டும்'' என்பதும் சரணகதியைப் பற்றிய ஓர் உண்மையாகும். இவ்வுண்மையைப் பரதன் வரலாற்றில் நாம் அறியலாகும்.

''கூனியின் கூற்றினல் கலங்கிய கைகேயி, பரதன் முடியையும், இராமபிரான் வன வாஸத்தையும் சக்ரவர்த்தியிடம் வேண்ட, அச்சக்ரவர்த்தியும் ஸத்தியத்திற்குக் கட்டுப் பட்டு அளிக்க, இராமபிரானும் வனம் செல்ல, அதனல் சக்ரவர்த்தியும் துஞ்ச, கேகய தேசத் தினின்றும் அயோத்தி வந்த பரதன் இவ்வர லாறுகளை அறிந்து, சக்ரவர்த்திக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து முடித்து, சித்திரகூடம் சென்று, இராமபிரான் திருவடித் தாமரைகளை உபாயமாகப்பற்றி, 'இப்போதே திருவயோத்திக்கு எழுந்தருளி முடிசூடிக் கொள்ளுதல் வேண்டும்' என்று அவ் இராமனை ஆர்த்தியுடன் வேண்டின இடத்தும், அப் பிரான் அதற்கு இசையாது இருக்க, அத்தரு ணம் அவன் திருவடி நிலைகளை அருள, அவற் றைப் பெறுப் பேறாகப் பெற்று, திரும்பி நந்தி க்ராமம் வந்து, அத்திருவடி நிலைகளுக்கு அபி ஷேகம் செய்து, அவற்றுக்குப் பரதந்திரனய்,

பதினான்கு ஆண்டு பரமபுருஷன் வரவை எதிர் பார்த்துக் காலம் கழித்துக் கொண்டிருந் தனன் பரதன்'' என்பதே அப்பரதன் வர லாறும்.

இவ்வரலாற்றைக் காணுங்கால், ''இராம பிரான் திருஅயோத்திக்கு எழுந்தருளி முடி சூடிக் கொள்ளுதல்'' பயன் என்பதும், ''அப் பயனுக்கு அவன் திருவடிகளே உபாயம்'' என்பதும் பரதன் எண்ணத்தில் நன்கு விளங்கு கின்றன அல்லவா ?

இங்கு வால்மீகி முனிவன், இவ்வரலாற் றைக் கூறுங்கால், **''अभिषञ्चस्व चाद्यैव''** (அபி ஷஞ்சஸ்வ சாத்யைவ) என்றும், **''एवमुक्त्वा महाबाहुः सबाष्पः कैकयी सुत. । रामस्य शिरसा पादौ जग्राह विधिवत्पुनः ।।''** (ஏவமுக்த்வா மஹா பாஹு : ஸபாஷ்ப : கைகயீஸுத : । ராமஸ்ய சிரஸா பாதௌ ஜக்ராஹ விதிவத் புந : ।।) என்று கூறியிருப்பது காணத்தக்கது.

மேற்கூறிய வார்த்தைகளுள், ''அத்யைவ அபிஷஞ்சஸ்வ'' என்னும் பகுதியில், ''பரதன் விரும்பும் காலத்திலேயே முடி சூடிக் கொள்ளு தல் அப்பரதன் விரும்பிய பயன்'' என்பதும், ''ஸபாஷ்ப ;'' என்பதில், ''பரதன் ஆர்த்தி யுடையவன்'' என்பதும், ''ராமஸ்ய பாதௌ சிரஸா ஜக்ராஹ'' என்னும் பகுதியில், ''பரதன் இராமபிரானுடைய திருவடிகளை உபாயமாய்ப் பற்றியவன்'' என்பதும், ''விதி வத்'; என்பதில் ''அப்பரதன் அங்ஙனம் பற் றும்போது, முறையுடன் பற்றியவன்'' என்ப தும் நன்கு விளங்குகின்றனவல்லவா ?

இக்கருத்துக்களை மனத் திருத்திக் காணும வர்க்கு, ''பரதன் ஆர்த்தியுடன் முறைப்படி சரணம் பற்றியவன்'' என்பது தெளிவு. 'ஆர்த்தியுடன் சரணம் பற்றியவனுக்கு, அப் போதே 'பயனுண்டாம்' எனச் சாஸ்திரம் கூறுகின்றது. அவ்வாறு அப்பரதன் பயன் பெற்றனனா ? என்னில், பெறவில்லை என்றே வால்மீகி முனிவன் கூறியிருக்கின்றான். **''सकाममनवाप्यैव रामपादावुपस्पृशन् । नन्दिग्रमेऽकरोद्राज्यं रामागमनकाङ्क्षया ।।''** (ஸகாமம் அநவாப்யைவ ராம பாதாவுபஸ்ப்ருசன் । நந்திக்ராமே அகரோத் ராஜ்யம் ராமாகம நகாங்க்ஷயா) என்னும் வால்மீகி முனிவனின் வார்த்தை இங்குக் காணத்தக்கது.

இவ்வார்த்தையில் அமைந்துள்ள ''ஸகா மம் அநவாப்யைவ'' என்னும் பகுதியில், பரதன் இராமபிரானிடம் தான் விரும்பிய பேற்றைப் பெறவில்லை என்பது தெளிவு.

இங்கு, பரதன் முறைப்படி பற்றியிருந்தும், பயனைப்பெறாததற்குக் காரணம் யாதோ ? எனின், இதற்கு பரிஹாரமாய் முதலில் சிலர் கூறும் கருத்துக்களை கூறுவோம் :

*(1)* சக்ரவர்த்தி வேள்வி நிகழும் நிலத் தின் கண் எம்பெருமான் எழுந்தருளிய போது, தேவதைகள் முதலானோர், அப்பரம புருஷன் மானிட வடிவத்துடன் திருவவதாரம் செய்து இராவணனை அழிக்க வேண்டும் என விரும்பி, அவனைச் சரணம் பற்றியிருப்பது சரித்திர உண்மை. அந்தச் சரணாகதி முதலில் தேவ தைகளினால் செய்யப்பெற்றுள்ளது. அத் தேவதைகள் கோரின பயனை அளிக்கத் திரு வுள்ளங்கொண்டு, வனவாஸம் என்னும் வியா ஜத்தினால் எழுந்தருளியிருக்கும் தருணத்தில், பரதன் ஆர்த்தியுடன் சரணம் பற்றியிருக்கும் வரலாறும் நாம் அறிந்ததேயாம். இதனால், 'இப்பரதன் செய்த சரணாகதி பின்பு செய்யப் பெற்றுள்ளது' என்பது தெளிவு. முன்பு செய்த தேவதைகளின் சரணாகதிக்கு முதலில் பயனை அருள் செய்து, பின்பு செய்த பரத சரணாகதிக்குப் பின்பு பயனை அருள புரிதல் முறை எனத் திருவுள்ளம் கொண்டு, பரதன் விருப்பத்திற்கு ஏற்ப, அப்போதே இராம பிரான் திரு அயோத்திக்கு எழுந்தருளி முடி சூடிக்கொள்ளவில்லை. இது முதல பரிஹாரம்.

(2) இராமபிரான் திருவுள்ளம் புண்படு மாறு பரதனுக்குச் சில பாவங்கள் இருக்கக் கூடும் பயனின்மையைக் கண்கூடாகக் காண்கின்றமையின், அங்ஙனம் சிலபாவங்கள் இருக்கக்கூடும் என்று ஊஹிக்கலாமல்லவா ? இவ்வாறு கூறுவது இரண்டாம் பரிஹாரம்.

(3) இச்சரணாகதிக்குச் சில அங்கங்கள் (அங்கங்கள் = உதவி செய்யுமவை) உண்டு.

பெரியோரை முன்னிடுதல், பெரியபிராட்டியாரை முன்னிடுதல் போல்வன அவ்வங்கங்களாகும். பரதன் பயன் பெருததற்குக் காரணம், அவ்வங்கங்களுள், ஏதோ ஒன்றிரண்டு குறைந்திருக்கலாம். இது மூன்ரும் பரிஹாரம்.

(4) இராமபிரான், 'தந்தை, தாய் இவரைப் பூசித்தல் இன்றியமை யாததாம்' என்னும் முறையைத் தன் செயலில் நடத்திக் காட்டி, நிலைநிறுத்த வந்தவன். 'தன் தாய்' என்றும், 'வேற்றுத் தாய்' என்றும் வேற்றுமை சிறிது மில்லாதவன். கைகேயி வேற்றுத் தாயாயிருப்பினும், அத்தாய் சொல்லைப் பின்சென்று முடியையும் துறந்த பரமபுருஷனன்ரே? அவன். அப்பெருமான் அவ்வாறு பூசித்த கைகேயியைப் பரதன் பலவகையால் வெறுத்துப் பேசியது அவன் திருவுள்ளத்தை மிகவும் புண்படுத்தியது. ஆதலின், அவன் பரதன் விருப்பத்துக்கேற்ப இரங்கிஞன் இல்லை. "मातर रक्ष कैकेयीम्" (மாதரம் ரக்ஷ கைகேயீம்) என்னும் இராமபிரான் வார்த்தையும், "पूजिता मामिका माता" (பூஜிதா மாமிகா மாதா) என்னும் பரதன் வார்த்தையும் இங்குக் காணத்தக்கன. [சித்திர கூடத்தில் திருவடி நிலைகளைக் கொடுத்து அருளுங்கால், இராமபிரான் அருளிச் செய்தது, முதல் வார்த்தை. பதினன்கு ஆண்டு வனவாஸம் செய்து மீண்டு நந்திக்ராமத்தில் எழுந்தருளியிருக்கும் இராமபிரான் முன்னிலையில் பரதன் சொன்ன வார்த்தை 'பூஜிதா மாமிகா மாதா'' என்பது.] இது நான்காம் பரிஹாரம்.

இவ்வாறு சிலர் கருத்துக்கிணங்க நான்கு பரிஹாரங்களைக் கண்டோம். இப்பரிஹாரங்கள் பொருத்தமுடையன அல்ல என்பதை முறையே காட்டுவோம், இனி.

(1) தேவதைகள் சரணுகதியைத் தெரிவிக்கும் இடத்தில், ''இராவணன் அறிவை விரும்பிச் சரணம் பற்றியிருக்கிறதாகக் கூறப் பெற்றிருக்கிறதன்றி, காலம் குறிக்கப் பெற்றிலது'' என்பதை நாம் அறிதல் அவசியமாகும். அவ்விடத்துள்ள தேவதைகள் வார்த்தை — "विष्णो समरे जहि रावणम्" (விஷ்ணே ஸமரே ஜஹி ராவணம்) என்பதாம். பரதன் சரணம் பற்றுங்கால், ''அத்யைவ'' (இப்போதே) என்று காலம் குறிக்கப் பெற்றிருக்கின்றது வெளிப்படை. இதனுல், என்ன தேறிற்று என்னில் கூறுவோம்.

தேவர்களும், பரதனும் தம் தமக்கு உரிய 'இராவணன் அழிவு' 'திருஅயோத்திக்கு எழுந்தருளி முடிசூடிக் கொள்ளுதல்' என்னும் பயன்களை ஒரே காலத்தில் பெற விரும்பியிருப்பின் பயனைப் பற்றிய முரண்பாடு ஏற்படுகின்றமையின், அம் முரண்பாடு தீருமாறு பரமபுருஷனும், 'முந்திச் செய்த தேவதைகளின் சரணுகதிக்கு முந்தியும், பிந்திச் செய்த பரத சரணுகதிக்குப் பிந்தியும் பயனை அளித்தல் நன்ரும்' என்று திருவுள்ளங்கொண்டு, பரதனுக்கு அக்காலத்திலேயே உதவ இசையவில்லை என்னலாம். தேவர்களும் பரதனும் தம் தமக்கு உரிய பயனை ஒரே காலத்தில் பெற விரும்பி, பரமனை வேண்டிக் கொண்டதாகக் கூறப் பெற்றிலது.

பரதனுவது, காலத்தைக் குறிக்காது தனக்குரிய பயனைச் சரணம் பற்றி வேண்டிக் கொண்டிருந்தானென்றிருப்பின், பரமன் பரதனுக்கு அக்காலத்திலே அருளாவிடினும், இந்த ஆராய்ச்சிக்கே இடம் ஏற்பட்டிராது. அப்பரதனே, 'இப்போதே முடிசூட்டிக் கொள்ள வேண்டும்' என்று காலத்தைக் குறித்தே சரணம் பற்றியிருக்கிருன் அன்ரே?

இதனுல் பரதன் விருப்பத்திற்கு ஏற்ப, அப்போதே, முந்தி முடி சூடி, அப்பரதன் தாபத்தைந் போக்கி, பிந்தித் தேவதைகள் விரும்பியவாறு, இராவணனை அழிக்க, ஏதோ ஒன்றை வியாஜமாய்க் கொண்டு, இராமபிரான் வனததிற்கு எழுநதருளலாமன்ரே? ஆதலின், முதல் பரிஹாரம் ஏற்கத் தகுந்தன்று. (வியாஜம் = போலிக் காரணம்.)

(2) பரதன் திருவவதாரத்தின் உண்மையை உணரின், இராமபிரான் எங்ஙனம் பாவமின்றி இருப்பவனே, அங்ஙனமே அப்பரதனும், பாவ

மின்றி இருத்தலின், அப்பரதனுக்கு இராம பிரான் திருவுள்ளம் புண்படுமாறு சில பாவங்கள் உண்டு' கூறுதற்கும் இடம் இன்று. இதனுல், இரண்டாம் பரிஹாரமும் பொருத்த முடைத்தன்று என்பது தெளிவு.

(3) "ராமஸ்ய சிரஸா பாதௌ ஜக்ராஹ விதி வத் புந:" என்பதில் உள்ள "விதி வத்" என்னும் சொல்லை நோககின், "எம்பெருமானை உபாயமாய்ப் பற்றுங்கால், முறை வழுவாது பற்றியவன் பரதன்" என்பது தெள்ளிதின் விளங்குகின்றதன்றோ? ஆதலின், மூன்ரும் பரிஹாரத்திற்கும் இடம இன்று.

(4) நான்காம் பரிஹாரம் இராமாயணத்தில் ஒருவாறு கூறபபெற்றுள்ளது என்பது உண்மையே. ஆயினும் அதைப் பரிஹாரமாய் எடுத்துச் கொள்வதற்கு இல்லை. இதைச் சிறிது விரித்துக் கூறுவோம.

'இராமபிரான் பரமாத்மா, பரதன் ஜீவன்' என்னும கொளகையை உள்ளததில் கொணடு, பின்வரும உணமை உணரத்தககது. எமபெருமான எலலாச்சேதனருக்கும எனறும் தஞசமாகிய தந்தையும் தாயுமானவன். இஙஙனம தநதையாயும தாயாயும அவன் இருப்பது கருமததினுலனறு. பரமனுககும சேதனனுககும உளள ஒன்பது விதத தொடர்பும் என்றும உள்ளதனறோ? இவவாருன தொடர்பு இலக்குமணனுககும் இராமபிரானுக்கும் எஙஙனம் என்றும உள்ளதோ, அஙஙனமே பரதனுககும் இராமபிரானுககும் என்றும் உள்ளதாம். இவவாருன தொடர்பு பரதனுக்கும் கைகேயிககும உண்டோ? இல்லையன்றோ?

இலக்குமணன், (முடிசூட வைத்த முஹூர்த்தத்திலே, ஜடைசூடி இராமபிரானைக கானகம் புகச்செயத கைகேயி போன்று, விபரீதச் செயல் உண்மையில் இன்றியிருநதும) தசரதனையும ஸுமித்ரா தேவியையும் தஞ்சமாகி தந்தையாயும் தாயாயும் கருதாது, இராமபிரானையே அங்ஙனம் தந்தையாயும், தாயாயும், மற்றும் எல்லா உறவினராயும் கருதி, அவ் இராமபிரான் பின்னே, அவன் மனம் மகிழுமாறு அடிமை செய்யச் சென்றனனன்றோ? இவ்வாறு இலக்குமணன் சென்றதற்குக் காரணம் அவ் இலக்குமணனுக்குள்ள இராம பக்தியன்றோ?

அவ் இலக்குமணன் போன்று, பரதனும் மிக்க இராமபக்தி பெற்றிருப்பவனன்றோ? மேற்கூறியவாறு விபரீதச்செயல் உள்ள கைகேயியினிடம் அப்பரதனுக்கு மனம் பொருந்துமோ? அவன் தன் தாயை வெறுத்தது சாஸ்திர முறையைக் காணுங்கால், குற்றமாமோ?

பரமனிடம் வெறுப்புற்ற தாயை அறவே விட்டிடுவது, சாஸ்திரத்தின் உண்மைக்கருதது அன்றோ?

இவ்வுண்மைக் கருத்தைக் காணுஙகால், 'நான்காம பரிஹாரமும் பரிஹாரமாகாது' என்பது தெளிவாம்.

ஆனல், 'இராமபிரான் "மாதரம் ரக்ஷ கைகேயீம் மா ரோஷம் குரு தாம ப்ரதி" என்று கூறியிருக்கின்றனனே; பரதனும், பதிஞன்கு ஆண்டு வனவாஸம் செய்து, திரும்பி நநதிகராமததில் எழுததருளியிருக்கும் இராமபிரானைக குறிதது, 'பூஜிதா மாமிகா மாதா" எனறு பகவதபிபராயததைப் பினபறறி நடந்த தன செயலைக் கூறியிருககின்றனனே' எனறு சிலர் மறுபடியும மறுததுக கூறலாம்.

இப்பரிஹாரத்தை முக்கியமாய் நம் ஆசார்யர்கள் திருவுளளம் பற்றவில்லை சேதனனுடைய உணமை நிலையை உணருஙகால், கைகேயியை பரதன் வெறுத்தது மேற்கூறியவாறு குற்றமாமோ?

மேலும், இராமாயணத்தில் இப்பகுதியிலேயே இரண்டொரு உண்மைகளையும், கிஷ்கிந்தா காண்டத்தில் ஓர் உண்மையையும் இங்கு எடுத்துக்காட்டுவோம்.

(1) தந்தை ஆசாரியன் இவ்விருவருள், தந்தை சரீரத்தை உண்டுபண்ணி அச்சரீரததை வளர்ப்பவனும். ஆசாரியனே, ஞானத்தை உண்டுபண்ணி ஆத்மாவை வளர்ப்பவனும். இருவரும் உதவியைச் செய்

பவரேயாயினும், ஞானத்தை உதவும் ஆசாரியனே மிக்க சிறப்புப் பெற்றவனும். 'सहि विद्यात: त जनयति तत् श्रेष्ट जन्म गरीयान् ब्रह्मद· पिता'' (ஸஹி வித்யாத : தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜன்ம கரீயாந் ப்ரஹ்மத: பிதா) என்னும் வசனம் காணத்தக்கது, இங்கு. ஆதலின், ஆசாரியன் ஆணையைப் பின் சென்று நடத்தல் மிகவும் முக்கியமாகும்.

இவ்வுண்மையை உணர்த்தி, வஸிஷ்டர், "இராமா! உனக்கும் உன் தந்தையாருக்கும் நான் ஆசாரியன்; ஆதலின், என் சொற்படி நீ வனவாஸத்தை விட்டிட்டு, இராச்சியத்தை ஏற்று முடி சூடுதல் நன்றும்'' என்று கூறியிருக்கிறார், இராமபிரானை நோக்கி.

மேலும், ஸ்வதந்திரனை பரமனுக்கு ஆச்ரித பாதந்திரியமும் உண்டு. அஃது அவனுக்குச் சிறந்த செல்வமாம். ஆச்ரித பாரதந்திரியமாவது — பரமனாகிய தான், தன்னை அன்புடன் ஆதரித்தோருக்கு, அவர் ஏவிற்றுச் செய்யும் கையாளாயிருத்தலாம். கண்ண பிரான் பஞ்ச பாண்டவர்க்குத் தூதனும், தேரோட்டியாயும் இருந்து இழிதொழில் செய்தனனன்றே?

வஸிஷ்டர் மேற் கூறிய உண்மையையும் உணர்த்தி, இராமா! நீ பரமனன்றே? பரதன் பக்தி பெற்றிருப்பாரில் சீரியனன்றே? ஆதலின், அப்பரதன் திறத்தில் பரதந்திரனாய், அவன் ஏவிற்றுச் செய்தல் உனககுச் சிறநத செல்வமன்றே? இப்போது, பரதன் வேண்டுகின்றவாறு, நீ முடியை ஏற்றுக்கொள்ளாதிருப்பின், உனக்குரிய சீரிய செல்வத்தை இழந்தே விடுவாய்' என்றும் கூறியிருககிறார்.

இவ்வாறு வஸிஷ்டர் இராமபிரானை நோக்கிக் கூறிய உண்மைக் கருத்துக்களைப்பின் வரும் அவ்வஸிஷ்டர் வார்த்தைகளில் நாம் காணலாம்:

"प्रज्ञां ददाति चाचार्यस्तस्मात्स गुरुरुच्यते ।।
सोहं ते पितुराचार्यस्तव चैव परंतप ।
मम त्वं वचनं कुर्वन्नातिवर्तेः सतां गतिम् ।।
भरतस्य वच· कुर्वन्याचमानस्य राघव ।
आत्मान नातिवर्तेस्त्व सत्यधर्मपराक्रम ।।"

(ப்ரஜ்ஞாம் ததாதி சாசார்ய: தஸ்மாத் ஸகுரு ருச்யதே ॥ ஸோ ऽ ஹம் தே பிதுராசார்ய: தவ சைவ பரம்தப । மம த்வம் வசனம் குர்வந் நாதிவர்த்தேஸ் ஸதாம்கதிம் ॥ பரதஸ்ய வச: குர்வந் யாசமாநஸ்ய ராகவ । ஆத்மாநம் நாதிவர்த்தேஸ் த்வம் ஸத்ய தர்ம பராக்ரம ॥)

இவ்வாறு கூறிய வஸிஷ்டரை நோக்கி இராமபிரான் அருளிச் செய்த விடையாதோ? எனின், கூறுவோம்.

'உலகத்தில், சுவரை வைத்துச் சித்திரம் எழுதுதல்'' என்று ஒரு முறை உண்டு. இம்முறையைத் திருவுள்ளத்தில் கொண்டு, இராமபிரான் பின் வருமாறு விடையை அருளிச் செய்திருக்கிறான்:

சரீரம் அற்றிருப்பானுக்கு ஞானம் உண்டாதற்கும், ஆசாரியன் ஞானத்தை உதவி புரிதற்கும் இடம் இன்று. சரீரம், பெற்றிருப்பானுக்கே ஞானம் உண்டாதற்கும், ஆசாரியன் ஞானத்தை உதவி புரிதற்கும் இடம் உண்டு. இதனால், சரீரம், சித்திரம் எழுதுதற்குச் சுவர் போன்று, ஞானம் உண்டாதற்கு மிகவும் முக்கியம் எனத் தெரிகின்றதன்றே?

இவ்வாறு மிகவும் முக்கியமாயுள்ள சரீரத்தை உண்டாக்கி, வளர்ப்பதற்கு, தந்தையாரும், தாயாரும் நோன்புநோற்று, பத்து மாஸம் சுமந்து, பெற்று, பெற்றபினபும், இவனறியாது இருக்கும் சைசவ நிலையில் இவன் பொருட்டு, படாதனபட்டு இவ்வாறு உதவி புரிகின்றவராதலின், ஆசாரியனிலும் மிக மேம்பட்டவராவர். ஆசாரியனிலும், தந்தைக்கு ஏற்றமுண்டு; அவ்வாசிரியன் வசனத்திலும், தந்தையார் வசனததிற்கும ஏற்றமுண்டு. உண்மை இவ்வாறு இருத்தலின், தந்தையார் வசனமே ஆதரிக்கத்தக்கதாம். இதுவே, இராமபிரான் விடையாகும்.

இவ்விடத்து, "सहि राजा जनयिता पिता दशरथो मम । आज्ञातं यन्मया तस्य न तन्मिथ्या भविष्यति ।।" (ஸ ஹி ராஜா ஜநயிதா பிதா தசரதோ மம ! ஆஜ்ஞாதம் யந்மயா தஸ்ய ந தந்மித்யா பவிஷ்யதி) என்னும் இராமபிரான் வார்த்தை அனுஸந்திக்கத் தக்கது.

இதைச் சிறிது ஆராய்வோம்: "ராமா! ஆச்ரித பாரதந்திரியமாகிய உன் சீரிய செல்வத்தை நீ இழந்துவிடாது பரதன் விருப்பத்தை நிறைவேற்றுவாய்" என்று வஸிஷ்டர் கூறியதற்கு இராமபிரான் ஒன்றும் விடையறுத்ததாய் இங்குத் தெரியவில்லை.

இராமபிரான் இயம்பியவாறு 'தாய் தந்தைகளுக்குச் சிறப்பு உண்டு" என்பது ஒருவாறு உண்மையேயாகும். ஆனாலும், "ஆசாரியனிலும் தாய் தந்தைகளுக்கு ஏற்றம் உண்டு" என்று கொள்ளில், அவர்களிலும் ஆசாரியனுக்குச் சிறப்புக்கூறும் பல சாஸ்திரங்களோடு முரண்பாடு உண்டாமன்றோ?

மேலும், தாயையும் தந்தையையும் விடச் சொன்ன சாஸ்திரம் போன்று, ஆசாரியனையும் விடச் சொன்ன சாஸ்திரமும் உண்டோ? இல்லையன்றோ? எழுத்தறிவித்தவன் போன்றோரைச் சாஸ்திரம் விடச் சொன்னது உண்மை. "திரு அஷ்டாக்ஷரத்தை உபதேசம் செய்தவன் எம்பெருமானிலும் மிக மேம்பட்டவன்" என்பது சாஸ்திர உண்மைக் கருத்தன்றோ? வஸிஷ்டர், எம்பெருமான் இராமனுக்குத் திரு அஷ்டாக்ஷரத்தை உபதேசம் செய்த ஆசாரியரன்றோ? இவ்வுலகத்தில், தன் உபதேச மொழிகளினாலும், செயல்களினாலும் அந்த அந்த முறையை நிலைநிறுத்தத் திருவவதாரம் செய்தருளினவனும், அங்ஙனமே நிலை நிறுத்தினவனுமான இராமபிரானும், "ஆசாரியன் வசனம் ஆதரிக்கத் தக்கதன்று" "தந்தையாரின் வசனமே ஆதரிக்கத் தக்கது" என்று அருளிச்செய்வானாயின், அவ் எம்பெருமானை யார் மறுத்துக்கூற முடியும். ஸ்வதந்திரனை மறுத்துக்கூற இயலுமோ? அவன் திருவுள்ளம் அப்போதே திரு அயோத்திக்கு எழுந்தருளி முடி சூடுதற்கு இடம் தரவில்லை என்பதைத் தவிர, வேறு நோக்கு அவன் வார்த்தைக்கு உண்டோ? இல்லையன்றோ?

இக்கருத்து, இப்பகுதியிலேயே உள்ள பரதனின் வேறொரு வரலாற்றைக் காணுங்கால், உறுதிப்படுகின்றமையின், அவ்வரலாற்றையும் எடுத்துரைப்போம் இங்கு:

பரதன் தன் வேண்டுகோளுக்கு இராமபிரான் சிறிதும் இரங்கக் காணாமையின், "அந்த இராமபிரான் ஆசிரமத்தின் வாசலில், (அவன் திரு அயோத்திக்கு முடிசூட எழுந்தருளும் வரையில்) ஊணின்றி, தர்ப்பங்களைப் பரப்பி அவற்றின்மேல் கிடப்போம்" என்று எண்ணி, ஸுமந்திரனைத் "தர்ப்பங்களைக் கொண்டு வா" என்று ஏவினன். இதைக் கேட்ட ஸுமந்திரன், பரதன் கூற்று இராமபிரான் திருவுள்ளத்திற்குப் பாங்காயிராததை ஒருவாறு உணர்ந்து, அப்பரதன் ஏவினவாறு செய்யாது இருந்தனன். அத்தருணம், பரதனே, தான் எண்ணியவாறு தர்ப்பங்களைப் பரப்பி, அவற்றின்மேல் கிடக்க முயன்றனன்.

இதைக் கண்கூடாகக் கண்ட இராமபிரான், பரதனை நோக்கி அருளிச்செய்த வார்த்தை பின் வருமாறு காணத்தக்கது:

"அப்பா! நான் உடையவன்; நீ என் உடைமைப் பொருள். இங்ஙனம் உடைமையாயிருக்கின்ற உன்னை, உடையோனாகிய யான், என் விருப்பத்திற்கு ஏற்ப உபயோகம் கொள்ள எண்ணினேன். இவ்வாறு விரும்பி உபயோகம் கொள்ளுதல், எனக்குச் செய்யத்தகாத செயலாய் உன் மனத்தில் தோன்றியது போலும். அங்ஙனம் தோன்றியது மாத்திரம் இன்றி, உடைமைப் பொருளாய் உள்ள நீ, உன் நிலைக்கு உரியதும், உடையோனான என்னை அடக்கி நல் வழியில் நடக்கச் செய்வதுமாக நீ கருதிய இச் செயலை (இந்த ஆசிரமத்தின் வாசலில் தர்ப்பங்களைப் பரப்பிச் கிடத்தல் என்னும் செயலை)ச் செய்து, இதனால், என்பால் உள்ளதும், என் நிலைக்கு ஏலாததாய் நீ எண்ணியிருப்பதுமான செய்யத் தகாத செயலை (உன்னை என் விருப்பத்திற்கு ஏற்ப உபயோகம் கொள்ளுதல் என்னும் செயலை)த்

தவிர்க்கப் பார்க்கிருய் போலும். என் செயல் எனக்கு ஏற்றது' என்பதை யான் இயம்புதலும் வேண்டுமோ? உன் செயல் உனக்கு ஏற்றதாமோ? ''ஏற்றதன்று'' என்பதையும் கூறுவேன்.

ப்ராஹ்மணன் ஒருவன் தன் பொருளை ''இன்ன தருணம் தரவேண்டும்'' என்று தருணத்தைக் குறித்து, கடனுக ஒருவனுக்குக் கொடுக்கின்ருன். அங்ஙனம் கடன் வாங்கியவன், கடன்காரனுன ப்ராஹ்மணனுக்குக் கொடுக்கவேண்டிய பொருளைக் குறிப்பிட்ட காலத்துக் கொடுக்காது தவறி இருப்பின், அக்கடன்காரன் வாங்கியவன் வீட்டுவாசலில், நீ இப்போது செய்ய விரும்பியது போன்று, தர்ப்பங்களைப் பரப்பிக் கிடத்தல் நன்ரும். இது ப்ராஹ்மண தருமம். க்ஷத்திரியனுன உனக்குரியதன்று. நீ வேருெரு வருணத்தின் முறையைப் பின்பற்றியவனுதலின், உனக்குப் பாவம் உண்டாம். அப்பாவம் போமாறு, ''இனி, இவ்வாருன பாவச் செயலை நான் செய்வதில்லை'' என்று சபதம் பண்ணி, தண்ணீரைத் தொட்டு, நீ என்னைத் தொடு. ஈதே அப்பாவச் செயலுக்கு ஏற்ற பரிஹாரச் செயலாம்.''

(இக்கருத்துக்களைப் பின் குறிக்கப்பெறும் வார்த்தைகளில் காண்க :—)

''शेष्ये पुरस्ताच्छालाया यावन्न प्रतियास्यति''

(சேஷ்யே புரஸ்தாத் சாலாயா யாவந்ந ப்ரதியாஸ்யதி) என்பது பரதன் வார்த்தையாம்.

''किं मां भरत कुर्वाणं तात प्रत्युपवेक्ष्यसि''
''ब्राह्मणो ह्येकपार्श्वेन नरान् रोद्धुमिहार्हति ।
न तु मूर्धाभिषिक्तानां विधिः प्रत्युपवेशने ।''
उत्तिष्टत्वं महाबाहो मां च स्पृश तथोदकम् ।।

(கிம் மாம் பரத குர்வாணம் தாத ப்ரத்யுப வேக்ஷ்யஸி | ப்ராஹ்மணேஹ்யேக பார்ச்வேந நராந் ரோத்தும் இஹார்ஹதி | நது மூர்த்தாபிஷிக்தாநாம் விதி: ப்ரத்யுப வேசநே || உத்திஷ்ட த்வம் மஹாபாஹோ! மாம்ச ஸ்ப்ருச ததோதகம்)

[இவ்வாறே பரதனும் பரிஹாரச் செயலைச் செய்ததாய்ச் சரித்திரம்]

இங்கு உண்மை பின்வருமாறு உணரத் தக்கதாம். இராமபிரான் சக்ரவர்த்தித் திருமகனுகை இருக்கின்றமையின், க்ஷத்திரியனே ஆவான்.

மேலும், இப்பரம புருஷனுடைய திருவடிநிலைகள் திரு அபிஷேகம் செய்யப் பெற்றிருக்கின்றமையின், ''இப்பரம புருஷன் மூர்த்தாபிஷிக்த க்ஷத்திரியன்'' என்று கூறுதற்குக் தடை ஒன்றும் இராது அன்ருே?

அன்றியும், இந்த இராமபிரான், வானர வெள்ளங்களுடன் கடற்கரை சேர்ந்து, கொந்தளிக்கும் அக்கடலைக் கண்டிருக்கும் காலம். அக்காலத்து, அவ்வாருன கடலைக் கடந்து செல்லத் தக்க உபாயம் யாதோ? என ஆராய்ந்து காணுங்கால், அப்பரம புருஷன் ''இக்கடலைக் கடந்து அக்கரை செல்லுதற்கு, 'கடலரசனை நோக்கி அவன் அருள் புரியுமாறு இக்கடற்கரையிலே தர்ப்பங்களைப் பரப்பி அவற்றின் மேலே கிடத்தல்,' அணைகட்டுதல், இக்கடலைத் தண்ணீர் சிறிதும் இன்றி வற்றச் செய்தல், எனப் பல உபாயங்கள் உண்டு. அவற்றுள், கடற்கரையிலே தர்ப்பங்களைப் பரப்பிக் கிடத்தலே சிறந்த உபாயமாம்'' என்று அருளிச் செய்திருக்கின்றனன்.

''तपसा सेतुबन्धेन सागरोच्छोषणेन वा ।
सर्वथा सुसमर्थोस्मि सागरस्यास्य लङ्घने ।।''

(தபஸா ஸேதுபந்தேந ஸாகரோச்சோஷணேந வா |
ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி ஸாகரஸ்யாஸ்ய லங்கநே) ||

என்னும் அவ் இராமபிரான் வார்த்தை இங்குக் காணத் தக்கது.

இவ்விடத்து, 'தபஸா' என்னும் சொல் நோக்கத் தக்கது. இன்னமும் 'தர்மாத்மா'

என்று கொண்டாடப் பெறும் விபீஷணனும், "இராமபிரான் இவ்வாறு கடலரசனை நோக்கிக் கிடத்தலே நன்றும்'' என்று கூறியிருக்கின்றனன்.

இராமபிரானும், கடலரசனைக் குறித்து, தர்ப்பசயனத்திலே கிடந்தனன் என்பது சரித்திர உண்மை. அபிஷேகமில்லாத பரதனை நோக்கி, ''இது ப்ராஹ்மண தருமம்; அபிஷேகம் செய்யப்பட்டுள்ள க்ஷத்திரியன் இவ்வாறு செய்தல் தீதாம்'' என்று அருளிச் செய்த எம்பெருமான், மேற் கூறியவாறு அபிஷேகம் செய்து கொண்ட க்ஷத்திரியனாகிய தான் இவ்வாறு செய்திருத்தல் முறையாமோ?

இன்னமும், பரதன், இவ்விராமபிரானுக்குப் பின் பிறந்த தம்பியாதலின், அபிஷேகத்திற்குத் தகுதியற்றவனும். கேகய தேசத்தினின்றும் திரு அயோத்திக்கு வந்து, தன் தாயின் வீட்டிலே தன் தந்தையார் சக்ரவர்த்தி உயிர் துறந்ததைக் கேட்டு, பூமியில் விழுந்து புரண்டு அழும் போது, தன் தாய் கைகேயி ''ராஜந்'' என்று அழைக்க, அவ்வாறு அழைத்ததையே மிகவும் பொறாது இருந்தவனன்றோ?

மேலும், குலகுருவும், தன் குருவான இராமபிரானுக்கும் குருவுமான வஸிஷ்டர் ''இவ்விராச்சியத்தை ஏற்று முடி சூடிக் கொள்'' என்று கூறுங்கால், அவரையும் மிகவும் பூசிக்கத் தக்கவர் என்று பாராது பலவாறாக வெறுத்துப் பேசி, யானும் இராச்சியமும் இராமபிரானுடைய உடைமைப் பொருளாய் உண்மையில் இருக்க, யான் இவ் இராய்ச்சியத்தை ஏற்றுக் கொள்வது எவ்வாறு? என்று பேரோலக்கத்தில் கதறிக் கூறிய மஹான் அன்றோ?

இன்னும், மேற்கூறியவாறு கூறியது மாத்திரமேயன்றி, ஆர்த்தியே வடிவெடுத்து வந்தது போன்றுள்ள அப்பரதன், தாய்மார், மந்திரிமார், வஸிஷ்டர், ஜாபாலி முதலிய பெரியோர், யானைகள், குதிரைகள், ஏன் அயோத்தியிலுள்ளார் அனைவரையும் ஒன்று சேர்த்து, அழைத்துக் கொண்டும், மத்தகத்திடைக் கைகளைக் கூப்பி திசை நோக்கித் தொழுது கொண்டும், சித்திரகூடம் சென்று சேர்ந்து, இராமன் திருவடித் தாமரைகளிலே வேரற்ற மரம் போன்று விழுந்து கிடந்து, தன் தலையாலே இரந்து, வேண்டிக் கொண்டவனன்றோ?

இப்பரதன் உண்மை நிலை இதுவாயிருக்க, இவனுக்குப் பாவந்தான் உண்டோ? இவன் க்ஷத்திரியனாலும், மூர்த்தாபிஷிக்த க்ஷத்திரியன் என்று கூறுதற்கு இடம் தான் உண்டோ? பாவத்திற்கே இடமில்லாத போது, பரம புருஷன் பரிஹாரத்தைச் செய்யக் கட்டளையிட்டது தான் பொருந்துமோ?

ஆனால், பரதன் இராமபிரான் கட்டளையிட்டவாறு பரிஹாரத்தைச் செய்திருக்கின்றனனே? என்று சிலர் வினவக் கூடும். இராமபிரான் வனம் எழுந்தருளியதற்குத் தன் பாவமே காரணம்'' என்று கூறினவனும், உண்மையில் பாவம் சிறிதுமின்றி இருக்குமவனான பரதன், தன் நிலைக்கு ஏற்ப பரிஹாரத்தைச் செய்தனனேயன்றி, பாவம் இருந்து பரிஹாரம் செய்தான் என்பது உண்மையாமோ? இதுவே மேற்கூறிய வினாவிற்கு விடையாம்.

தன் நிலைமைக்கு ஏற்ப நடந்து கொள்ளும் பரதன் ஸ்வாமியான இராமபிரான் முன், அவ்விராமன் திருவுள்ளத்திற்குப் பாங்காயிராத, ''தர்ப்பங்களைப் பரப்பிக் கிடத்தல்'' என்னும் செயலைச் செய்ய முயன்றது தான் முறையாமோ? என்று சிலர்க்கு இங்கு ஐயம் எழக்கூடும். இவ் ஐயத்திற்குப் பரிஹாரத்தைக் கூறுவோம்:

அப்பரதன், எம்பெருமான் திருவுள்ளத்தைப் பின் சென்று நடக்கும் தன் நிலைக்குச் சேராத செயலை (தர்ப்பங்களைப் பரப்பி அவற்றில் கிடத்தலை)ச் செய்ய முயன்றதும் இராமன்பாலுள்ள பக்திப் பெருமையினாலல்லது, வேறு காரணத்தினால் ஏற்பட்டதாமோ? ஆகாதன்றோ?

நம்மாழ்வார், திருமங்கை மன்னன் போல்வார், எம்பெருமானை அடையப்பெறாத போது, தரித்திருக்க மாட்டாமையின், 'அப்பரம புருஷனை முறை தவறியாவது பெற வேணும்' என்று எண்ணி, மடலெடுத்தல்,

தூது விடுதல் முதலிய செயல்களைத் தம் நிலைக்குச் சேராதிருந்தும், செய்யக் கருதிச் செய்திருக்கிறார்கள். "இவ்வாறு இவர்கள் கருதிச் செய்தது எங்ஙனம் பக்திப் பெருமை யினாலேயோ, அங்ஙனமே பரதன் செயலும் பக்திப் பெருமையினாலேயே'' என்பதை நாம் அறியலாகும்.

இதுகாறும் கூறியவாற்றால், முடிந்த பொருள் யாதோ ? எனின், ''இராமபிரான் திருவுள்ளத்திற்குப் பரதன் செயல் பாங்கா யில்லை'' என்பதே தேறிய முடிந்த பொரு ளாம்.

ஆனால், மறுபடியும் சிலர், ''மாதரம் ரக்ஷ கைகேயீம்'' ''ஆஜ்ஞாதம் யந் மயாதஸ்ய'' ''உத்திஷ்டத்வம்'' என்னும் முன்னம் கூறிய வாக்கியங்களில், இராமபிரான், 'பரதா ! கைகேயியை வெறுப்பது கூடாது' என்றும், 'ஆசாரியனிலும் தந்தையாருக்கு ஏற்றம் உண்டு; ஆதலின் அவர் வசனமே தனக்கு ஆத ரிக்கத் தக்கது' என்றும், 'பரதா ! நீ பாவம் செய்தவன் ஆதலின், பரிஹாரத்தைச் செய்' என்றும் வெளிப்படையாக அருளிச் செய்திருக் கின்றமையின், அங்ஙனம் வெளிப்படையாகக் கூறியவற்றைக் காரணமாய்க் கொள்ளாது, அவற்றைக் கழித்துப் பேசி, இராமபிரான் திருவுள்ளத்திற்குப் பாங்காயிராமையையே பரதன் பயன் பெறாததற்குக் காரணமாய்க் கூறுதல் ஏற்கத் தக்கதாமோ ? என்று கருதக் கூடும்.

''வெளிப்படைப் பொருளை விட்டிட்டு, உட்கருத்தையே எடுத்துக்கொள்ளுதல் சிறந்த முறையாம்'' என்பதை ஓர் எடுத்துக் காட்டி னால் விளக்கிக் காட்டுவோம் :

''இராமபிரான், ஸுக்ரீவனுடன் தோழ மைகொண்டவன்; ஸுக்ரீவன் விரும்பிய வாறு வாலியைக் கொன்று, கிஷ்கிந்தா ராச்சியத்தையும், ருமை என்னும் ஸுக்ரீவன் மனைவியையும் அந்த ஸுக்ரீவன் பெற்று, முன்புபோல் வாழும்படி உதவி புரிந்தவன்; அங்ஙனம் உதவி புரியும் போது, ஸுக்ரீவன் நம்புமாறு மழுவேந்திக் கொடுத்துக் காரியம் செய்தவன்'' என்று நம் ஆசாரியர்கள் பரம புருஷனுடைய திருக்குணங்களைப் புகழ்ந்து அருளிச் செய்வதுண்டு'' அங்ஙனம் வாலியை வதம் செய்யும் போது, அவ்வாலிக்கும் ஸுக்ரீ வனுக்கும் நடந்த போர் இரண்டு. முதலில் நடந்த போரில், இராமபிரான் வாலியை அடித்துக் கொல்லாது விட்டிருக்கிறான். அப் போரில், ஸுக்ரீவன் தன்னாலாந்தனையும் போர் புரிந்தும், இராமபிரான் கூறியபடி அம்பை எய்து வாலியைக் கொல்லாது இருந் தமையின், அடி தாங்கமுடியாமல் முதுகு காட்டி ஓடிவிட்டான் என்பது வரலாறு—(ஈது இங்கு முதலில் அறியத்தக்கது).

இவ்வாறு ஓடிவந்த ஸுக்ரீவன், இராமா! நீ ஏன்? கூறியவாறு வாலியை அடிக்கவில்லை' என்று வினவினான். இவ்வினாவிற்கு இராம பிரான் விடை யளிக்கும் போது கூறிய வார்த்தை,

''सुग्रीव श्रूयतां तात क्रोधश्च व्यपनीयताम् ।
कारणं येन बाणोऽयं न मया स विसर्जितः ।।
अलंकारेण वेषेण प्रमाणेन गतेन च ।
त्वं च सुग्रीव वाली च सदृशौस्थः परस्परम् ।।
स्वरेण वर्चसा चैव प्रेक्षितेन च वानर ।
विक्रमेण च वाक्यैश्च व्यक्तिं वां नोपलक्षये ।।
ततोऽहं रूपसादृश्यात् मोहितो वानरोत्तम ।
नोत्सृजामि महावेगं शरं शत्रुनिबर्हणम् ।।''

(ஸுக்ரீவ ச்ரூயதாம் தாத க்ரோதச்ச
வ்யபநீயதாம் |
காரணம் யேந பாணோயம் ந மயா ஸ
விஸர்ஜ்ஜித: ||
அலங்காரேண வேஷேண ப்ரமாணேந
கதேந ச |
த்வம் ச ஸுக்ரீவ வாலீச ஸத்ருசௌ
ஸ்த: பரஸ்பரம் ||
ஸ்வரேண வர்சஸாசைவ ப்ரேக்ஷிதேந
ச வாநர |
விக்ரமேண ச வாக்யைச்ச வ்யக்திம்
வாம் நோபலக்ஷயே ||
ததோऽஹம் ரூப ஸாத்ருச்யாத்
மோஹிதோ வாநரோத்தம |
நோத்ஸ்ருஜாமி மஹா வேகம் சரம்
சத்ருநிபர்ஹணம்) ||

என்பதாம்

இவற்றின் வெளிப்படையான பொருள்: "ஸுக்ரீவா! ஒப்பனையிலும், வடிவ அமைப்பிலும், உயரத்திலும், நடையிலும், குரலிலும், தேஜஸ்ஸிலும், பார்வையிலும், பராக்ரமத்திலும், வாக்கியங்களிலும் நீயும் வாலியும் ஒருவரை ஒருவர் ஒத்திருக்கிறீர்களாகையினால், உங்கள் இருவருள், 'இன்னவன் வாலி; இன்னவன் ஸுக்ரீவன்' என்பதை என்னால் தெரிந்து கொள்ள முடியவில்லை. இந்த ஸந்தேஹத்தில் நான் பாணத்தை விட்டால், அது ஒருகால் உன்மேல் பட்டு, ஆபத்து நேருமோ என்று அஞ்சி, நான் வாளா இருந்து விட்டேன்" என்பதாம்.

இவ்வெளிப்படைப் பொருளை இங்குக் கொள்ளுதற்குப் பொருத்தம் உண்டா? என்பதுதான் நாம் ஆழ்ந்து கவனிக்கத்தக்கதாம். பேரறிவாளனான இராமபிரான் ஸுக்ரீவனுக்கும் வாலிக்கும் உள்ள வேற்றுமையை உண்மையில் உணர இயலாதோ? உணரவில்லையோ? அல்பம் அறிவுள்ளவன் கூட 'அடிபடுபவன் ஸுக்ரீவன்; அடிப்பவன் வாலி' என்பதை எளிதில் அறியக்கூடியதை, 'என்னால் தெரிந்துகொள்ள முடியவில்லை' என்று இராமபிரான் இயம்புகின்றனனே, இது பொருந்துமோ? இதில், நம் ஆசாரியர்களின் திருவுள்ளக் கருத்தைக் கூறுவோம். இங்கு, முதலில், பின் கூறப்பெறும் உண்மை உணரத்தக்கதாம். பரமபுருஷன், சேதனனை நோக்கி, "நீ, என்னிடத்தில் உனக்குள்ள அன்பை என் அன்பர் பால் என்றும் வைத்திரு; அங்ஙனம் என் அன்பர் பால் அன்பைச் செய்யாது இருப்பின், அவர் திறத்தில் அபராதத்தைச் செய்தவனுவாய்; அதனால், உனக்கு மாத்திரம் அழிவு உண்டாம் என்று எண்ணாதே, உன்னோடு தொடர்புற்ற இப்பிரபஞ்சமும் அழிந்துவிடும்' என்று அருளிச் செய்திருக்கின்றான்—

"या प्रीतिर्मयि संवृत्ता मद्भक्तेषु सदास्तु ते ।
अवमानक्रिया तेषां संहरत्यखिलं जगत् ॥"

(யா ப்ரீதி: மயி ஸம்வ்ருத்தா
மத்பக்தேஷு ஸதாஸ்துதே ।
அவமானக்ரியா தேஷாம் ஸம்ஹரத்
யகிலம் ஜகத் ॥ )

என்னும் பரமபுருஷன் திருவாக்கு இங்கு அனுபவிக்கத் தக்கது.

இதனால், நாம் ஓர் உண்மையை உணரலாம்: ஒரு சேதனன் எம்பெருமானை முறை வழுவாது பற்றியிருப்பினும், தான் கோரின பயனைப் பெறும்போது, அவன் அடியார் திறத்து அபராதம் சிறிதும் இல்லாது இருத்தல் இன்றியமையாததாகும். இவ்வாறு அபராதம் பெற்றிருப்பின், பயனைப் பெற இயலாது. சரணாகதி தருமத்தை நாம் உணரும்போது, "பரமனடியார் திறத்து அபராதம் சிறிதும் இன்றியிருத்தல், ஒரு முறை" என்பதையும் உணரல் வேண்டும்.

இவ்வுண்மைக் கருத்தை மனத்தில் கொண்டு, ஸுக்ரீவன் வரலாற்றை ஆராய்தல் வேண்டும்! ஸுக்ரீவன் இராமபிரானிடத்து மிக்க அன்புள்ளவன் என்பது மெய்யே. ஆயினும், இலக்குமணனிடம் எங்ஙனம் அன்பு காட்டுதல் வேண்டுமோ, அங்ஙனம் காட்டினானில்லை: இராமபிரானும் ஸுக்ரீவனும் அக்னி ஸாக்ஷியாய்த் தோழமை கொள்ளுகிறார்கள். அவ்வாறு தோழமை கொண்டபின், ஸுக்ரீவன். இலையும் பூவும் நிரம்பியிருக்கும் ஒரு மரத்தின் கிளையை ஒடித்து, பூமியின் மேலே போட்டு, அதின் மேலே இராமபிரானுடன் உட்கார்ந்து கொண்டு, அப்பெருமானிடம் தன் குறையைப் போக்குமாறு வேண்டிக் கொள்கிறான். இவ்வாறு, ஸுக்ரீவனும் இராமபிரானும் இலையும் பூவும் நிரம்பியிருக்கும் கிளையில் பல ஸமயங்களில் உட்கார்ந்து ஒருவருடன் ஒருவர் பேசிக் கொண்டிருந்ததாய்ச் சரிதம் கூறப் பெற்றிருக்கிறது. ஆனால், ஒரு ஸமயமாவது, இலக்குமணனை ஸுக்ரீவன் இவ்வாறு ஆஸனம் கொடுத்து உபசரித்ததாய் இராமாயணத்தில் கூறப் பெற்றிலது.

[இங்கு,

"ततः स पर्णबहुलां छित्त्वा शाखां सुपुष्पिताम् ।
सालस्यास्तीर्य सुग्रीवो निषसाद सराघवः ॥
लक्ष्मणायाथ सहृष्टः हनुमान्प्लवगर्षभः ।
शाखां चन्दनवृक्षस्य ददौ परमपुष्पिताम् ॥"

(தத: ஸ பர்ணபஹுளாம் சித்வா சாகாம் ஸுபுஷ்பிதாம் ।
ஸாலஸ்யாஸ்தீர்ய ஸுக்ரீவ: நிஷஸாத ஸராகவ: ॥
லக்ஷ்மணாயாத ஸம்ஹ்ருஷ்ட: ஹநுமான் ப்லவகர்ஷப: ।
சாகாம் சந்தனவ்ருக்ஷஸ்ய ததௌ பரம புஷ்பிதாம் ॥)
என்பன காணத் தக்கன.]

ஸுக்ரீவனுடைய இச்செயலைக் காணுங்கால், 'இலக்குமணனிடம் அன்பில்லை; அபராதம் உண்டு' என்பது நன்கு விளங்குகின்றதன்றோ? இச்செயலை இராமபிரான் கண்கூடாகக் கண்டவனாதலின், முதலில் ஸுக்ரீவனும் வாலியும் போர் புரியுங்கால், வாலியை அடிக்க அவன் திருவுள்ளம் இசையாது இருந்தது.

பின்பும், ஸுக்ரீவன் தன் செயலை உணர்ந்து, இலக்குமணனிடம் எங்ஙனம் அன்பு காட்டுதல் வேண்டுமோ, அங்ஙனம் காட்டின தாய்க் காணப் பெற்றிலது. ஆனாலும், தன்னைப் பற்றினாரை அடியாருடைய அபிமானத்திற்குப் பாத்திரமாக்கிக் காரியம் செய்வது என்பது பரமபுருஷனுடைய ஓர் உயரிய முறையாம். இம்முறையைத் திருவுள்ளம் பற்றி, ஸுக்ரீவனுடைய கழுத்தில் இலக்குமணன் திருக்கைகளால் அடையாளமாய் கஜபுஷ்பி மாலையைப் போடச் செய்யும் முகத்தால், அந்தப் பாகவதோத்தமனுடைய அன்புக்கு இலக்காக்கி, வாலியை இரண்டாம் போரில் கொன்று, ஸுக்ரீவனுக்கு, அவன் கோரின பயனை அளித்திருக்கின்றான், இராமபிரான்.

இங்கு,

"कृताभिज्ञानचिह्नस्त्वं अनया गजसाह्वया ।
लक्ष्मणेन समुत्पाटच यैषा कण्ठे कृता तव ॥"

க்ருதாபிஜ்ஞாநசிஹ்நஸ் த்வம் அநயா கஜஸாஹ்வயா ।
லஷ்மணேந ஸமுத்பாட்ய யைஷா கண்டே க்ருதா தவ ॥
என்னும் வார்த்தை அனுபவிக்கத் தக்கது.

இதுகாறும் கூறிய ஸுக்ரீவன் வரலாற்றில், ஆழ்ந்து, ஆராய்ந்து காணும் போது, "வெளிப்படையான பொருளில் உண்மை நோக்கு இன்று; உள்ளுறை பொருளிலேயே உத்தமனுடைய உக்திக்கு நோக்கு உண்டு" என்று எங்ஙனம் அறிகின்றோமோ, அங்ஙனமே, பரத சரணாகதிப் பகுதியில் அமைந்துள்ள புருஷோத்தமனுடைய, "மாதரம் ரக்ஷ கைகேயீம்" ஆஜ்ஞாதம் யந் மயா தஸ்ய" "உத்திஷ்ட த்வம்" என்னும் உக்திகளுக்கும், "வெளிப்படையான பொருளில் நோக்கு இன்று; உள்ளுறை பொருளிலேயே நோக்கு" என்பதை நாம் அறிதல் அவசியமாகும்.

ஆகவே, பரதன் இராமபிரானை முறையுடன் பற்றியிருந்தும் அப்பற்றுதல், அந்த இராமபிரான் திருவுள்ளத்திற்குப் பாங்கா யிராமையின், பயனற்றதாம் என்பதைக் கண்டோம். இப்பொருளை தேசிகன் திருவாக்கிலும் அனுபவிப்போம்.

"रामे राज्यं पितुरभिमतं सम्मतं च प्रजानां माता वव्रे तदिह भरते सत्यवादी ददौ च । चिन्तातीत: समजनि तदा पादुकाग्र्याभिषेक: दुर्विज्ञान स्वहृदयमहो दैवमत्र प्रमाणम् ॥"

(ராமே ராஜ்யம் பிதுரபிமதம் ஸம்மதம்ச ப்ரஜாநாம் மாதா வவ்ரே ததிஹ பரதே ஸத்யவாதி ததௌச । சிந்தாதீத: ஸமஜநி ததா பாதுகாக்ர்யாபிஷேக: துர்விஜ் ஞாநஸ்வஹ்ருதய மஹோ தைவமத்ர ப்ரமாணம்)
என்பதே அத்திருவாக்காம்.

இத்திருவாக்கின் கருத்து : "தசரத சக்ரவர்த்தி, இராமபிரானுக்கு முடி சூட்டி, இராச்சிய பாரத்தை அப்பரமபுருஷனிடத்தில் வைக்க விரும்பினான். அச்சக்ரவர்த்தி கொள்கையை மக்கள் அனைவரும் ஒரு முகமாக விரும்பினார்கள். அச்சக்ரவர்த்தி மஹிஷியான கைகேயி, பரதனுக்கு முடி சூட்டி இராச்சிய பாரத்தை அவனிடம் வைக்க வரம் கேட்டாள். ஸத்திய வாதியான சக்ரவர்த்தியும் அங்ஙனம் அளித்தான். ஆனால், சக்ரவர்த்தி கோரியவாறு இராமபிரானுக்கும்,

கைகேயி கோரியவாறு பரதனுக்கும் திரு அபிஷேகம் நடைபெறுது. ஒருவரும் ஒரு காலும் எண்ணுதிருக்க, திருவடி நிலைகளுக்குத் திருவபிஷேகம் நன்கு நடந்தது. இதற்குக் காரணம் எம்பெருமானுடைய ஸங்கல்பமேயாம்'' என்பதாம்.

இத்திருவாக்கில், 'இராமபிரான் திரு அயோத்திக்கு எழுந்தருளி முடி சூட வேண்டும்' என்னும் பரதன் விருப்பம் சப்தத்தில் தெளிவாய்க் கூறப் பெருதது ஒருவாறு உண்மையேயானுலும், கூறப் பெற்றிருக்கிறதாகவே கொள்ளுதல் பொருத்தமுடைத்தானதாம். சக்ரவர்த்திக்கும் மக்களுக்கும் இராமபிரானுடைய திருவபிஷேகம் எங்ஙனம் இஷ்டமோ ; அங்ஙனமே அதுதானே பரதனுக்கும் இஷ்டம். அது தைவமாகிய இராமபிரானுக்குத் திருவுள்ளமில்லாமையால் உண்டாகவில்லை.

இத்திருவாக்கையும், இதின் கருத்தையும் அனுபவிப்போர்க்கு, 'இராமபிரான் திருவுள்ளமில்லை, அதனுல், பரதன் கோரியது நிறைவேறவில்லை' என்பது நனகு விளங்குமன்றே?

இதுவரையில், கூறியவற்றுல் ''எம்பெருமான் சிறந்த தருமம்'' என்பதும், ''அவ்வெம்பெருமான் சேதனனுடைய வேண்டுதலையும், இச்சேதனன் தன்னைப் பற்றும்போது பெரிய பிராட்டியாரை முன்னிடுதலையும் வேண்டுகின்றனன்'' என்பதும், ''இச்சேதனன் அவ்வெம்பெருமானைப் பற்றும்போது, அப்பற்றுதல் அப்பெருமான் திருவுள்ளத்திற்குப் பாங்காயிருக்க வேண்டும்'' என்பதும் இராமாயணத்திலேயே ஒருவாறு அறியப் பெற்றுள்ளன அல்லவா? இனி, இவ்வாறுன தருமம் இராமாயணத்தில் நிலை நிறுத்தப் பெற்றிருக்கும் இடத்தைக் காண்போம் :

ஆனல் ''தருமம் இருவகைப்படும் ; இச்சேதனன் முயன்று செய்யும் போது, உண்டாவது ஒன்று. எப்போதும் உள்ளது மற்ருென்று. எம்பெருமான் என்றும் உள்ளதொரு மிகச் சிறந்த தருமம்'' என்று முன்னமேயே கூறியிருந்தோம்.

இக்கருத்தை மனத்தில் கொண்டு நோக்குவார்க்கு, ''சேதனன் முயன்று செய்யும் போது, உண்டாகும் தருமம், நாள் செல்ல செல்ல சிறிது அழிவு பெறலாமாதலின், அத்தருமத்தை நிலை நிறுத்துதல் என்பதற்குப் பொருள் உண்டு; என்றும் எங்கும் உள்ள எம்பெருமானுகிய தருமத்தை எம்பெருமான் திருவவதாரம் செய்து, நிலை நிறுத்துவதாவது என்?'' என்னும் ஐயம் எழக் கூடும். இவ் ஐயத்திற்கு ஸமாதானத்தை இராமாயணத்தில் விபீஷண சரணுகதிப் பகுதியில் நன்கு காணலாம். ஆதலின், விபீஷண சரணுகதிப் பகுதியில் அமைந்துள்ள வரலாற்றையும், ஸாரப் பொருள்களையும் மிக விரிவின்றி, அனுபவிப்போம்.

''இராமபிரான், கடற்கரையில் வானர வெள்ளங்களுடனும், ஸுக்ரீவன் இலக்குமணன் இவர்களுடனும் எழுந்தருளியிருக்கும் தருணம். அத்தருணம், இலங்கையில், இராவணன், தனக்கு நன்மையைக் கூறின விபீஷணனைப் பலவாருக நிந்திக்க, அந்நிந்தனையைப் பொருது, அவ்விபீஷணன், கதையைக் கையில் உடையவனுய் நான்கு இரர்க்கதருடன் ஆகாசத்திலே கிளம்பி, வடகரையை அடைந்து, ஆகாசத்திலேயே தங்கியிருக்க, அதைக் கண்ட எல்லா வானரர்களும், இராவணன் தம்பியாயிருத்தலாலும், இலங்கையின் நின்றும் வந்திருத்தலாலும், 'இவ்விராக்கதரால், எம்பெருமானுக்கு என்ன தீங்கு நேரிடுமோ?' என்று தம் அன்பு நிலைக்கு ஏற்ப அஞ்சி, அவ்விராக்கதரை அழிக்கக் கருதி, தம் கைகளில் மரங்களையும் மலைச்சிகரங்களையும் வைத்துத் தயாராயிருக்க, அவ்வானரர்களின் அந்நிலையைக் கண்கூடாகக் கண்டிருந்தும், அவர்களின் இராமபக்தியைப் புகழ்ந்து, 'அவ்வானரர்கள் முன்னுக இராமபிரானைப் பற்றுகையே முறையாம்' என அறுதியிட்டு, அங்ஙனம் அறுதியிட்டவாறே, அவ்வானரர்களை வெகு மதிப்புடன் முன்னிட்டு முறை வழுவாது இராமபிரானைப் பற்றியிருக்கின்ருன், விபீஷணன்'' என்னும் வரலாறு முதலில் இங்கு அறியத்தக்கதாம்.

இவ்வாறு இராமபிரானை விபீஷணன் பற்றுங்கால், அவ்விபீஷணன் கூறிய வார்த்தைகளாவன :

१. रावणो नाम दुर्वृत्तो राक्षसो राक्षसेश्वरः ।
तस्याहमनुजो भ्राता विभीषण इति श्रुतः ।।

२. तेन सीता जनस्थानाद्धृता हत्वा जटायुषम् ।
रुद्धा च विवशा दीना राक्षसीभिः सुरक्षिता ।।

३. तमहं हेतुभिर्वाक्यैर्विविधैश्च न्यदर्शयम् ।
साधु निर्यात्यतां सीता रामायेति पुनः पुनः ।।

४. स च न प्रतिजग्राह रावणः कालचोदितः ।
उच्यमानं हितं वाक्य विपरीत इवौषधम् ।।

५. सोऽहं परुषितस्तेन दासवच्चावमानितः ।
त्यक्त्वा पुत्रांश्च दारांश्च राघवं शरणं गतः ।।

६. सर्वलोकशरण्याय राघवाय महात्मने ।
निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम् ।।

1. *ராவணோ நாம துர்வ்ருத்த : ராக்ஷஸோ ராக்ஷஸேச்வர : |*
*தஸ்யாஹம் அநுஜோ ப்ராதா விபீஷண இதி ச்ருத : ||*

2. *தேந ஸீதா ஜனஸ்தாநாத் ஹ்ருதா ஹத்வா ஜடாயுஷம் |*
*ருத்தா ச விவசா தீநா ராக்ஷஸீபிஸ் ஸுரக்ஷிதா ||*

3. *தமஹம் ஹேதுபி: வாக்யை: விவிதைச்ச ந்யதர்சயம் |*
*ஸாது நிர்யாத்யதாம் ஸீதா ராமாயேதி புந : புந : ||*

4. *ஸ ச ந ப்ரதிஜக்ராஹ ராவண : கால சோதித : |*
*உச்யமாநம் ஹிதம் வாக்யம் விபரீத இவௌஷதம் ||*

5. *ஸோஹம் பருஷிதஸ் தேந தாஸவச் சாவமாநித : |*
*த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம் கத : ||*

6. *ஸர்வாலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே —*
*நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணம் உபஸ்திதம் || )*

*இவற்றின் கருத்து : (1) (“எம்பெருமானைப் பற்றுவோன், தன் குற்றங்களைக் கூசாது கூறிப் பற்றக் கடவன்” என்னும் முறையைக் கைக்கொண்ட) விபீஷணன், “இராமபிரானுக்கே உரியவளை இருத்தல் இன்றி, எல்லா உலகங்களையும் கதறிக் கூப்பிடுமாறு செய்பவனும், இங்ஙனம் ‘கொடியோன்’ என ப்ரஸித்தி பெற்றிருப்பவனும் கெட்ட நடத்தை உடையவனும், இராக்கதனும், இராக்கதர் அனைவர்க்கும் ஈச்வரனுமான இராவணனுக்கே உரியவனாயிருந்து, இதுவரையில் தொண்டு செய்து போந்தவன்; அவன் எக்குடலில் பத்து மாஸம் இருந்து பிறந்தனனோ, அக்குடலில் பத்து மாஸம் இருந்து பிறந்தவன் ; எல்லோரையும் நடுங்கச் செய்பவனாயிருத்தலின் ‘விபீஷணன்’ என்று எங்கும் ப்ரஸித்தி பெற்றிருப்பவன், நான்” (சுருங்கச் சொல்லின், இராவணனுக்கு அவனுக்குரிய குற்றங்கள் மாத்திரம் உண்டு ; எனக்கு எனக்குரிய குற்றங்களும், அவன் தொடர்பினாலாகிய குற்றங்களும் உண்டு ; ஆதலின், என் குற்றம் அதிகம்) என்கிறான்.*

*(2) மேலும் அவ்விபீஷணன் கூறியதாவது : “அவ் இராவணன், (திரு அயோத்தியில் இருப்பு சிறை என்னலாம் படி, அனுபவத்திற்கு மிகவும் பாங்கான) ஜனஸ்தானத்தினின்றும், உயிரையும் உடலையும் பிரிப்பது போன்று, ஸீதா பிராட்டியாரையும் இராமபிரானையும் பிரித்து, அவ் இராமபிரானுக்கு உயிரான ஜடாயுவையும் கொன்று, தன் அசோக வனிகையில், அந்த ஸீதா பிராட்டியாரைக் கொணர்ந்து வைத்து, எங்கும் போகவொட்டாது, அரக்கிமாரைக் காவலாய் வைத்தவன் அங்ஙனம் ஸீதா பிராட்டியார் திறத்திலும் ஜடாயு பக்கலிலும், அளவிறந்த அபராதத்தைச் செய்தவனாகிய இராவணன் பின் பிறந்தவன், நான்” என்பதாம்.*

*(3) அன்றியும், அவ்விபீஷணன் செப்பியதாவது : “இராவணா! நீ. இராமபிரானுக்கே உரியவராகிய அந்த ஸீதா பிராட்டியாரை, அவ் எம்பெருமானிடம் திரும்பவும் கொணர்ந்து போய்ச் சேர்த்துவிடு” என்றும், “நான் கூறியவாறு செய்யாவிடின், நீ அழிந்து விடுவாய்” என்றும், அவனுக்கு அடிக்கடி அறிவித்தேன்” என்பதாம்.*

(4) இன்னமும் ''நோய்வாய்ப் பட்டு, சாகக் கிடக்கிறன் ஒருவன், மருந்தை எங்ஙனம் எடுத்துக் கொள்ள மாட்டானே, அங்ஙனமே, யமனல் தூண்டப்பட்ட அவ் இராவணன், நான் கூறிய ஹித வசனத்தைச் செவி தாழ்த்தும் கேட்கவில்லை'' என்றும் கூறினன், விபீஷணன்.

(5) இன்னும், விபீஷணன் பகர்ந்ததாவது : ''என் ஹித வசனத்தைச் செவி தாழ்த்துக் கேட்கவில்லை'' என்பது மாத்திரமே அன்று. ஹித வசனத்தைக் கூறியதே காரணமாக அவனும். அவனைச் சேர்ந்தாரும் என்னை அவமதித்தனர். ஆதலின், என் மனைவிமாரையும், புத்திரர்களையும், விட்டிட்டு இராமபிரானைத் தஞ்சமாகப் பற்றினேன், நான்'' என்பதாம்.

(6) இவ்வாறு கூறி, பின்னும் அவ்விபீஷணன் வேண்டிக் கொண்டதாவது :

''வானரர்களே ! எம்பெருமான் எந்தக் சேதனனைக் காக்கத் திருவுள்ளம் பற்றுகின்றனனே அந்தச் சேதனனே புண்ணியனுவான். அவ் எம்பெருமானுகிய இராமபிரான், இவ் விபீஷணனைக் காக்கத் திருவுள்ளம் பற்றுவானுயின், இவனுக்கு நன்மை உண்டாம். அந் நன்மை நான் பெற்றேனுக வேண்டும்.

அங்ஙனம் நன்மை பெற்றேனுதற்குச் செய்ய வேண்டுவது யாதோ ? எனின், மிக்க ஆர்த்தியுடன் இலங்கையினின்றும் இங்கு வந்திருக்கும் இவ்விபீஷணனை இராமபிரானுக்கு அறிவித்தல் வேண்டும்.

நீங்கள் என் வரவை அறிவிக்குங்கால், ''இராமபிரானுக்கு இவ்விபீஷணன் தொண்டனுதல் நன்ரும்'' என்னும் எனக்குள்ள இந்த ருசி மாறுவதற்கு முன் வெகு சீக்கிரமாக அறிவித்தல் பயனுற்றதாகும். என்னை அவ்இராமபிரான், திருவுள்ளம் உவந்து ஏற்றுப் பணி கொள்ளுமாறு செய்தல் உங்களுக்குப் பணியாம். அப்பிரான் ஏற்றுப் பணி கொண்டு உவத்தல், அவன் தனக்கு உற்றதாகும்.

நீங்கள் இச்சேதனனைப் பரமன் உவந்து ஏற்குமாறு செய்யுமவர்களாயிருக்கின்றமையின், அங்ஙனம் செய்யாதபோது, உங்கள் நிலை உங்களைவிட்டு அகன்ெருழிந்து விடு மன்ரு ? ஆதலின், உங்களுக்கு அழிவு உண்டாம்.

அப்பெருமான், நீங்கள் என் வரவை அறிவித்தபின்பும், அவன் கூவுதல் வருதல் செய்யாதும், என்னைத் திருவுள்ளம் உவந்து ஏற்று, அடிமை கொள்ளாதும் இருப்பின், அப்பரமன் தன் நிலையினின்றும் தவறியவனுவானன்ரு ?

எம்பெருமானிடம் பேரன்பு பெற்றிருக்கும் உங்களையும், அவ் எம்பெருமானையும் உவப்பித்தல், தொண்டனுன என் நிலைக்கு ஏற்றதும், இன்றியமையாததுமாம். அங்ஙனம் உவப்பியாது யான் இருப்பின், அஃது என் நிலைக்கு அழிவை விளைக்குமன்ரு ? உவப்பியாது இருத்தலே அழிவை விளைக்கும் என்னும் போது, உங்களையும், அவ் எம்பெருமானையும் உங்களுக்கும் அவனுக்கும் உரிய அந்த அந்த நிலையில் நின்றும் நழுவச் செய்யும் முகத்தால் அழிப்பேனுயின், என் கதிதான் என்னுகும் ?

ஆதலின், நீங்கள் என் வரவை சீக்கிரம் அறிவிக்கும்போது, உங்களுக்கு நன்மையுண்டு. அப்பரமன் என்னை ஏற்று அடிமை கொள்ளும் போது, அவனுக்கு நன்மை உண்டு ; நான் உங்கள் ஓலக்கத்தில் ஒருவனுகக் கலந்திருந்து உங்களைப்போல் அடிமை செய்யும்போது, எனக்கும் நன்மை உண்டு. இவ்வாறு எல்லாரும் நன்மை பெற்று வாழுமாறு நீங்கள் என் வரவை அறிவித்தல் நன்ரும்.

எல்லா உலகங்களையும் காக்கும் பரமனன்ரு ? அவ்வெல்லா உலகங்களிலும் யானும் ஒருத்தனன்ரு ? அவ் எம்பெருமான் நீர்மைக்கு ஆகாதாரும் உண்டோ ? இராவணன் தம்பியும் சத்துருவுமான உன்னை எம்பெருமானிடம் அறிவிக்கையாவது என் ? என்னுதீர்கள். இவ்வுலகத்திலுள்ளாரனைவரும் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும் அறப்பெரியோனுகிய அப்பரமனுக்கு, பொல்லாங்கு சிறிதும் உண்டாதற்கு இடமுண்டோ ? சரணம் பற்றினரைக் காக்கும் குடியில் திருவவதாரம் செய்த மஹாத்மாவன்ரு ? அப்பரமன்.

அவன் பொருட்டு எல்லோருக்கும் நன்மை உண்டாமாறு அறியுவிங்கோள்'' என்பதாம்.

அங்ஙனம் விபீஷணன் அறிவிக்குங்கால் இராமபிரான் பக்கலில் பொங்கும் பரிவு பெற்றிருப்பவனுன ஸுக்ரீவன், மேற்கூறிய விபீஷணன் வார்த்தையைக் கேட்டு, மிக்க பரபரப்புடன், அப்பெருமானைக்கிட்டி, ஒரு வார்த்தை விண்ணப்பம் செய்து கொண்டனன்.

''திரு அயோத்தியை விட்டுப் போந்து அநேக நாளாயிற்றே? ராஜ நீதியை மறந்ததோ? இவ்விடம், இலங்கைக்கு மிகவும் அண்ணியதன்றே? இராவணன் அநீதிகள் அறியவில்லையோ? ஒருவன் 'சரணம்' என்னும் சொல்லைச் சொல்லும்போது, இவற்றை மறந்து விடலாமோ?

['वध्यतां एष तीव्रेण दण्डेन सचिवैस्सह ।
रावणस्य नृशंसस्य भ्राताह्येष विभीषण: ।।''

வத்யதாம் ஏஷ தீவ்ரேணே தண்டேந ஸசி வைஸ்ஸஹ ।
ராவணஸ்ய ந்ருசம்ஸஸ்ய ப்ராதாஹ்யேஷ விபீஷண: ]

இவனை கட்டியிட்டு வைத்தல்; மாரீசனைப் போன்று, வரும் காலத்தில் துன்பம் விளைக்கும்படி தொடுத்த அம்போடே விடுதல் செய்யக் கடவோமல்லோம். கொன்றே விடுவோம். அங்ஙனம் கொல்லும் போது, முதலிலே தேவரீரை நலிகைக்குக் கூட்டுப்படையாய் வந்த இந் நால்வரையும் தலையறுத்து, இவன் கையிலே கொடுத்துப் பின்பு இவனைக் கொல்லக் கடவோம். இவன் இராவணன் உடன்பிறந்தவனன்றே? அவ் இராவணன், பெற்ற தாயையும் தமப்பனையும் சேர இருக்கப் பொறுதவனன்றே? உடலையும், உயிரையும் பிரித்தது போன்று, என்றும் விட்டகலாத ஸீதாபிராட்டியரையும் எம்பெருமானுகிய தேவரீரையும் கடல் ஒரு புறமும் மலை ஒரு புறமுமாக்கின பையலுக்கு, இவன் ஓர் அவயவம் என்று சொல்லலாம் படி அண்ணியனன்றே?'' என்பதே அந்த ஸுக்ரீவன் கூறிய அவ்வார்த்தையாம்.

இவ் வார்த்தையைத் திருச் செவியேற்ற இராமபிரான், வானரர்களை நோக்கி, கூறியதாவது:

''வானரர்களே! இவ் விபீஷணன், இராவணன் தம்பியாதலின், இவன் நம்முடன் சேரத் தகுதியற்றவன்; அங்ஙனம் சேரத் தகுதியற்றமைக்குத் தகுந்ததும், யுக்தியோடு சேர்ந்ததும், எல்லோரும் விரும்பத் தக்கதும் இனியதுமான ஸுக்ரீவன் வார்த்தையை நீங்கள் கேட்டீர்களன்றே? இவ்விபீஷணனை நாம் ஏற்றுக் கொள்ளுமிடத்து, உங்கள் கருத்து யாதோ? கூறுமின்'' என்பதாம்.

இராமபிரானுடைய மேற் கூறிய வார்த்தையைக் கேட்ட வானரர்கள் அனைவரும், 'விபீஷணனை ஏற்றுக் கொள்ளுதல் முறை' என்னில், ஸுக்ரீவ மஹாராஜருக்கும் கலக்கம் உண்டாம்; 'அங்ஙனம் ஏற்றுக் கொள்ளுதல் முறையன்று' என்னில், இராமபிரானுக்குத் திருவுள்ளம் கலங்கும்; இவ்விருவருக்கும் பரதந்திரமான நாம் ஒன்றும் கூறுதற்கு இல்லை என்று மௌனமாயிருந்தனர்.

அங்ஙனம் மௌனமாயிருக்கும் வானரர்களை நோக்கி, இராமபிரான் அருளிச் செய்த வார்த்தையாவது:

''सुहृदाह्यर्थ कृच्छ्रेषु युक्तं बुद्धिमता सता ।
समर्थेनापि सन्देष्टु शाश्वतीं भूतिमिच्छता ।।''

(ஸுஹ்ருதாஹ்யர்த்த க்ருச்ச்ரேஷு யுக்தம் புத்திமதா ஸதா ।
ஸமர்த்தேநாபி ஸந்தேஷ்டும் சாச்வதீம் பூதிமிச்சதா ॥

என்பதாம்.

இவ்வார்த்தையின் கருத்துப் பின்வருமாறு:

''வானரர்களே! நம்மைச் சரணம் பற்றியிருக்கும் விபீஷணன், தன்னை நாம் ஏற்றுக் கொள்ளாது ஒழியில் பிழையாதாயினுயிருந்தான்; இவ்விபீஷணனை நாம் ஏற்றுக் கொள்ளில், உங்கள் மஹாராஜர் பிழையாதாராயிருந்தார். சரணம் பற்றியவனை ஏற்றுக்

கொள்ளுதலும், நம்மிடம் பொங்கும் பரிவு பெற்றிருக்கும் மஹாராஜர் கூறியதைக் கேட்டு நடத்தலும் நமக்குச் சிறந்த நன்மைகளாகும். சரணம் பற்றி யவனை விட்டிட்டால், 'இரகு குலத்திலே பிறந்த இராமன் சரணம் பற்றியவனைக் கைவிட்டு விட்டான்' என்பர். மஹாராஜர் கூறியதைச் செய்யாவிடின், 'தன்னைப் பற்றினுரிடம் பரதந்திரனுயிருக்கும் இராமன் ஸுக்ரீவ மஹாராஜர் கூற்றுச் செய்தான் இல்லை' என்பர்.

இவ்வாறு இரண்டையும் செய்தேயாக வேண்டியிருந்தும், ஒன்றுக் கொன்று முரண் பட்டவைகளாயிருத்தலின், செய்வதா? அல்லது செய்யமாட்டாது விட்டிடுகின்றதா? என்று தபிக்கும் நிலையில் இருக்கும் எனக்கு, 'இது செய்யத்தக்கது; இது செய்யத் தகாதது' என்னும் பகுத்தறிவு பெற்றிருப்பாரும், நினைத்ததை நடத்தவல்ல ஆற்றல் பெற்றிருப்பாரும், அழியும் பொருளில் கண் வையாது. அழிவற்ற செல்வத்தை விரும்புவாரும், நொந்தாரைக் கண்டால் பொறுக்க மாட்டாது, ஐயோ! என்றிருப்பாரும் உத்தம ஸ்நேஹிதரும் ஆன நீங்கள், என் தாபம் நீங்குமாறு, ஆராய்ந்து சொல்லுதல் பொருத்த மன்றோ? கூறுமின்.''

மேற்கூறிய வார்த்தையில் அமைந்துள்ள ''சாச்வதீம் பூதிம் இச்சதா'' என்னும் பகுதி இங்கு ஆழ்ந்து நோக்கத்தக்கதாம். இப்பகுதியில் விளங்கும் இராமபிரானுடைய திருவுள்ளக் கருத்து வெகு அழகானதாம். அக்கருத்தாவது : ''உங்கள் மஹாராஜர், நம் சரீரத்திற்கு இராவணன் தம்பியான இவ்விபீஷணனுல் என்ன தீங்கு நேரிடுமோ? என அஞ்சுகிறுர். இச்சரீரம் என்றும் அழியாது இருக்கும் செல்வம் அன்று. சரணம் பற்றியவன், யவரேனும் ஆகிலுமாம்; அவரை விட்டிடாது காக்கும் போது, உண்டாம் புகழுடம்பு ஒரு நாளும் அழியமாட்டாதன்றோ? நீங்கள் கூறும் கூற்று, நமக்கு நிலைநின்ற புகழுடம்பு உண்டாமாறு இருத்தல் வேண்டும்'' என்பதாம்.

மேற்கூறிய கருத்துக்களைக் காணுங்கால், ''என்றும் உள்ள எம்பெருமானுகிய தருமத்திற்கும் ஒருவாறு சலனம் ஏற்படும் இடம் உண்டு'' என்பது நன்கு விளங்குகின்றதன்றோ? இராமபிரான் விபீஷணனை விட்டிடாது காப்பானுயின், அப்பிரானை விட்டு, தருமத்தின் தன்மை (பற்றினுருக்கு நன்மையை அளிப்பவனுயிருக்கை) அகன்றெழியாது. ஸுக்ரீவன் பொங்கும் பரிவினுல் மிகக் கலங்கி, ''விபீஷணனைக் காக்கல் ஆகாது ; கொன்றே தீரவேண்டும்'' என்று கூறும் கூற்று, தருமமாகிய இராமபிரானையே ஒருவாறு அழிக்கத் தேடுகிறதன்றோ?

இங்கு இராமபிரான், தானுகிய தருமத்தை அழிவுக்கு இடம்கொடாது, நிலைநிறுத்தும் பரிசு யாதோ? எனின், தன்னைப் பற்றினுர், ஒருகாலும் தன் எண்ணத்தைப் பின் செல்லாது இரார்; அங்ஙனம் பின் செல்லாது ஒரு ஆச்ரிதன் இருப்பின், அவ்வாச்ரிதனுடைய (தன்னைப் பற்றினவனுடைய) மனக்கலக்கத்தை ஏனைய ஆச்ரிதரால் மாற்றி, அவனைத் தன் வயப்படுத்தி, தன்னைத் தன்னிலையின் நின்றும் நழுவவிடாது, தன்னை நோக்கி அருளுவதே, அவன் தன்னை நிலைநிறுத்தும் பரிசாம். இதுவே, இராமபிரான் திருவவதாரம் செய்து செய்யும் முக்கியமான தரும ஸ்தாபனமாம். (தருமத்தை நிலை நிறுத்தலாம்.)

இந்த ''ஸுஹ்ருதா'' என்னும் வார்த்தை கூறுகிறவாறு இராமபிரான் வானரர்களை நயமாகக் கேட்க, அவ்வானரர்கள் அனைவரும் தம் கொள்கையை அறிவித்துக் கொள்ளுதல் இயலாதாதலின், அங்கதன், சரபன், ஜாம்பவான், மைந்தன் ஹநுமான் இவ் ஐவரும் ஒன்று சேர்ந்து, ஒரு குழாமாயிருந்து, அவ் இராமபிரானுடைய ஸன்னிதியில், அவன் நன்மையையே நினைந்து, வேறிடத்தில் எண்ணத்தை விட்டிட்டு, தன் தனக்குரிய கொள்கையைத் தனித் தனியே விண்ணப்பம் செய்துகொண்டதாய் இங்கு வரலாறு அறியத்தக்கது.

அங்கதன் கூறிய வார்த்தையும், அதின் கருத்தும் வருமாறு :

''अर्थानर्थौ विनिश्चित्य व्यवसायं भजेत ह ।
गुणतः संग्रहं कुर्यात् दोषतस्तु विसर्जयेत् ।।''

(அர்த்தாநர்த்தௌ விந்ச்சித்ய வ்யவ ஸாயம் பஜேத ஹ । குணத : ஸங்க்ரஹம் குர்யாத் தோஷ தஸ்து விஸர்ஜ்ஜயேத் ॥ ) என்பது அவ் வார்த்தையாம்.

''இராமபிரான் தன்னைத் தஞ்சமாய்ப் பற்றியிருப்பவனை விட்டிடாதவன். ஸுக்ரீவன் விபீஷணனைக் கொல்ல வேனும் என்று இருப்பவன். இவ்விருவருடைய இவ்விரு கொள்கைகளுள் ஒன்றை விட்டு ஒன்றைக் கொள்ளும்போது, வீபீஷணனுடைய நிலைமைகளை நன்கு ஆராய்ந்து காணுதல் அவசியமாகும். அங்ஙனம் ஆராய்ந்து காணும் போது, குற்றமிருப்பின், விபீஷணன் விடத்தக்கவனும். மிக்க குணம் பெற்றவனுயிருப்பின், விபீஷணன் கொள்ளத்தக்கவனும். ஆதலின், விபீஷணனைப் பற்றி ஆராய்தல் மிக முக்கியமானதாம்'' என்பதே அவ்வார்த்தையின் கருத்தாகும்.

இவ்வாறு அங்கதன் கூறிய பின்பு, சரபன் தன் கொள்கையை, ''புருஷர்களுள் மிகச் சிறந்தவனே! இவ்விபீஷணனனுடைய, நடத்தை நன்கு நமக்குத் தெரியாதாகையால், அதை அறிகைக்கு, முந்துறத் தூது விட வேணும்.

(''क्षिप्रमस्मिन्नरव्याघ्र चारः प्रतिविधीयताम्।''

க்ஷிப்ரம் அஸ்மிந் நரவ்யாக்ர சார: ப்ரதிவிதீயதாம்) என்று கூறியிருக்கிறுன்.

இங்ஙனம் சரபன் செப்பிய பிறகு, ஜாம்பவான் கூறியதாவது :

''இவ்விபீஷணன் இராவணனிடத்தினின்றும் வந்தவன் என்பது மாத்திரமின்றி வருகைக்குத் தகுதியற்ற இடத்திலும், காலத்திலும் வந்தவன். ஆதலின் யோசிக்கத் தக்கவனும் (''अदेशकाले संप्राप्तः सर्वथा शङ्कचतामयम्'' அதேசகாலே ஸம்ப்ராப்த: ஸர்வதா சங்க்யதாம் அயம்)'' என்பதாம்.

இப்படி ஜாம்பவான் தன் கொள்கையைக் கூறிய பிறகு, மைந்தன், ''இவ்விபீஷணனை நம்மோடு சேர்த்துக்கொண்டு, இவன் நன்மை தீமைகளை நன்கறிந்து, அதற்கு ஏற்ப நடந்து கொள்ளுவது நன்றும். ''भावमस्य तु विज्ञाय तत्त्वतस्त्वं करिष्यसि'' (பாவமஸ்யது விஜ்ஞாய தத்வதஸ் த்வம் கரிஷ்யஸி)'' என்று கூறினன்.

இந்நால்வரும் இவ்வாறு இயம்பிய பிறகு, திருவடி இந் நால்வருடைய கொள்கைகளையும் கண்டித்து, தன் கொள்கையை இராமபிரான் ஸன்னிதியில் விண்ணப்பம் செய்து கொண்டிருக்கின்றனன். இங்கு இத்திருவடி வார்த்தையும், அவ்வார்த்தையின் கருத்தும் பின் வருமாறு: ஸுக்ரீவனைக் குறித்து, ''தலைவ! ஒருவரை வெல்லவேண்டும் என்றுவது, ஒருவரிடத்தில் அஸூயையினுலாவது, 'நான் பெரியன்' என்னும் எண்ணத்தினுலாவது, ஒரு பயனை விரும்பி, பக்ஷ பாதத்தினுலாவது கூறப் போகிறேனில்லை. இராமபிரானுடைய திருக் குணங்களைக்கண்டு, உண்மையைக் கூறுவேன்'' என்றனன், திருவடி.

இவ்வாறு கூறி, அத்திருவடி அங்கதன் கொள்கைக்குக் கூறியிருக்கும் குற்றமாவது :

''இவ்விபீஷணனிடத்தில், குணங்கண்டு ஏற்றுக் கொள்ளுதல்; குற்றங்கண்டு விட்டிடுதல்'' என்னும் கொள்கை சிறந்ததன்று. ஏனெனில், இவனை நம் காரியத்தில் ஏவினுலல்லது, இவன் நன்மை அறிய இயலாது ; நன்மையை அறியாமல் ஏவ இயலாது. ஆதலின், இவனை ஆராய்தல் இயலாததாம்.

''ऋते नियोगात् सामर्थ्यमवबोद्धुं न शक्यते ।
सहसा विनियोगो हि दोषवान् प्रतिभाति मा ।।''

(ருதே நியோகாத் ஸாமர்த்யம் அவ
போத்தும் ந சக்யதே ।
ஸஹஸா விநியோகோ ஹி தோஷவாந்
ப்ரதிபாதி மா ॥ )

என்பதாம்.

பின்பு, சரபன் கொள்கைக்குச் செப்பியிருக்கும் குறையாவது : ''இவ்விபீஷணன் எதிரே நிற்கையால், ''தூதனை விட்டு, இவன்

நன்மை தீமைகளை அறிந்து, அவ்வறிவுக்கு ஏற்ப நடந்து கொள்ளலாம்'' என்னும் கொள் கையும் சீரியதன்றும்.

''चारप्रणिहितं युक्त यदुक्तं सचिवैस्तव ।
अर्थस्यासंभवात् तत्र कारणं नोपपद्यते ।।''

(சாரப்ரணிஹிதம் யுக்தம் யதுக்தம் ஸசிவைஸ்தவ ।
அர்த்தஸ்யா ஸம்பவாத் தத்ர காரணம் நோபபத்யதே ॥ )

என்பதாம்.

பிறகு, ஜாம்பவான் கொள்கைக்குப் பகர்ந்திருக்கும் புன்மையாவது :

''இவ்விபீஷணன், இராமபிரானிடம் வருகைக்குத் தகுதியற்ற இடத்திலும், காலத்திலும் வந்தவன்'' என்னும் மதமும் பொருத்த முடைத்தன்று. ஏனெனில்,

இராவணன் மிக்க தமோகுணம் பெற்றிருப்பவனும், பிறரைத் துன்புறுத்துகின்றவனும். ஆதலின், விடத் தக்கவனும். விபீஷணன் அவனை விடாது இருப்பின், அவன் பாவச் செயலினால், அவனைப் போன்று, அவனுக்கு உடன்பட்டிருக்கும் இவனும் அழிய நேரிடும்.

இராமபிரானோ, ரஜஸ்ஸும், தமஸ்ஸும் சிறிதுமின்றி, சுத்த ஸத்துவ குணமுடையவனும். துன்பம் துடைத்து இன்பம் தந்து பிறரை வாழ்விப்பவனும். ஆதலின், பற்றத் தக்கவனுவன். இவ் இராமபிரானைப் பற்றி இவனருளால், இப்பரமன் திருவடித் தாமரைகளைக் கிட்டி, தொண்டு செய்து வாழ்வு பெறலாம்.

இவ்வாறு இராவணனுக்கும் இராமபிரானுக்கும் உள்ள தீமை நன்மைகளைக் கண்டவனும் இவ்விபீஷணன். மேலும், இராவணன் கீழ்மையும் இராமபிரான் ஆண்மையும் நன்கு உணர்ந்தவனும், இவன். ஆகவே உள்ளத் தூய்மையுடன் பரமபுருஷனையே தஞ்சமாய்ப் பற்ற வந்தவன் வரவுக்கு இவ்விடமும் இக்காலமும் தகுந்த இடமும் காலமும் ஆகத் தட்டொன்று மில்லை யன்றோ?

''स एष देश: कालश्च भवती ह यथा तथा ।
पुरुषात्पुरुषं प्राप्य तथा दोषगुणावपि ।
दौरात्म्यं रावणे दृष्ट्वा विक्रमं च तथा त्वयि ।
युक्तमागमन तस्य सदृशं तस्य बुद्धित: ।।''

(ஸ ஏஷ தேச: காலச்ச பவதீஹ யதா ததா ।
புருஷாத் புருஷம் ப்ராப்ய ததா தோஷ குணாவபி ॥
தௌராத்ம்யம் ராவணே த்ருஷ்ட்வா விக்ரமம் ச ததா த்வயி ।
யுக்தம் ஆகமநம் தஸ்ய ஸத்ருசம் தஸ்ய புத்தித:)

என்பதாம்.

[ஒருவன் கருமயோகத்தைச் செய்கின்றான். அக்கருமயோகமாகிய தருமம், பரிசுத்தமான இடத்திலும், காலத்திலும் செய்யப் பெறுமாயின், அதற்கு நன்மையுண்டாம் ; அதனாலாகிய பயனும் உண்டாகும். அங்ஙனம் செய்யப் பெறாவிடின், அத்தருமத்திற்கு நன்மையும் பயனும் உண்டாகா. இத் தருமம் போன்று, இடம் காலம் இவற்றினால், எம்பெருமானாகிய தருமத்திற்கு ஏற்படும் நன்மையும் பயனும் கூறுதற்கு சாஸ்திரம் இடம் தரவில்லையன்றோ?

இராமபிரானாகிய தருமத்தைத் தஞ்சமாய்ப் பற்றும் விபீஷணனுக்கு, அங்ஙனம் பற்றுங்கால், ஏதேனும் ஓர் இடமும், ஒரு காலமும் அமையுமாதலின், இன்ன இடம் இன்ன காலம் என்பது இல்லையன்றோ? இந்த உண்மையைத் திருவடி வாயிலாக வெளியிடுகின்றான், வால்மீகி முனிவன். கருமயோகமாவது—எம்பெருமான் திருவுள்ளம் உகக்குமாறு, தனக்குரிய தருமங்களைச் சாஸ்திர முறையைப் பின் சென்று செய்கையாம்.]

இவ்வாறு ஜாம்பவான் கொள்கைக்குக் குறைகூறி, மைந்தன் கொள்கைக்கு இழிவைக் கூறியிருக்கிறான் திருவடி. அவ்விழிவாவது:

"இவ் விபீஷணனை ஒரு காரியத்தில் தூண்டி, அக்காரியத்தைச் செய்வித்து, அதனுல், இவன் கருத்தைத் தெளியலாம்" என்னும் கொள்கையும் சீர்மை உடைத்தன்று. ஏனெனில், எதிரி தன் காரியத்தில் வல்லவனுயின், தன் எண்ணத்தை வெளியிடாதவாறு, நடந்துகொள்வன் ; ஆதலின், சீக்கிரத்தில் அவன் நினைவு அறிய இயலாது அன்றே ?

"अशक्यस्सहसा राजन् भावो वेत्तु परस्य वै"

(அசக்யஸ் ஸஹஸா ராஜந் பாவோ வேத்தும் பரஸ்யவை)

என்பதாம்.

இங்ஙனம், அங்கதன் முதலானுர் கொள்கைகளுக்குக் குறைகூறிய திருவடி, தன் கொள்கையையும் நன்கு கூறியிருக்கின்றனன்:

"இந்த விபீஷணன் கூறும்போது, இவன் பால் குற்றங்களைக் குறிக்கும் செயல் ஒன்றும் காணப் பெற்றிலது ; வழியடியுண்டவன் தாய் முகத்திலே விழித்தாற் போன்று, இவன் முகம் குளிர்ந்தன்றே? தெரிகிறது; இவன் தீம்பனுகில், இவனுக்கு விரோதத்தைச் செய்ய முயன்ற இவ்வானர வெள்ளத்தில், அன்பனுய் இவ்வாறு வார்த்தை கூறுதற்கு இடம் உண்டோ ? கூறியிருப்பனே ? பயம் சிறிதும் இன்றியும் இருப்பனே ? இவன் குரல் தழுதழுத்துத் தெரிகின்றதோ ? இல்லையன்றே ? ஒருவனுக்குக் கெட்ட எண்ணம் உண்மையில் இருப்பின், அவ்வெண்ணத்தை அவன் மறைக்க முயன்ருலும், அதை, அவன் முகம் வெளிப்படுத்திவிடுமன்றே? ஆதலின், இவன் தூய்மை பெற்றிருப்பவனேயாம்.

பிறருக்குச் செய்ய அரிதான இராமபிரானுடைய முயற்சியையும், இராவணனுடைய கெட்ட சரிதத்தையும் நன்கு கண்டு, தீம்பனை வாலியைக் கொன்று, கிஷ்கிந்தா இராச்சியத்தை ஸுக்ரீவனுக்கு வயமாக்கிக் கொடுத்ததையும் கேட்டு, அவ்வாறே, இராவணனைக் கொன்று, இலங்கா இராச்சியத்தைத் தனக்கு வயமாக்கிக் கொடுப்பன் என்று திடமாய் எண்ணி, இவ்விபீஷணன் இங்கு வந்தனன் என்பது என் எண்ணம். இவன் நிலையை இவ்வாறு உண்மையாக உணர்ந்தால் இவன் ஏற்றுக் கொள்ளத்தக்கவனும்". இதுவே, திருவடி கூறிய கூற்றும்.

இங்கு, திருவடியின் வார்த்தை பின் வருமாறு :

"उद्योगं तव संप्रेक्ष्य मिथ्यावृत्तं च रावणम् ।
वालिनं च हतं श्रुत्वा सुग्रीवं चाभिषेचितम् ।।
राज्यं प्रार्थयमानस्तु बुद्धिपूर्वमिहागतः ।
एतावत्तु पुरस्कृत्य विद्यते त्वस्य संग्रहः ।।"

(உத்யோகம் தவ ஸம்ப்ரேக்ஷ்ய மித்யா வ்ருத்தம்ச ராவணம் ।
வாலிநம் ச ஹதம் ச்ருத்வா ஸுக்ரீவம்ச அபிஷேசிதம் ॥
ராஜ்யம் ப்ரார்த்தயமாநஸ்து புத்தி பூர்வமிஹாகத : ।
ஏதாவத்து புரஸ்க்ருத்ய வித்யதேத் வஸ்ய ஸங்க்ரஹ : ॥ )

இங்ஙனம் திருவடி கூறிய வார்த்தையைத் திருச்செவி சாற்றி, (ஸுக்ரீவன் முதலானுர், 'சரணம் பற்றிய விபீஷணனை ஏற்றுக் கொள்ளுதல் கூடாது' எனக் கூறும்போது ஒருவாறு அழிந்திருந்த) இராமபிரான் உளனுனன் ; மனக்களிப்பும் பெற்றுன் ; தன் கொள்கையையும் வெகு அழகாகக் கூறியிருக்கின்றுன்.

இங்கு, "अथ रामः प्रसन्नात्मा" (அத ராம: ப்ரஸந்நாத்மா) என்னும் வால்மீகி முனிவன் வாக்கியமும், "அத ராம: = அநந்தரம் பெருமாள் உளரானுர்; திருவடி வார்த்தையாலே உளரானுர். ப்ரஸந்நாத்மா = தர்மியுண்டான வாறே தர்மம் உண்டாயிற்று" என்னும் பெரியவாச்சான்பிள்ளை திருவாக்கும் அனுபவிக்கத் தக்கவை. இனி, இராமபிரான் கொள்கையைக் காண்போம்.

இராமபிரான், அங்கதன் முதலானுரை நோக்கி, தன் கொள்கையைக் கூறுதற்கு முன், தன் உத்தமத் தன்மைக்கு ஏற்ப, 'உங்கள்

வார்த்தையை நான் கேட்ட வோபாதி, இவ் விபீஷணனைப் பற்றி, யான் கூறும் வார்த்தை யையும் நீங்கள், செவி தாழ்த்துக் கேட்க வேண்டும்' என்று இரந்து கொண்டிருக் கின்றான்.

இவ்வாறு இரந்து, இராமபிரான் கூறிய வார்த்தையாவது :

"मित्रभावेन संप्राप्तं न त्यजेयं कथंचन ।
दोषो यद्यपि तस्य स्यात् सतामेतदगर्हितम् ।"

(மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதம் சந ।
தோஷோ யத்யபி தஸ்யஸ்யாத் ஸதாம் ஏதத் அகர்ஹிதம் ॥)

என்பதாம்.

இராமபிரான், கடற்கரையில் வானரர் கள் திரளிலே அருளிச் செய்த 'மித்ரபாவேந' என்னும் இவ்வார்த்தை, கண்ணன் பகவத் கீதையின் இறுதியில் அருளிச் செய்த "ஸர்வ தர்மாந்" என்னும் வார்த்தை போன்று உள் ளதாம்.

கண்ணபிரான், அக்கீதையில், கரும யோகம், (எம்பெருமான் முக மலர்த்திக்கு உறுப்பாகச் செய்யும் ஜீவனுகிய தனக்குரிய தருமம்) ஜ்ஞான யோகம், (உள்ளத் தூய்மை பெற்றிருப்பவன் சிந்திக்கும் ஜீவாத்மாவைப் பற்றிய சிந்தனம்) பக்தி யோகம் (பரமனைப் பற்றிச் சிந்திக்கும் சிந்தனம்) ஆகிய இவ்வுபா யங்களைப் பரக்கக்கூறி, இறுதியில் இவற்றை விட்டிட்டு, பரமனுகிய தன்னையே பற்றுமாறு கட்டளையிட்டிருக்கிறுன்.

இராமபிரானும், இங்கு அங்கதன், சரபன் முதலானோர் கூறிய கொள்கைகளைக் கழித்து, இறுதியில் தனக்கே உரிய சீரிய கொள்கையை முடிந்த பொருளாக அருளிச் செய்திருக் கிறுன்.

கண்ணன், செல்வம் இழந்திருக்கும் அர்ஜ ஜுனனைச் செல்வ வானுக்க இறுதியில் "ஸர்வ தர்மாந்" என்னும் வார்த்தையை அருளிச் செய்தது போன்று, இராமபிரானும், இலங் கையை இழந்த விபீஷணனை இலங்கையை உடையவனுக ஆக்க இறுதியில் 'மித்ரபாவேந' என்று அருளிச் செய்திருக்கிறுன்.

அங்கு, கண்ணன் ஸேனையின் நடுவில் அர்ஜ்ஜுனன் சோகம் தீர்வதற்கு அவ்வார்த் தையை அருளிச் செய்திருக்கிறது போன்று, இங்கும், இராமபிரான் ஸேனையின் நடுவில் விபீஷணன் சோகம் தீர்வதற்கு இவ்வார்த் தையை அருளிச் செய்திருக்கிறுன்.

"நம் ஆசாரியர்கள் 'திருத்தேர்த் தட்டில் வார்த்தை' 'கடற்கரை வார்த்தை' என்னும், (கண்ணபிரான் இராமபிரான் இவ்விரு எம் பெருமான்களுடைய) இவ்விரு வார்த்தைகளை யும், எல்லாச் சேதனருடைய க்ஷேமத்தை விளைவிக்கும் சீர்மையுடையன வாயிருத்தலினு லும், மேற்கூறியவாறு ஓற்றுமை பெற்றிருக் கின்றமையினுலும், அன்புடன் தாங்களும் ஆத ரித்தும், தங்கள் திருவடிகளில் ஸம்பந்தம் பெற்றிருப்பார்க்கு உபதேசம் செய்தும் போரு கிறுர்கள்" என்பதையும், "எந்தச் சேதன னுக்கு 'இவ்விரு வார்த்தைகளில் நன்கு தொடர்பு ஏற்படுகின்றதோ, அந்தச் சேத னனே, 'ஸ்ரீ வைஷ்ணவன்' எனப் புகழப் பெறுகின்றுன்" என்பதையும் நாம் இங்கு அறிதல் அவசியமாகும்.

உண்மை இங்ஙனம் ஆனுலும், பெரிய வாச்சான்பிள்ளை இராமபிரான் வார்த்தைக்கு மிக்க ஏற்றத்தைத் திருவுள்ளம் பற்றி அரு ளிச் செய்திருக்கிறுர் :

"அங்கு, சரணுகதாத்யவஸாயம்' சொல் லிற்று; இங்கு, 'சரண்யாத்யவஸாயம்' சொல் லுகிறது. அங்கு, 'சரணுகதனைப் பாபங்களில் நின்றும் விடுவிப்பேன்' என்கிறது; இங்கு, 'நான் விடேன்' என்கிறது" என்னும் பெரிய வாச்சான் பிள்ளை திருவாக்கு அவசியம் அனு பவிக்கத் தக்கதாம்.

இத்திருவாக்கின் கருத்தைச் சிறிது விவ ரித்துக் கூறுவோம் : எம்பெருமானை எவன் அவனைப் பெறுதற்குக் காரணமாய்ப் பற்று கின்றனனே, அவனைச் சரணுகதன் என்பர். அச் சரணுகதனுக்கு உரிய திடமான எண்ணத்தை ("எம்பெருமான் இப்பொருளை ஒருகாலும் விட்டிடான்; காத்தே தீருவன்" என்னும் எண்ணத்தை) 'அத்யவஸாயம்' என்று கூறுவர்.

இந்த எண்ணம், எம்பெருமான் திருவடிகளை உபாயமாய்ப்பற்றி, பேற்றைப் பெறுபவனுக்கு இன்றியமையாததாம். இவ்வின்றியமையாமையைப் பின்வருமாறு நாம் அறியலாம் :

ஒருவன், கப்பலை ஏறி, கடலைக் கடந்து, தான் விரும்பிய இடத்துக்குச் செல்கிறான். அங்ஙனம் கடந்து செல்பவனுக்கு உள்ள (இக்கப்பல் மிக உறுதியானது; இது நம்மை, கோரின இடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிடும் என்னும்) எண்ணத்தைக் காண்கின்றோமல்லவா?

இது போன்று, இந்த ஜீவனும் எம்பெருமானாகிய கப்பலை ஏறி ஸம்ஸாரமாகிய பெருங்கடலைக் கடந்து, தான் விரும்பிய பரமபதமாகிய இடத்துக்குச் செல்ல வேண்டியவனாயிருக்கின்றமையின், "எம்பெருமானாகிய கப்பல் மிகமிக உறுதியானது; இக் கப்பல் நம்மைப் பரமபதத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிடும்" என்னும் திடமான எண்ணம் பெற்றிருக்கவேண்டியவனன்றோ?

இங்கு, "ஒரு சிறுயை விச்வஸித்து, ஆறு மாஸத்துக்கு வேண்டும் சோறும் தண்ணீரும் ஏற்றிக் கொண்டு, கடலிலே இழியாநின்றான். அவ் வோபாதியாகிலும் வேண்டாவோ பகவத் விஷயத்தைப் பற்றுவார்களுக்கு" என்னும் நம்பிள்ளை திருவாக்கு அனுபவிக்கத் தக்கது.

இத் திருவாக்கை அனுபவிக்குங்கால், "எம்பெருமானாகிய கப்பலை ஏறிச் செல்பவனுக்கு மிகவும் திடமான எண்ணம் வேண்டும். அவ் எண்ணம் இந்த ஜீவன் நிலையைக் காணுங்கால், உண்டாவது அரிதாம். ஆனாலும், கருங்கடலைக் கடப்பவன், அங்ஙனம் கடக்கக் கருவியாய் எண்ணியிருக்கும் கப்பலில் வைத்திருக்கும் நம்பிக்கை போன்றுள்ள நம்பிக்கையாவது இந்த ஜீவனுக்கு வேண்டுவது அவசியமன்றோ?" என்னும் உண்மை நன்கு விளங்குகின்றதன்றோ ?

"இந்தத் திடமான எண்ணம் பரம புருஷனாகிய என்னைச் சரணம் பற்றியிருப்போனுக்கு இன்றியமையாததாம்" என்பதை இயம்பியிருக்கிறான், "ஸர்வ தர்மான்" என்னும் வார்த்தை வாயிலாகக் கண்ணன்.

மேலும், அக்கண்ணபிரான், மேற்கூறிய வார்த்தையிலேயே, 'இவ்வாறு திடமான எண்ணம் பெற்றிருக்கும் சேதனனை, என்னை அடைய வொட்டாது தடைசெய்யும் பாவங்களினின்றும் விடுவிப்பேன்' என்றும் அருளிச் செய்திருக்கிறான்.

இதுவரையில், 'சரணாகதாத்யவஸாயம்' சொல்லிற்று; சரணாகதனைப் பாவங்களில் நின்றும் விடுவிப்பேன்' என்னும் பகுதியின் கருத்தைக் கண்டோம். இனி, சரண்யாத்யவஸாயம்' என்பதின் கருத்தைக் காண்போம்.

'சரண்யன்' என்பதற்கு, 'துன்பம் துடைத்து இன்பம் தரும் எம்பெருமான்' என்று பொருள். அவ் எம்பெருமானுடைய திடமான எண்ணத்தை ("இந்த ஜீவனை ஒருக்காலும் விட்டிடேன்; காத்தே தீருவேன்" என்னும் எம்பெருமான் எண்ணத்தை) 'சரண்யாத்யவஸாயம்' என்று கூறுவர்.

இவ் அத்யவஸாயத்தையும் 'இந்த ஜீவனை எம்பெருமானாகிய நான் விடேன்' என்று கூறியிருத்தலையும், இங்கு இராமபிரான் வார்த்தையில் நாம் நன்கு அறியலாகும்.

ஜீவனுடைய திடமான எண்ணம், எம்பெருமானுடைய திடமான எண்ணம் இவை இரண்டும், இந்த ஜீவன் பேறு பெறும்போது, அவசியமானவை என்றாலும், இவன் எண்ணத்திலும், அவன் எண்ணம் மிகமிக முக்கியமானதல்லவா ?

இந்த ஜீவன், "எம்பெருமான் இப் பொருளை இரட்சியாது விட்டிடான் : இரட்சித்தே தீருவன்" என்னும் திடமான எண்ணம் பெற்றிலனேயானாலும், எம்பெருமான், "இந்த ஜீவனை நாம் விட்டிடாது, இரட்சித்தே தீருதல் வேண்டும்" என்னும் திடமான எண்ணம் பெற்றிருப்பின், எம்பெருமானுடைய அவ் எண்ணத்தினாலேயே, இவனுக்கு நன்மை உண்டாவது திண்ணமன்றோ ?

'இந்த ஜீவன், 'எம்பெருமான் இப்பொருளை இரட்சித்தே தீருவன்' என்று திடமாக எண்ணியிருந்தாலும், எம்பெருமான், 'இந்த ஜீவனை இரட்சித்தே தீரவேண்டும் என்று எண்ணுது இருப்பின், இவன் நன்மை பெற இயலுமோ ? இயலாதன்றோ ? இதுபோன்று பாவத்தினின்று விடுவிப்பதிலும், எம்பெருமான் இவனை விடாது இருத்தல் மிகவும் முக்கியமானதன்றோ ?

இங்கு, "உன் மனத்தால் என் நினைந்திருந் தாய் இடவெந்தை எந்தைபிரானே" என்னும் திருமங்கை மன்னன் திருவாக்கும் அனுபவிக் கத்தக்கதாம்.

உண்மை இவ்வாறு இருத்தலின், கண்ணன் வார்த்தையிலும், இராமபிரான் வார்த்தைக்கு ஏற்றம் உண்டு என்பது தெளிவாம்.

இதுவரையில், "மித்ரபாவேந" என்னும் இவ்வார்த்தையின் சீர்மையைச் சிறிது கண்டோம். இனி, இவ்வார்த்தையின் கருத்தைச் சுருக்கமாய்க் காண்போம் :

"நம்பத் தக்கவன் செயலாலே நம்மை நெருங்கி வந்த இவ்விபீஷணனை ஒரு படியாலும் விட ஊஹை கூடச் சிறிதும் நமக்கு இல்லை; இவ்விபீஷணனுக்குக் குற்றம் இருந்தாலும், இவன் நினைத்த காரியம் பெற்ருனு கிருன். இவனை ஏற்றுக் கொள்ளுதல், பெரியோர்களுக்கு நிந்திக்கத் தக்கதாகாதாம்" என்பது, மேற் கூறிய வார்த்தையின் கருத்தாம்.

இவ்வாறு இராமபிரான் தன் இயல்பை இயம்பியிருந்தும், பொங்கும் பரிவு பெற்றிருந்துள்ள ஸுக்ரீவன், தெளிவு சிறிதும் இன்றி, அவ் இராமபிரான் முன்னிலையில் "விபீஷணன் ஏற்றுக்கொள்ளத் தக்கவன் அல்லன்" என்பதைச் சில முறைகளைப் பின் பற்றிக் கூறியிருக்கிருன். அக் கூற்றிற்கு இராமபிரான் விடை அளிக்குங்கால். அப்பிரான் திருவாக்கிலிருந்து அவதரித்ததும், "மித்ரபாவேந" என்னும் வார்த்தை போன்று மிகச் சீர்மையுற்றதும், எல்லாச் சேதனருக்கும் நன்மையை உண்டு பண்ணுவதுமான வார்த்தை வருமாறு :

"सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते ।
अभयं सर्वभूतेभ्यः ददाम्येतद्व्रतं मम ।।"

(ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதிச யாசதே ।
அபயம் ஸர்வபூதேப்ய: ததாமி ஏதத் வ்ரதம் மம ॥

என்பதே அவ்வார்த்தையாம்.

(இவ்வார்த்தையின் கருத்துக் காணும் போது. ஸுக்ரீவன் கேள்விகளுக்கு இராமபிரான் விடையளித்திருக்கிறதாய் நாம் காணுதல் நன்ரும்.)

ஸுக்ரீவன், இராமபிரானை நோக்கி, 'இராம! நீ புருஷோத்தமன்; உன்னை முறையுடன் [1]உபாயமாய்ப் பற்றியிருப்போனை விட்டிடாது காத்தல் உனக்குரிய தருமமேயாம். சாஸ்திரம், 'சரணுகதியை ஒருகால் செய்தல் நன்று; பலகால் செய்யலாகாது' என்று இயம்பியிருக்கின்றது. இவ்விபீஷணனே, சாஸ்திரம் கூறும் முறையைப் பின் பற்ருது, "राघवं शरणं गत." "भवन्त शरणं गतः" "पादयोश्शरणान्वेषी निपपात" (ராகவம் சரணம் கத: । பவந்தம் சரணம் கத: । பாதயோச்சரணுந்வேஷீநிபபாத । ) என்று முக்கால் சரணம் பற்றியவனன்றே ? ஆதலின், இவன் ஏற்கத் தக்கவனல்லன் எனறு கூறினன்.

இதற்கு, இராமபிரான் அருளிச் செய்த வார்த்தை :

"(ஸக்ருதேவ) இவ்விபீஷணன் முறை வழுவாது ஒருகால் நம்மைப் பற்றியவனே ஆவான்; எங்ஙனம்? என்னில், இராவணனுல் மிகவும் அவமதிக்கப்பட்ட விபீஷணன் நம்மை நோக்கி, நான்கு இராக்கதருடன், ஆகாசத்தில் கிளம்பிய போதே, நீங்கள் அவனைச் சத்துருவாய் எண்ணிக் கலங்க, உங்களுக்கு அக்கலக்கம் போக வேண்டும் என்று அவன் எண்ணி, "என்னைச் சத்துருவாய் எண்ணலாகாது; நான் இராமனைச் சரணம் பற்ற வந்தனன்"? என்னும் உண்மையை உங்களுக்கு உணர்த்திய வார்த்தை, "ராகவம் சரணம் கத" என்பது. உங்கள் வார்த்தையினுல், நாமும் கலங்கி

னோமோ? என்று ஐயம் கொண்டு, நம்மைத் தெளியப்பண்ணச் சொன்ன வார்த்தை, ''பவந்தம் சரணம் கத:'' என்பது.

உண்மையில் முறை வழுவாது நம்மைச் சரணம் பற்றும் போது உள்ள வார்த்தை ''பாதயோச் சரணுன்வேஷீ நிபபாத'' என்பது. ஆதலின், இவன் ஏற்றுக்கொள்ளத் தக்கவனேயாம்''.

இதைச் செவி மடுத்த ஸுக்ரீவன், மேலும் வினவியதாவது :

''இவ்விபீஷணன் தேவரீரைச் சரணம் பற்றியிருப்பவனல்லன்; ஏன்? எனில், ''வதம் செய்யவேண்டும்'' என்று எங்கள் கூற்றைக் கேட்டு வெருவி, போகநிற்கிறவனன்றோ? இவன். ஆதலின், இவன் ஏற்கத் தக்கவனல்லன்''

இதற்கு இராமபிரான் விடையாவது :

"(ப்ரபந்நாயைவ) நாம் இவ்வாறு இவனை ஏற்றுக் கொள்ளுதல் முறையோ, முறையன்றோ? எனத் தடுமாறுதல் போன்று இராது. உறுதியுடன் நம்மைப் பற்றியே இருப்பவன் காண், இவன்''.

இதைச் செவியேற்ற ஸுக்ரீவன், இவ்விபீஷணன், தேவரீரையே மிகச் சிறந்த நன்மையாய்க் கருதாது, இலங்கையைப் பெற விரும்பி வந்தவனன்றோ? தேவரீருக்குத் தொண்டனுன திருவடியுமன்றோ? ''ராஜ்யம் ப்ரார்த்தயமாநச்ச'' என்று இவ்விபீஷணனுக்குள்ள நிலைமையை (இலங்கையில் விருப்புற்றிருக்கும் இயல்பை)த் தெளிவாய்க் கூறி, தன் கொள்கையை முன்னம் வெளியிட்டிருக்கின்றனன். ஆதலின், இவன் ஏற்கத் தகுந்தவனல்லன்' என்றனன்.

இதற்கு, இராமபிரான் அருளிச் செய்த வார்த்தை : "(''தவாஸ்மீதி ச யாசதே'') திருவடி இராவணன் முன்னிலையில், நம் சிறப்புக்களை கூறுங்கால், அவ் இராவணன் அவற்றைப் பொருது, அத்திருவடியைக் கொல்ல, தன் தொண்டர்களுக்குக் கட்டளை இட்டனன். அந்த ஸமயம் அங்கிருந்த விபீஷணன். 'தூதனைப் கொல்லலாகாது' என்று தடுத்தனன். அவ்வாறு தடுத்து, தனக்குச் செய்திருக்கும் நன்மையை உணர்ந்த திருவடி, இலங்கையின் அரசுரிமையை விபீஷணனுக்கு அளிக்க வேணுமென்று தான் கருதி ''ராஜ்யம் ப்ரார்த்தய மாநச்ச'' என்று கூறினனேயன்றி, விபீஷணன் அரசுரிமையை வேண்டினனோ? இல்லையன்றோ?

மேலும் நம் தம்பியான இலக்குமணன், நம்மை எங்ஙனம் விரும்பி, நம்மைப் பிரியாது நம்முடன் நின்று, நமக்கு மனமகிழ்ச்சிஉண்டாகுமாறு நம்மையே மிகச்சிறந்த பயனுகப் பற்றியிருக்கின்றனனே, அங்ஙனமே இவ்விபீஷணனும், நம்மையே மிகச்சிறந்த பயனுக விரும்பி நமக்கே ஆட் செய்ய வந்தவன் காண். (தவ, ச, அஸ்மி இதி யாசதே என்று பதங்களைக் கூட்டி, 'ச' என்னும் சொல்லை, ஏகாரப் பொருளில் கொண்டு நோக்கின், ''இராமபிரானுகிய உனக்கே அடிமையாக இருக்கிறேன் என்று விரும்புகின்றவன் பொருட்டு'' என்னும் பொருள் இங்குக் கிடைக்கிறதன்றோ?)

இதைக் கேட்ட ஸுக்ரீவரின் மேலும் இராமபிரானை நோக்கி, இராமா! 'விபீஷணனுடைய சரணுகதி. முறை வழுவியது' என்னும் என் கூற்றுக்கு நீ விடை கூறினுய். நீ அவனுக்கு அளிக்கும் பயன் தான் யாதோ?'' என்றனன்.

இதைத் திருச்செவியேற்ற இராமபிரானும்,"தேவர் மனிதர். முதலிய எல்லா ஜந்துக்களினின்றும், பயத்தைப் போக்கி, நன்மையைச் செய்வேன்'' எனக் கூறி, 'இவ்வுலகிலுள்ளார் அனைவருக்கும் துன்பம் துடைத்து இன்பம் தருதல், நமக்கே உள்ளதொரு தருமமன்றோ! ஸுக்ரீவ! இதை நீ தலைக்கட்டித் தருதல் நன்றாம்'' என்றும் கூறியிருக்கின்றனன். (அபயம் ஸர்வ பூதேப்ய; ததாமி ஏகத் வ்ரதம் மம).

இவ்வாறு, தன் திடமான ஸங்கல்பத்தை இராமபிரான் வெளிப்படுத்திய இடத்தும், ஸுக்ரீவனுக்குக் கலக்கம் தீர்ந்திலது. அத்தருணம் தன் மிடுக்கையும் அவன் நெஞ்சில் படுமாறு, கலக்கம் தீர்வதற்குக் கூறியிருக்கிறுன் :

"पिशाचान् दानवान् यक्षान् पृथिव्यांचैव राक्षसान्।
अङ्गुल्यग्रेण तान् हन्यामिच्छन् हरिगणेश्वर ।।"

(பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ் யாம்சைவ ராக்ஷஸாந் ।
அங்குள்யக்ரேணதாந் ஹந்யாம் இச்சன் ஹரிகணேச்வர ॥ )

என்பது, அம்மிடுக்கைக் கூறிய வார்த்தை யாம்.

இதின், கருத்து : ' ஸுக்ரீவ ! பிசாசங்களேயும், அஸுரர்களேயும் இயக்கர்களேயும், இப்பூமியிலுள்ள அரக்கர்களேயும் இவர்களனை வரையும் அழியச் செய்யுமிடத்து, நம் பலம் எல்லாம் வேண்டா ; ஆயுதமும் வேண்டா ; நம் கைவிரலும வேண்டா ; விரல் நுனியே போரும. ஆனல், நம் விரோதிகளுடைய திரள் குறி அழியாது இருப்பானேன் ? என்ன லாம். அருமையாலனறு, செய்ய நாம் நினை யாமல இருத்தலே, அங்ஙனம அத்திரள அழி யாது இருததலுக்குக் காரணமாம். உயிர் நிலையிலே நலிநத இராவணனை நலிய நினைவில் லாமல் இதுகாறும் இருத்தலுக்குக் காரணம் யாதோ? என்று வினவலாம். இவவிபீஷண னைப் போனறு உயிரோடு தலைவணங்கினுல அவனும் அவனைச் சேர்ந்தோறும் வாழ்நது போகலாமன்றோ? இதுதான அங்ஙனம் இருத் தலுக்குக் காரணம். வாலியை நாம் அடித்துக் கொன்றபோதுதானே கிஷ்கிந்தையின் அரசுரி மையை நீ பெற்று வானர வெள்ளங்களுக்கு அரசனுனது'' என்பதாம்.

இங்கு, பின்வருமாறு உண்மை உணரத் தக்கது : ''எவன் தன் இச்சையினுல் இப் பிர பஞ்சத்தை ஆக்கி, அளிதது அழிக்கின்றனனே, அவனே மிகமிக மேலான தெய்வம்'' என்பது வேதாந்தங்களின் உண்மைக் கருத்தாகும். ''அங்ஙனம் மிகமிக உயர்ந்த தெய்வம் இராம பிரான் என்பதை இவ்வுலகம் உணர்ந்ததே யாம். அந்த இராமபிரானுக்கு, ''இவ் இரா வணனையும் இலங்கையையும் அழித்தல்'' என் பது உண்மையில் ஒரு பொருளோ?

தேவதைகளுடைய வேண்டுகோளுக்கு இணங்கி தன் மேன்மையை, மற்றவர் அறி யாது இருக்குமாறு, மானிட சரீரம் போன் றுள்ள தன் சரீரத்தினுல் மறைத்துக் கொண்டி ருக்குமவனும், இராவண வதமான பிறகும், பிரமன், சிவன் முதலானேர், 'இராமா ! நீ நாராயணன்' என்று உண்மையை உணர்ந்து கூறுங்கால், தன்னை மானிடனுகவே கூறிக் கொண்டவனும், பரதேவதையும் பரமபுருஷ னுமான இராமபிரான், தானுகிய தருமத்தை நிலைநிறுத்தும் இவ்விடத்து, ' மித்ர பாவேந'' என்னும் வார்த்தை வாயிலாகத் தன் இயல் பையும், ''ஸர்வ தர்மான்' என்னும் வார்த்தை வாயிலாகத் தன் திடமான எண ணத்தையும், கூறிய அந்த அநத அளவில் நில் லாது, தன் இச்சையினுலேயே இப் பிரபஞ் சத்தை ஆக்கி, அளித்து, அழிக்க வல்லவனுக்கு இலங்கையையும் இவ் இராவணனையும் அழித் தல் அருமையாமோ ? என்று தனக்கே உரிய தெய்வத் தன்மையையும் வெளிப்படுத்திக் கூறி, இம் முகத்தால், 'ஸுகரீவனுகிய ஆச்ரித னுக்குத் தான் வயப்பட்டிருத்தல்' என்னும் தனக்கே உரிய சீர்மையையும் அழியவொட் டாது காத்து தனககுரிய தருமத் தன்மையை யும் நிலைநிறுத்தி, விபீஷணனையும் வாழ்விதத இச்சரிதம் வெகு ஆச்சர்யமானதல்லவா ?

இராமபிரான் இவ்வாறு அருளிச் செய்து மேலும் கூறிய வார்த்தை :

"आनयैनं हरिश्रेष्ठ दत्तमस्याभयं मया ।
विभीषणोवा सुग्रीव यदि वारा वणस्स्वयम् ।।"

(ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட தத்தம் அஸ்யா பயம் மயா ।
விபீஷணேவா ஸுக்ரீவ யதி வா ராவ ணஸ் ஸ்வயம் ॥ )

என்பதாம்.

இவ் வார்த்தையின் கருத்தையும் முடிந்த பொருளையும் முறையே இங்குக் காண்போம் :

''ஸுக்ரீவனே ! தன் வரவை இராகவ னுகிய நம்மிடம் தெரிவிக்குமாறு இவ்விபீஷ ணன், வேண்டிக் கொண்டவனன்றோ ? இவன் நெஞ்சாறல் தீர்ந்து நம்மிடம் சேர்ந்தானுவ தும், நாம் ஏற்றுக் கொண்டோமாவதும் நீ சென்று அவனை அழைத்து வந்தாலன்றோ ? ஆதலின், அவனை அழைத்து வருதல் வேண் டும். விட வேண்டிய எல்லாவற்றையும் விட் டிட்டு, நம்மைச் சரணம் புகுந்த இவனுக்கு நம்மால் பயமின்மையானது அருளப் பெற்

றுள்ளது. (இவ்வாறு கூறியதும் விபீஷணனை அழைக்கச் சென்ற ஸுக்ரீவனைக் குறித்து, திரும்பவும் இராமபிரான் கூறியதாவது) விபீஷணனைத் தானே அழைத்து வரும்படி கூறப்பட்டது என்று மீளாதே, இராவணன் தானேயாகிலும் அழைத்துக் கொண்டு வரவேணும், விபீஷணனைக் கைக் கொண்டோமாகில், தன் பக்கல் புண்ணியம் உடையோனை ஏற்றுக் கொண்டோமாவோம்; இவ் விபீஷணனுடன் வந்த இந்நான்கு இராக்கதரும் பிழைத்துப் போருவர்; வந்தவன் உண்மையில் இராவணனாயிருந்து, அவ் இராவணனை ஏற்றுக் கொண்டாலோ, அப்போதுதான், இராமபிரானாகிய நமக்கு நிறமுண்டாம்; இலங்கையிலுள்ள இராக்கதர் அனைவரும் வாழ்ந்து போருமாறு நோக்கினோமாவோம். நமக்கு வரும் ஏற்றம் முழுவதும் உயிர்த் தோழனை உன்னதன்றோ'' என்னும், இதுவே மேற்கூறிய வார்த்தையின் உண்மைக் கருத்தாகும்.

இங்கு, ஸுக்ரீவன் இசைந்ததும், இராமபிரான் தானே நேரே விபீஷணனை அழைத்து ஏற்றுக் கொள்ளாது, ஸுக்ரீவனையிட்டே அழைத்து வருமாறு ஏவியிருப்பதற்குக் கருதது யாதோ? எனின், கூறுவோம்:

''இராமபிரானுக்கு 'ஆச்ரித பாரதந்திரியம்' என்னும் செல்வம் உண்டு; அதாவது, தன்னைப் பற்றியவனுக்கு வயப்பட்டிருத்தலாம்'' என்று இககட்டுரையில் அடிக்கடி கூறி வருகிறோம் அல்லவா? தானே விபீஷணனை அழைத்து ஏற்றுக் கொள்ளும்போது, அச்செல்வம் இவன் பால் நிலைபெற்றிருக்குமோ? அழிந்து விடாதோ? ஆதலின், ஸுக்ரீவனை இட்டே அழைத்து ஏற்றுக் கொண்டனன். இது நம் ஆசாரியர்களாலே இங்கு ஸமாதானமாய்க் கூறப் பெற்றுள்ளதொரு உண்மைக் கருத்தாம்.

மேலும், விபீஷணன் இராமபிரானிடம் அளவற்ற அன்பு உடையவன். ''அவ்விபீஷணனைக் கொல்லவேண்டும்'' என்று ஸுக்ரீவன் கூறியது, அவ்வாறு கூறிய ஸுக்ரீவனுக்குப் பெரிய பாவமன்றோ? ''தன்னை விட்டிட்டு, தன் அடியார் திறத்தில் அன்பைச் செய்தல் நன்றும்'' என்பதும், ''அங்ஙனம் அன்பு செய்யாது இருத்தல், பெரிய பாவம்'' என்பதும், ''அப்பாவம் உள்ளவன் மாத்திரமேயன்றி, அவனோடு தொடர்பு பெற்றிருக்கும் இப்பிரபஞ்சமும் அழிந்துவிடும்'' என்பதும் பரமபுருஷனாலேயே கூறப்பெற்றுள்ள உயரிய உண்மைக் கருத்துக்கள் அல்லவா?

உண்மை இங்ஙனம் இருக்க, ஸுக்ரீவன், 'விபீஷணனைக் கொல்ல வேண்டும்' என்று கூறியிருப்பது மிகமிகப் பெரிய பாவமன்றோ? இராமபிரான, ஆச்ரிதரிடம் மிக்க அன்பு பெற்றிருப்பவனாதலினாலும், ஸுக்ரீவன் அவ் ஆச்ரிதருள் ஒருவனாதலினாலும், அநத ஸுக்ரீவன் பாவம் தீரந்து நன்மை பெறுமாறு திருவுள்ளம் பற்றி, அந்த ஸுக்ரீவனையே அழைதது வர நியமித்தருளினான்'' என்பதும் இங்கு ஓா உண்மைக் கருத்தாகும்.

இன்னமும், இங்கு அறியவேண்டுவதோர் உண்மை உண்டு: எம்பெருமானை ஜீவன பற்றும் பற்றுதல், ''ஸ்வகத ஸ்வீகாரம்'' எனப்படும் எம்பெருமான் ஒரு சேதனனைத் தனக்குக் காக்கத தககவனாய்க கருதி, அவனே இவனை மேல் விழுந்து ஏற்றுக்கொளளுதல் என்பதை ''பரகத ஸவீகாரம்'' என்று பகருவர். இங்கு, முன்னதுககு, ''मुमुक्षुर्वै शरणमहम् प्रपद्ये'' (முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே) என்னும் வாக்கியமும், பின்னதுக்கு, 'यमेवैषवृणुते तेनलभ्यः' (யமேவைஷ வ்ருணுதே தேநலப்ய'=எந்தச் சேதனனை எம்பெருமான் மேல் விழுந்து விருமபுகின்றனனோ, அவனால் அப்பெருமான் அடையத் தக்கவனும்) என்னும் வாக்கியமும் தக்க சான்றுகளாம்.

''ஜீவன் எமபெருமானைப் பற்றுமபோது எங்ஙனம் பிராட்டியாரை முன்னிட்டுப் பற்றுகின்றனனோ, அங்ஙனமே, எம்பெருமானும் ஒரு சேதனனை மேல் விழுந்து ஏற்றுககொளளுமபோதும், பிராட்டியாரையோ, அல்லது, பிராட்டியார் ஸ்தாநத்தில் உள்ள ஒரு பாகவதோததமனையோ, முன்னிட்டே ஏற்றுக் கொள்கின்றான்'' என்பதும் ஒர் உயரிய உணமையாகும்

இம்முறையை, இந்த இராமயணத்தில் பல இடங்களில் நாம் காணலாகும். எங்கே? என்னில், கூறுதும்.

ஸீதாபிராட்டியாரை முன்னிட்டு, ச்ருங்கி பேர புரத்தில் குகனை ஏற்றுக்கொண் டிருத்தலை, நாம் காணலாம் :

"गुहेन सहितो रामः" (குஹேந ஸஹிதோ ராம:) என்னும் வாக்கியம் இங்குக் காணத் தக்கது. இவ்வாக்கியத்தில், "குஹன் இராம பிரானோடு சேர்ந்தனன்" என்று கூறப் பெற் றிலது; "இராமபிரான் குஹன் இருக்குமிடம் எழுந்தருளி அக்குஹனோடு சேர்ந்தனன்" என்றே கூறப் பெற்றுள்து. இதனால், எம் பெருமான், சேதனனை அவனிருக்குமிடம் எழுந்தருளி மேல் விழுந்து ஏற்றுக் கொள்கி றான்' என்பது தெளிவு.

இங்ஙனம் ஏற்றுக் கொள்ளும் போது, 'ஸீதாபிராட்டியாரை முன்னிட்டே ஏற்றுக் கொண்டனன், இராமபிரான்' என்பதை திருமங்கை மன்னன், "மாழை மான் மட நோக்கி" என்னும் வாக்கியத்தினால் அருளிச் செய்திருக்கிறார் ; காணலாம்.

இந்தக் குஹன் சரிதம் போன்றே, இவ் விபீஷணன் சரிதமும் உள்ளது. "विभोषणेनाशु जगाम सङ्गमम्" (விபீஷணே நாசு ஜகாம ஸங்கமம்) என்பது இங்கே வாக்கியம், இவ் வாக்கியத்திலும் இராமபிரான் விபீஷண னோடு சேர்ந்ததாகவே கூறப் பெற்றுள்ளது. இங்கு ஸீதாபிராட்டியார் ஸ்தாநத்திலுள்ள ஸுக்ரீவனை முன்னிட்டு விபீஷணனை இராம பிரான் ஏற்றுக் கொண்ட இவ்வுண்மை, "ஆநயைனம் ஹரிச்ரேஷ்ட" என்னும் வார்த் தையில் தெளிவு.

ஆனால், "ஜீவாத்மா எம்பெருமானைப் பற்றும்போது, தான், குற்றக்கடலாயிருக் கின்றமையின், பிராட்டியாரை முன்னிடு கிறது, அக்குற்றங்களைப் பொறுத்தற்கு என் னலாம். எம்பெருமான் சேதனனைத் தனக்குத் காக்கத் தக்கவனாகக் கருதி, மேல் விழுந்து ஏற்றுக்கொள்ளும் போது பிராட்டி யாரையோ, அல்லது அந்த ஸ்தாநத்தில் உள்ள ஒரு பாகவதோத்தமனையோ, முன்னிடு தல், எப்பயனைக் கருதியோ? இவ் எம்பெரு மானுக்குக் குற்றம் சிறிதும் இல்லையன்றோ ?" எனச்சிலர் இங்கு ஐயமுறக் கூடும்.

இதின் பரிஹாரம் :

எம்பெருமானுக்கும் குற்றம் உண்டு; ஆக் குற்றம் யாதோ? எனில், எம்பெருமானுக்கும் சேதனனுக்கும் உள்ள தொடர்பு என்றும் உள்ளது; ஒழிக்க ஒழியாதது. இவ்வாறான தொடர்பையும், தன்னுடைய நீர்மைக் குணங்களையும் இது வரையில் பாராது, இச் சேதனன் செய்த குற்றங்களையே கண்டு, இவனை விலக்கி ஸம்ஸாரத்தில் வைத்திருந் தானதலின், இப்போது மேல் விழுந்து ஏற்றுக் கொள்பவனாயிருந்தும், இவ் எம்பெருமானை இச்சேதனன் வெறுத்து விலகக்கூடுமன்றோ ? இவ்வாறு விலகாது இச்சேதனன் தன் வயத் திலே வரவேண்டி எம்பெருமானுக்கும் பிராட் டியாரையோ அவர் ஸ்தாநத்தில் உள்ள வரையோ முன்னிடுதல் இன்றியமையாத தாம்.

இங்கு, "இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடும் என்னுமிடம் அபயப்ர தானத் திலும் காணலாம். இருவர் முன்னிடுகிறதும் தந்தாம் குற்றங்களைச் சமிப்பிக் கைக்காக" என்னும் பிள்ளைலோகாசார்யர் திருவாக்கு அனுபவிக்கத் தக்கது.

இவ்வாறு இராமபிரான் விபிஷணனை நேரே ஏற்றுக் கொள்ளாது, 'ஸுக்ரீவனை அழைத்து வா' என்று அருளிச் செய்திருப்ப தற்கு, பல உண்மைகளைக் கண்டோம்.

இவ்விடத்து, ஸுக்ரீவன் இராமபிரான் நியமனப்படி அழைத்து வர விபீஷணனும் வந்து, அவ் இராமனைக் கிட்டி, வணங்கி வாழ்ந்து போனான் என்பது சரித்திர உண்மை. இங்கு, எம்பெருமானாகிய தருமம் நிலை நிறுத்தப் பட்டிருத்தலையும் கண்டோமல்லவா?

ஆக, "திருமகள் கொழுநனான எம்பெரு மான், இவ்வுலகில் செய்தருளின திரு அவதா

ரங்களுள் இராமாவதாரம் மிகச் சிறந்தது'' என்பதும், ''அங்ஙனம் அவ் எம்பெருமான் திருவவதாரம் செய்த போது, அவனைக் கூறும் வேதமும், வால்மீகி முனிவனிடமிருந்து இராமாயணமாகத் திரு அவதாரம் செய்திருக்கிறது'' என்பதும், ''அந்த இராமாயணம் மிக்க சிறப்பு பெற்றுள்ளது'' எனபதும், ''வீடு பேற்றை விரும்புகின்றவன் அவசியம் அறிய வேண்டும் பொருள் ஐந்து; அவை பரமாத்மா, ஜீவாத்மா, உபேயம், விரோதி, உபாயம் என்பன'' என்பதும், ''நாராயணன் பரமாத்மா, ''அப்பரமாத்மாவிற்குச் சேஷமாயும் பரதந்திரமாயும் இருப்பவன் ஜீவன்'' ''அப்பரமன் திருவுள்ளம் உவக்குமாறு அடிமை செய்தலே வீடுபேறு என்னும் உபேயம் 'அப்பேற்றை இதுவரையில் இந்த ஜீவன் அடையப் பெறாது தடை செய்யும் அஜ்ஞானம் முதலியன விரோதி' 'இவ்விரோதி போவதற்குத் தக்க ஸாதனம் பக்தி ப்ரபத்திகள்' என்று வேதாந்தம் கூறுகின்றது'' என்பதும், ''வேதத்தின் திரு அவதாரமான இராமாயணமும், வேதாந்தம் கூறுகின்றவாறு ஐம்பொருளையும் நன்கு விளக்கிக் கூறுகின்றது'' என்பதும், ''வேதாந்தம் மாத்திரம், தான் மிகச் சிறந்த பிரமாணமாயிருந்தும், இவ் ஐம்பொருளையும் கலக்கம் சிறிதும் இன்றி அறிவிக்க மாட்டாதாதலின், அவ்வேதாந்தம், மீமாம்ஸா சாஸ்திரம், இதிஹாஸமான இராமாயணம் இவற்றின் உதவியை விரும்புகினறது'' என்பதும் ''மீமாம்ஸா சாஸ்திரம் செய்யும் உதவி சிறந்ததாயிருந்தும், மேதாவிகளுக்கே அது பயன்படும்'' என்பதும், ''இராமாயணம், பெண்ணுக்கும் பேதைக்கும் விளங்குமாறு, நன்கு உதவி புரிகின்றது'' என்பதும், 'இவ் இராமாயணம் மேற் கூறிய ஐம்பொருளையும் நன்கு விளக்கிக் கூறுகின்றதாயிருப்பினும், சரணாகதி என்னும் உபாயத்தையே விளக்கிக் கூறுவதில் அது மிக்க நோக்குடையது'' என்பதும், ''இதனாலேயே 'சரணாகதி சாஸ்திரம்' என இராமாயணம் பெயர் பெற்றிருக்கிறது'' என்பதும், ''சரணாகதி தருமத்தைப் பற்றிய பல உண்மைகளை இராமாயணம் அந்த அந்த இடத்தில் விரிவாகவும், தெளிவாகவும், அழகாகவும் கூறுகிறது'' என்பதும், இக்கட்டுரையின் பலபகுதிகளிலும் அறியக்கிடக்கின்ற ஸாரப் பொருள்கள் என விளங்குகின்றன அல்லவா? விரிவஞ்சி நிற்கிறோம்.

